ரூ: 10·

ஸ்ரீ

# நாலடியார்

மூலமும்

சங்கசிந்தாமணி ஆசிரியரும்

அகநானூற்றுரைப் பதிப்பாசிரியருமான

## வே. இராஜகோபாலையங்கார்

எழுதிய உரையும்



சென்னை: மயிலாப்பூர்

**கம்பர் விலாஸம்**

ஸ்ரீ போதனஷ் பிரதிஷ்டை

ரூ. 1-8

ஸ்ரீ:

# இப்புத்தகத்தில் அடங்கியவை







ஸ்ரீ :

# சோதனைப் பத்திரம்



| பக்கம் | வரி | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 29 | 17 | கிதை | சிதை |
| 41 | 11 | கூரைமசே | கூரைசசே |
| 43 | 4 | விடை | விட |
| ,, | 14 | வறு | யறு |
| 47 | 7 | பறமபபயி | பறயபபபயி |
| 50 | 3 | இறநத | சிறநத |
| 52 | 20 | மிலமொண | மிலமெமண |
| 54 | 8 | யுறம | யுறழ |
| 58 | 6 | கணமரபி | கணமாவி |
| 106 | 22 | உடமமை | உடமபை |
| 121 | 10 | உணடவ | உணட/வ |
| 131 | 7 | றளாநத | றளாத |
| 139 | 2 | செமம | சமம |
| 177 | 15 | மநத | மாநத |
| 189 | 18 | காணண | கணண |



ஸ்ரீ:

# முகவுரை



தமிழ் நன்மக்களால் மேற்கணக்கு கீழ்க்கணக்கு என்று பாகுபடுத்துக் கொள்ளப்பெற்ற பனுவல்வகையுள் நாலடியார் என்னும் இந்நூல் பிறகூறிய கீழ்க்கணக்கு வகையினுள் ஒன்று. கீழ்க்கணக்கு நூல்களாவன. நாலடி, நான்மணிக்கடிகை, இனியதுநாற்பது, இன்னாநாற்பது, கார்நாற்பது, களவழிநாற்பது, ஐந்திணையைம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, கைந்நிலை என்ற பதினெட்டுமாம் இதனை,

> "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
> பால்கடுகங் கோவை பழமொழி—மாமூலம்
> மிந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பதூஉங்
> கைந்நிலையு மாங்கீழ்க் கணக்கு"

என்பதனால் அறிக இதனுள் 'நானாற்பது ஐந்திணை என்பதனை நான்கு நாற்பது நான்கு ஐந்திணை எனக் கொள்க. நான்கு நாற்பதாவன இனியது, இன்னா, கார், களவழி என்ற நாற்பதுகள். நாலைந்திணையாவன ஐந்திணையைம்பது முதலாகத் திணைமாலை நூற்றைம்பது

ஈறாகவுள்ள நான்குமாம். கீழ்க்கணக்கு எனப்படுவது, ஐம்பது முதலாக ஐந்நூறு இறுதியாக வுள்ள பாக்களை யுடையதாய், அறம் பொருள் இன்பங்களை விஷயமாகக் கொண்டு வெண்பா என்ற ஒரு வகைப்பாவால் ஆக்கப் படுவது. இதனை,

> "அகவலும் கலிப்பா வும்பரி பாடலும்
> பதிற்றைந் தாதி பதிற்றைம் பீறா
> மிகுத்துடன் றொகுப்பது மேற்கணக் கெனவும்
> வெள்ளைத் தொகையும் அவ்வகை யெண்பெறின
> எள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே"

எனவும்

> "அடிநிமி ரில்லாச் செய்யுட் டொகுதி
> அறம்பொரு ளின்ப மடுக்கி யவ்வத்
> திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்"

எனவும் வரும் பன்னிருபாட்டியற் சூத்திரங்களா னுணர்க. இவ்வாறு இதற்குப் பாவின் வரையறையும் எண்ணின் வரையறையும் கூறினாராயினும், சிறுபான்மை வெண்பாவினா லன்றி, அதன் இனமான வெண்செந்துறையும் வருமெனவும், ஐம்பதிற் குறைந்து நாற்பதிலும் ஐந் நூற்றின் மிக்கு ஆயிரத்து முந்நூற்று முப்பதிலும் இயலு மெனவும் கொள்க.

> "ஆகலி யுலகத்து மக்கட் கெல்லாம்
> ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை"

என வெண் செந்துறைப்பா முதுமொழிக் காஞ்சி யின் வந்தது. இனியது, இன்னா, கார், களவழி என்ற நான்கும் நாற்பது நாற்பது வெண்பாக்களான் வந்தன. திருக்குறள் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்வெண் பாவான் வந்தது.

இப்பனுவல்களுள் அறத்தையே முதன்மையாகக் கொண்டு இயலுவனவும், பொருளையே தலைமையாகக் கொண்டு விளங்குவனவும், இன்பத்தையே சிறப்பாகக் கொண்டு திகழுவனவும் உள. கார்நாற்பதும் நாலு ஐந்திணைகளும் கைந்நிலையும் இன்பம் ஒன்றனையே விஷயமாக உடையன, களவழிநாற்பது பொருள் ஒன்றையே குறித்து இயலுவது; நாலடி, நான்மணி, இனியது, இன்னா, முப்பால், கடுகம், கோவை, பழமொழி, மாமூலம், காஞ்சி, ஏலாதி என்ற பதினொன்றும் அறத்தை முதன்மையாகக்கொண்டு சிறப்பன. இப்பதினொரு நூலுள்ளும் ஆன்றோரால் 'நாலு மிரண்டுஞ் சொல்லுக் குறுதி' எனப் பாராட்டிப் புகழ்பெறுவன நாலடியாரும், திருக்குறளுமேயாம். இவ்விரண்டனுள்ளும் நாலடியார் வைராக்கியத்தைப் போதிப்பதிலும் உலக அனுபவத்தினைப்பொருத்தி உதாரணங் காட்டிக் கற்போர் நெஞ்சம் தீயவழியிற் செல்லாவண்ணம் கழறி நிறுத்துவதிலும் திருக்குறளினுஞ் சாலச்சிறந்ததெனக் கூசாமற் கூறலாம்.

அவையறிதல் என்னும் அதிகாரத்து, சொற்களின் பொருளினை அறிதல் மிக அரிது, அதனை அறிந்தவனே அவைக்கு நாயகமாவான் என்னும் கருத்தடங்கிய,

'பெறுவது கொள்பவர் தோள்போல நெறிப்பட்டுக்
கற்பவர்க் கெல்லாம் எளியநூல்—மற்றம்
முறிபுரை மேனிய ருள்ளம்போன் றியார்க்கும்
அறிதற் கரிய பொருள்'

என்னும் பாட்டினை நோக்குந்தோறும் கற்றோர் நெஞ்சம் களிக்காதிராது. பேதைமை என்னும் அதிகாரத்து,

'கற்றனவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும்—தானுரைப்பின்

மைததுனா பலகி மருநதிற றணியாத
பிததனென றெளளபபடும'

எனற பாடலும அமிழதினுமினியதே யனறோ! கீழமை எனனும அதிகாரததது,

காழாய கொணடு கசடறறா தஞசாரற
றூழாது போவாம எனவுரைபபிற—கீழதான
உறஙகுவாம எனறெழுநது போமாமஃ தனறி
பறஙகுமா மறறொனறு சூழநது'

எனவும

'பொறகலத தூடடிப புறநதரினும நாயபிறா
பசசிற கிமையாது பாாததிருககு—மசசீா
பெருமை யுடைததாக கொளினுமகீழ செயயும
கருமஙகள வேறு படும'

எனவும்,

'மைதீா பசுமபொனமேல மாணட மணியழுததிச
செபபத தெனினும செருப்புததன காறகேயாம
எபதிய செலவதத ராயினும கீழகளைச
செயதொழிலாற காணப படும'

எனவும உளள பாடலகளும கறறோா உளளததிளைக கவராதிரா இனனும கூடாநட்பு, அறிவினமை, கயமை, பொதுமகளிா, கறபுடை மகளிா எனனும அதிகாரஙகளுளளும பலபல பாடலகள நாவினை விடடு அகலாது இனிததலை இநநூல கறபோா எளிதிலுணாவா.

பிறகு இநநூல மறறப பதினெண கீழககணககு நூலகளைபபோல ஓா ஆசிரியாற பாடபபெறற தொனறனறுகும இஃது,

'எணபெருங குனறத தெணணா யிரமிருடி'

எனறும,

'மன்னன் வழுதியர் கோன்'

என்றும் தொடங்கும் வெண்பாக்களான் உணரப்படும்,

இந்நூலில் ஐம்பத்திரண்டு பாக்களில், ஆடூஉ முன்னிலைகளும், ஆறுபாக்களில் மகடூஉ முன்னிலைகளும் பயின்றுள்ளன. அவ்வாடூஉ முன்னிலைகளுள் ஊர என மருத நிலத்தலைவனைக் ஓரிடத்தும், வரைநாட மலைநாட குன்றநாட சாரல்நாட கானகநாட எனக் குறிஞ்சிநிலத் தலைவனைக் முப்பத்திரண்டிடத்தும், கடற்சேர்ப்ப சேர்ப்ப எனநெய்தல்நிலத் தலைவனைப் பதினெட்டிடத்தும், 'ஐய' எனப்பொதுவாக ஓரிடத்தும் பயின்றுள்ளன. இவற்றால் இம்முன்னிலைகட்கு விஷயமாக நிற்பவன் மலைவளனும் கடல்வளனும் மிகுதியாக வுடையவன் என்றும் நெல்வளன் சிறுபான்மை யுடையான் என்றும் ஊகித்தற்கிட னாகின்றது. அம்மலைவளன் கடல்வளன்களுள்,

'மடிதிரை தந்திட்ட வான்கதிர் முத்தம்
கடுவிசை நாவாய் கரையலைக்கும் சேர்ப்ப' (224)

எனவும்,

'கனமணி
முத்தோ டிமைக்கும் முழங்குவரித் தண்சேர்ப்ப' (146)

எனவும்

'சந்தன நீள்சோலைச் சாரல் மலைநாட' (234)

எனவும் பயின்றுள்ளன ஆராயத் தக்கன இவற்றுக்கு, முத்துக்களை அலைகள் கரையிலே கொணர்ந்து சேர்க்க, அவற்றை விசையாக வரும் கப்பல்கள் அலைத்து விடுகின்ற கடற்கரையை யுடையாய் என்பதும், மிக்க மணியோடும், முத்தோடும் விளங்கும் ஒலிக்கின்ற கடலடுத்த குளிர்ந்த சேர்ப்ப என்பதும், சந்தனமரங்கள்

மிகவுள்ள சோலைகளையுடைய மலைநாடு என்பதும் பொருளாம். ஆகவே, சந்தனம் முத்து என்ற இவ்விரு வளங்களையும் உடைய நாட்டை இந்நூலாசிரியர் முன்னிலைப் படுத்துள்ளார் என்பது புலனாம். அந்தக் கையநாடு எஃதென்று ஆராயுமிடத்து, சீதாபிராட்டியாரைத் தேடுமாறு வானரவீரர்களைத் தென்திசையிற் செல்லப் பணித்த சுக்கிரீவன் பாண்டிநாட்டினைக் குறிக்கும்போது மணிமுத்துக்களால் அலங்கரிக்கப்பெற்ற கவாடத்தை யுடையது அந்நாடு என்று வருணிப்பதாக வால்மீகி பகவான் கூறுவதனின்றும், மிகப் பழைய காலந்தொட்டே முத்துக்கள் மலிந்த நாடு பாண்டி நாடென்பது அறியலாகும். கடைச்சங்க காலத்திலும்கூட அந்நாடு முத்திற்கும் சந்தனத்திற்கும் பெயர்போனதென்பது,

> ‘தென்கடற் பிறந்த முத்தின் ஆரமும்
> முனைதிறை கொடுக்கும் துப்பிற் றன்மலைத்
> தெறலரு மரபிற் கடவுட் பேணிக்
> குறவர் தந்த சந்தின் ஆரமும்
> இருபே ராரமும் எழில்பெற அணியும்
> திருவீழ் மார்பிற் றென்னவன்’ (அகம் 13)

எனவும்,

> ‘நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளிய
> வரைய சாந்தமும் திரைய முத்தமும்
> இமிழ்குரல் முரசம் மூன்றுடன் ஆளும்
> தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே’ (புறம் 58)

எனவும் கூறப்படுதலான் அறியப்படும்

இனி, பூங்குன்றநாடு என இந்நூல் 128, 212 ஆம் பாடல்களில் முன்னிலைப் படுத்துள்ளவனும் ஈண்டு ஆராயற்பாலன். பூங்குன்றம் என்ற நாடு பண்டைச்

சங்க காலந்தொட்டே கேட்கப்படும் ஒரு நாடாகும். கணியன் பூங்குன்றனார் என்றொரு சங்கப் புலவர் நற்றிணையிலும் புறத்திலும் பாடிய ஆசிரியருள் ஒருவ ராவர். இவர் ஊரைத் தலைமையாகக் கொண்ட நாடு ஒன்றினுக்கு அரசனை இந்நூலாசிரியர் முன்னிலைப் படுத்துப் பாடியுள்ளார். இப்பூங்குன்றம் இப்போது மதுரை ஜில்லாவில் உள்ளதெனத் தெரிதலால் பூங் குன்ற நாடன் அவன் பாண்டியனே எனத் துணியப் படும். பெருமுத்தரையர் என்ற ஒருவர் இந்நூல் 200, 296 ஆம் பாடல்களிற் புகழ்ப் பெறுகின்றார். இவரைப் பலரும் பலபடியாகக் கூறுவராயினும், இவரும் பூங்குன்ற நாட என்றும் 'முத்தோடிமைக்கும் முழங்குவரித் தண் சேர்ப்ப' என்றும் 'முத்தம், நாவாய் கரையலைக்கும் சேர்ப்ப' என்றும் முன்னிலைப்படுத்துக் கூறப்படுகின்ற வரும் ஒருவரே எனத் துணிதற்கு இடனாகின்றது.

இனி இந்நூலின் காலத்தினைப் பற்றி நவீன நூலுணர்ச்சியாளர்கள் பலவாறு கூறுவராயினும், இது சங்க மருவிய மேற்கணக்கினோடு ஒரு காலத்தது என்று தமிழ் நன்மக்களாற் கொள்ளப்பட்டதாதலின் அதற்கு முரணான எந்தக்கோட்பாட்டினையும் நல்லறிவாளர் செவி யில் ஏற்றுக்கொள்ளாரென்பதே துணிபு. தொல்காப்பி யத்திற்கு உரையிட்ட இளம்பூரண அடிகள், பேராசிரியர், கல்லாடர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்கள் தம் உரையகத்தே எட்டுத்தொகை நூல்களினின்றும் மேற்கோள்கள் காட்டுவது போல இந்நாலடியாரினின்றும் மேற்கோள்கள் காட்டிச் செல்வதனை. அன்னார் இதனைப் பிரமாணங்காட்டத் தக்கதொன்னூலுள் ஒன்று என்று கொண்டாரென் பது வெளிப்படை 'நாற்றதொடுத் தீரக்கிலென்',

'சூட்டும் கொழுவும்', 'மாணட குணத்தொடு', 'கடியெனக்கேட்டும்' என்று தொடங்கும் பாடல்களை நோக்கும் போது, பௌத்த ஜைனமதக் கொள்கைகள் தமிழ்நாட்டில் ஊன்றிப் பரவிய காலத்தே அஃதாவது மணிமேகலை சரிதை தோன்றிய காலத்தே இந்நூல் ஆக்கப்பட்டிருக்கலாம் என ஊகித்தற்கிடனாகின்றது.

மற்றும், இந்நூலின் 'மேன்மக்கள்' என்னும் அதிகாரத்துக் காணப்படும்,

'உடைய, பிலந்தலைப் பட்டது போலாதே நல்ல
குலந்தலைப் பட்ட விடத்து'

என்ற அடிகளையும் ஆராய்வோம் இவற்றின் பொருள் 'ஸகல ஐசுவரியமும் உடைய குகையை ஒருவன் பெற்றதுபோல அல்லவா நல்லகுலத்துப் பிறந்த மேன்மக்களை ஒருவன் நட்புக்கொண்டானாயின்' எனபதாம் இவ்வுவமையைக் கவி வாளாதே கூறிப்போந்தார் என்று கருதியொழியாது, ஏதோ ஒருபழைய செய்தியை உட்கொண்டே இவவாறு கூறியிருத்தல் வேண்டும் எனக் கொள்ளின், மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியுள்ளே கூறிய,

'தென்புல மருங்கின் விண்டு நிறைய
வாணன் வைத்த விழுநிதி'

என்ற அடிகளிற் காணப்படும் ஒரு பழஞ்செயதி நம ஞாபகத்துக்கு வருகின்றது. இவ்வடிகளுக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'தென்திசை நிலத்தின் மலைகளெல்லாம் நிறையும்படி வாணன் என்னும் சூரன் வைத்த சீரிய பொருட்டிரள்'என்று உரை கூறிப்போந்தார். மாங்குடி மருதனார் காலத்துப் பெருநிதி மலைக்குகைகளில் சேமிக்கப்பெற்றிருந்த இத்தகைய செய்தி ஒன்று தமிழ் நாட்

டிற பெருவழககாக இருநதது போலவே இநநூலிற செய்யுள் செய்த புலவர் காலததும இச்செய்தி பெரு வழககாக இருநததெனக கொளவதறகுத் தடையிலலை, மறறும, 'வலமபடு முரசிற சேர லாதன.........நனனகர மாநதை முறறத தொனனூா, பணிதிறை தநத பாடுசா னனகலம, பொனசெய் பாவை வயிரமொ டாமபல, ஒனறுவாய நிறையக குவைஇ யினறவண், நிலநதினத துறநதநிதியம' எனறும, 'நனனனுதியனருஙகடிபபாழித, தொனமுதிர்வேளிா ஓம்பினா வைததை, பொன' எனறும, 'அணஙகுடை வரைபபிற பாழி யாஙகண, வேண்முதிா மாககள வியனகாக கரநத, அருஙகல வெறுககை' என றும, 'பலபுகழ நிறைநத வெபோா நநதா, சீாமிகு பாட லிக குழீஇக கஙகை, நீாமுதற கரநத நிதியம' எனறும (அகம 127, 258, 265, 372) சஙக நூலகளிற பெருநிதி நகரங்களிலும, யாறறின அடியிலும சேமிககப பெறறி ருநத வரலாறு பேசபபடுதலபோல, இநநூலிலும பேசப படுதலால, இது சஙககாலததது நூலெனறுதல, அதை ஒட்டிய நூலெனறுதல கொளள யாதோரிழுககு மிலலை எனக.

இநதிரனை இறபபச சிறநத தெயவமாகக கொள ளும ஜைன பௌததத மத வழககுபபறறி இநநூலிலும,

'சககரச செலவம பெறினும விழுமியோா
எககாலும சொலலாா மிகுதிசசொல—எககாலும
முநதிரிமேற காணி மிகுவதேற கீழதனனை
இநதிரனு வெணணி விடும'

எனறும

'அஙகண விசுமபின அமரா தொழபபடும
செஙகண்மா லாயினும ஆகமன—தஙகைக

கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரண்ணா
விடுப்பாதம் கையாற் றொழுது'

என்றும் இந்திரன் உவமை கூறப்படுகிறான். இந்திரனை யன்றி அவன்தேவியான இந்திராணியும் இறப்பச்சிறந்த தலைவிக்கு உவமையாக

அரும்பெறற் கற்பின் அயிராணி யன்ன
பெரும்பெயர்ப் பெண்டி ரெனினும்—விரும்பிப்
பெறுநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணும்
நறுநுதலாள் நன்மைத் துணை'

என்று பாடப் பெற்றனள் நச்சினார்க்கினியரும் சிந்தா மணியுரையில் இந்நூலிலுள்ள 'சிறுகா பெருகா முறை பிறழ்ந்து வாரா' என்ற பாடலைக் காட்டி, இதன் ஆசிரியர் ஜைன சமயத்தார் என்று கூறினர். இந்நூ லினுக்குப் பால் இயல்கள் வகுத்த பதுமனாரும் "எட் டுமலைச் சாரலில் சமண முனிவர்கள் எண்ணாயிரவர் வசித்து வந்தார்கள் அவர்கள் தனித்தனி ஒவ்வொரு வெண்பாப் பாட, . . . . . அவற்றுள் ஓரே விஷயத் தினை ஒவ்வொரு கருத்தால் தனித்தனி கூறும் நானூறு பாடல்களைப் பொறுக்கிச் சேர்த்து . . . முடித் தாம்'' எனக் கூறினர் ஆகவே சமண முனிவர் பலரால் இந்நூல் பாடப் பெற்றதென்னும் கொள்கை வலியுறுகின்றது

இந்நூலினை யான் ஓரிருபது வருடங்கட்குமுன் நற்றிணை யுரையாசிரியரும் என் மனத்தே யாண்டு முறைந்து என்னை அநுக்ரஹித்து வருபவருமான காலஞ் சென்ற பின்னத்தூர் அ. நாராயணஸ்வாமி ஐயரவர்கள் பால் பாடங்கேட்டு வந்த காலத்து, அப்பெரியாரிடத் திருந்த இந்நூலின் இரண்டு ஏட்டுப் பிரதிகளுள் பல பல அரிய பாடபேதங்களும் உரை நயங்களும்

காணப்பட, அவற்றினை அவர்கள் ஆணையின்படி நான் என் புத்தகத்திற் குறித்துக் கொண்டிருந்தேன். அவ் விரண்டு ஏட்டுப் பிரதிகளுள் ஒன்றில் மாத்திரம் பதும ஞா விருத்தி என்று வரையப்பெற்றிருந்தது மற்றொன்றி லுள்ள உரைப்பகுதியோ சிற்சில பாடல்களுக்கு முன் னைய ஏட்டிலுள்ள உரைக்குச் சிறிது மாறுபட்டிருந்தது இவ்வுரையினை 'என்பது ஒரு பழைய உரை' என்று இந் நூற் பதிப்பிற் காட்டியிருக்கிறேன் இப் பிறகூறிய உரையோடு பெரும்பாலும் ஒத்திருந்தது சென்னை அடையாற்றுக் கையெழுத்துப் புத்தகசாலையிலுள்ள ஒரு பிரதி இப்பிரதி அவ்வடையாற்றுக் கலாசாலைத் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் அ கோபாலையரவர்கள் முயற்சியாற் பெற்றது இப்பெரு நன்றி செய்த அவர் களை யான் என்றும் மறவேன்

இவ்விருவகை யுரைகளையும் நோக்கி மகிழ்ந்த என் நண்பரிற் சிலர் இந்நூலை இவ்வுரைகளுடன் அச்சிற் பதிப்பித்தல் நலமெனப் பலகாலும் தூண்டி வந்ததோடு, அச்சிடற்கு வேண்டிய உதவிகளும் செய்வதாக வாக் களித்தமையால் துணிவுகொண்டு இதனை அச்சிட ஆரம் பித்தேன் இதனிடையில் சென்னை இராஜாங்கக் கை யெழுத்துப் புத்தகசாலைப் பிரதி ஒன்று கிடைக்கப் பெற்று, என் சிற்றறிவிற்கு எட்டியமட்டும் மூலத்தையும் உரையையும் ஒருவாறு சோதித்துச் சுருக்கமான உரைக் குறிப்புக்களோடும், நூலாராய்ச்சிக்கு இன்றியமையாத அரும்பத அகராதி முதலியவற்றோடும் அச்சிட்டு நிறை வேற்றினேன். இவ்வுரைகளின் சிறப்பினை இப்புத்த கத்தில் ஆங்காங்கு நோக்கி மகிழ்க

இந்நூல் அச்சாகுங் காலத்து எனக்கு நேர்ந்த பல ஐயங்களைத் தெளிவித்தும் அப்போதைக் கப்போது எவ

வளவு ஆயிற்று என்று அன்புடன் உசாவியும் என்னை ஊக்கியருளிய சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதர் பிரஹ்ம ஸ்ரீ இ. வை. அநந்தராமையரவர்கள் திருவடிகளையும், யான் வேண்டியவண்ணம் உரிய பல திருத்தங்களைச் செய்தும் அச்சுப்பிரதியிற் பிழைகள் மலியாவண்ணம் ஊக்கத்துடன் சோதித்தும் அருள் புரிந்த சென்னை லெக்ஸிகன் ஆபீஸ் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீ உ. வே. மு. இராகவையங்கார் திருவடிகளையும் என்றும் மறவாத கடப்பாடுடையேன்.

இந்நூற் பதிப்பின்கண் என் அறியாமையாலும் நோய்காரணமாக எழுந்த அயாச்சியாலும் மனுஷ்ய ஸகாயமின்மையாலும் பல பிழைகள் காணப்படலாம். அறிஞர்கள் அவற்றினைப் பொறுத்துக் கொள்வார்களென்று நம்புகிறேன்.

மற்றுமிவ்வாறே திரிகடுகம் முதலிய நீதி நூல்களையும் பழைய உரையோடும் குறிப்புக்களோடும் பதிப்பிக்க விருக்கிறேன். இத்துறையிற் பிரவர்த்திக்குமாறு என்னைத் தூண்டிவரும் ஸர்வேச்வரன் அந்நூல்களையும் முற்றுவித்தருள்வன் என அவன் திருவடித் தாமரைகளை அநவரதம் உபாஸிக்கின்றேன்.

கயபாவிலாஸம்
மயிலாப்பூர்
ரக்தாக்ஷி௵ பங்குனி௴

இங்ஙனம்,
வே. இராஜகோபாலையங்கார்

ஸ்ரீ:

# இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய நூலின்பெயா முதலியனவும் அவைகளின் குறியீடுகளும்



அகநானூறறு உரைகாரா (அகம உரை)
அகநானூறு (அகம)
அதிகாரம (அதி)
ஆசாரககோவை (ஆசார)
ஆசிரியா நலலநதுவஞா (அநதுவன
இளமபூரணா (இளம)
இறையனா களவியல (இறை களவு)
இனியது நாறபது (இனியது)
ஏலாதி (ஏலா)
கமபராமாயணம (கமப)
  ஆற்றுபபடலம (ஆறறு)
  நகரபபடலம (நகர)
கலிததொகை (கலி)
சாரஙகதரன கரிதை (சாரஙக)
சிலபபதிகாரம (சிலப)
  மஙகலவாழததுபபாடடு (மஙகல)
  மனையறம படுததகாதை (மனையறம)
  அறஙகேறறுகாதை (அரஙகு)
  இநதிரவிழவூரெடுதத காதை (இநதிர)
  கடலாடுகாதை (கடலா)
  கானலவரி (கானல)
  கனாததிற முரைததகாதை (கனா)
  நாடுகாணகாதை (நாடு)
  ஊாகாணகாதை (ஊாகாண)
  கொலைக களககாதை (கொலை)
  துனபமாலை (துனப)
  ஊாசூழவரி (ஊாசூழ)
  அருமபதவுரைகாரா (அருமபத)
  அடியாாககுநலலாா (அடி [யாா
சீவகசிநதாமணி (சிந)
சூததிரம (சூ)
சேனாவரையா (சேனா)
திரிகடுகம (திரி, திரிக)
திருககுறள (குறள)
திருககோவையாா (திருக, கோ [வை
திருவாயமொழி ஈடடுரை (திருவாய ஈடு)
தொலகாபபியம (தொல)
  எழுததிகாரம (எழுதது)
  சொலலதிகாரம (சொல)
  பொருளதிகாரம (பொருள)
  செயயுளியல (செயயுள)
நசசினாககினியா (நச)

நனனூல (நன )
உயிரீறறுபபுணரியல (உயிா)
நானமணிககடிகை (நானமணி)
பதிறறுபபதது (பதிற )
பதுமனா (பதுமன)
பரிபபெருமாள (பரிப)
பரிபாடல (பரி)
பரிமேலழகா (பரிமே)
பழமொழி (பழ)
பழைய உரை (ப உரை, ப உ)
பாடபேதம (பா)
பாயிரம (பாயி)
பிஙகலநிகணடு (பிஙகல)
வானவாதொகுதி (வானவா)
புறநானூறு (புறம)
புறபபொருள வெணபாமாலை (வெண மா)
பெருமபாணாறறுபபடை (பெருமபாண)
பேராசிரியா (பேரா )
மணிமேகலை (மணி)
மதுரைககாஞசி (மது, மதுரை)
மயிலைநாதா (மயிலை)
மோகவதைபபரணி (மோக )
வீரசோழியம (வீர )
அலஙகாரபபடலம (அலங)

ஸ்ரீ:

# நாலடியார் ஆராய்ச்சி

## 1 ஊர்வன விலங்கு முதலியன



## 2 மரம்புதல் முதலியன

காநதள, 283
கிடை, 360
குவளே, 44
கோஙகு, 223
சநதனம, 180
சாய, 389
சுரை, 315
தெஙகு, 216
நீலம, 374
பனே, 96
பாதிரி, 139
பெணணே, 216
பேயசசுரை, 149
மரையிலே, 354
முலலே, 45
விளவு, 261
வடடு, 264
வழுதுணே, 264
வேஙகை, 180
வேமபு, 112

4 ஒலிககருவி தொழிறகருவிகள

தணணம 6
துடி 388
நெயதறபறை 392
பிணபபறை 23
மணபபறை23
முரசு 100
உளி 355
குறடு 208
சுடடுககோல 208
முடடிகை 208
மூழை 321

5 சில விலங்குகளின் இயறகை

அனறில துணேபிரியாதெனபது
ஆமா நககிக கொலலுமெனபது
கடமா தொலேசசிய வேஙகை இடமபடி னுண்ணுதெனபது
தகா போா செயயுமெனபது
மலஙகு ஒருதலேயை மீனுககுப ஒரு தலேயைப பாமபுககும காடடிப பிழைதது ஓடிப போகுமெனபது
அரவு இடிககு அஞசுமெனபது
கோழி குபபையைக கிளறு மெனபது
நாகம விரியன பெடையோடு கூடின அறபஆயுளுள்ள நா கததிணேபபெறு மெனபது
நாய புறநதரப பெறினும ,எச சிறகு அவாவுமெனபது

6 பணடை மககளின வழககுககள

அலவனேககால முரிததுணடல
பனறிககுக கூழவாாததல
வெறியாட்டு எடுத்தல
பிணததை நாரிற் பிணிதது ஈாததல, பாாததவிடததிற போகடல
யாமையை உலேயிலிடடு அடுதல
யானேயைககொணடு போாக கெழல
யானேமீதேறி உலாபபோதல
புலவாயககுப பருமம அமைதது வையமூாதல



ஸ்ரீ:

# நாலடியார்

---

## மூலம்

கடவுள் வாழ்த்து

வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை — யாநிலஞ்
சென்னி யுறவணங்கிச் சேர்துமெம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று.

முதலாவது

# அறத்துப்பால்

## 1 துறவறவியல்

### (1) செல்வ நிலையாமை

அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும் — வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று 1

துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
வகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும் 2

யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரு — மேனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள 3

நின்றன நின்றன நில்லா வெனவுணர்ந்
தொன்றின வொன்றின வல்லே செயிற்செய்க
சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று. 4

என்னானு மொன்றுதங் கையுறப் பெற்றக்காற்
பின்னாவ தென்று பிடித்திரா — முன்னே
கொடுத்தா ருயப்போவர் கோடில்தீக் கூற்றந்
தொடுத்தாறு செல்லுஞ் சுரம். 5

இழைத்தநா ளெல்லை யிகவா பிழைத்தொரீஇக்
கூற்றங் குதித்துய்ந்தா ரீங்கில்லை — யாற்றப்
பெரும்பொருள் வைத்தீர் வழங்குமி னாளைத்
தழீஇந் தழீஇந் தண்ணம் படும். 6

தோற்றஞ்சால் ஞாயிறு நாழியா வைகலுங்
கூற்ற மளந்துநுந் நாளுண்ணும் — மாற்ற
வறஞ்செய் தருளுடையீ ராகுமின் யாரும்
பிறந்தும் பிறவாதா ரில். 7

செல்வர்யா மென்றுதாஞ் செல்வுழி யெண்ணாத
புல்லறி வாளர் பெருஞ்செல்வம் — மெல்லிற்
கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போற் றோன்றி
மருங்கறக் கெட்டு விடும். 8

உண்ணா னொளிநிறா னோங்குபுகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான் — கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
விழந்தானென் றெண்ணப் படும். 9

உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார் — கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட
வுய்த்தீட்டுந் தேனீக் கரி 10

## (2) இளமை நிலையாமை

நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார் — புரைதீரா
மன்னா விளமை மகிழ்ந்தாரே கோலூன்றி
யின்னாங் கெழுந்திருப் பார். 11

நட்புநா ரற்றன நல்லாரு மஃகினா
ரற்புத் தளையு மவிழ்ந்தன — வுட்காணாய்
வாழ்தலி னூதிய மென்னுண்டாம் வந்ததே
பாழ்கலத் தன்ன கலி. 12

சொற்றளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப்
பற்கழன்று பண்டம் பழிகாறு — மிற்செறிந்து
காம நெறிபடருங் கண்ணினார்க் கில்லையே
யேம நெறிபடரு மாறு. 13

தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றா
வீழா விறக்கு மிவண்மாட்டுங் — காழிலா
மம்மர்கொண் மாந்தர்க் கணங்காகுந் தன்கைக்கோ
லம்மனைக்கோ லாகிய ஞான்று. 14

எனக்குத்தா யாகியா ளென்னையீங் கிட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றாள் — டனக்குத்தா
யாகி யவளு மதுவானாற் றாயத்தாய்க்கொண்
டேகு மளித்திவ் வுலகு. 15

வெறியயர் வெங்களத்து வேன்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுள குண்டன்ன மன்னா மகிழ்ச்சி
யறிவுடை யாளர்க ணில. 16

பனிபடு சோலைப் பயன்மர மெல்லாங்
கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை — நனிபெரிதும்
வேற்கண்ண ளென்றிவளை வெஃகன்மின் மற்றிவளுங்
கோற்கண்ண ளாகுங் குனிந்து 17

பருவ மெனைத்துள பல்லின்பா லேனை
யிருசிகையு முண்டீரோ வென்று — வரிசையா
லுண்ணாட்டங் கொள்ளப் படுதலால் யாக்கைக்கோ
ளெண்ணா ரறிவுடை யார். 18

மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா
னற்கா யுதிர்தலு முண்டு 19

ஆட்பார்த் துழலு வருளில்கூற் றுண்மையாற்
றோட்கோப்புக் காலத்தாற் கொண்டுய்ம்மின் — பீட்பிதுக்கிப்
பிள்ளையைத் தாயலறக் கோடலான் மற்றதன்
கள்ளங் கடைப்பிடித்த னன்று 20

## (3) யாக்கை நிலையாமை

மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையார் — நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லா
லெஞ்சினா ரிவ்வுலகத் தில் 21

வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம்
வீழ்நாள் படாஅ தெழுதலால் — வாழ்நா
ளுலவாமு னொப்புர வாற்றுமின் யாரு
நிலவார் நிலமிசை மேல். 22

மனறந கறங்க மணப்பறை யாயின
வனறவற் காநகே பிணப்பறையாப — பின்றை
யொலிததலு முண்டாமென் றுயகதுபோ மாறே
வலிக்குமா மாணடார மனம. 23

சென்றே யெறிப வொருகால சிறுவரை
நின்றே யெறிப பறையினை — நனறேகாண
முககாலைக கொட்டினுண் மூடிததீக கொணடெழுவா
செததாரைச் சாவார சுமநது. 24

கணநகொணடு சுறறத்தார கலலென் றலறப
பிணநகொணடு காடடையபபாக கணடு — மணநகொண்டீண
டுணடுணடுண டெனனு முணாவினற சாறறுமே
டொண்டொணடொ டெனனுமப பறை. 25

நாறததொடுத தீரககிலெ னனறுயந தடககிலென
பாறததுழிப பெயயிலென பலலோர பழிககிலென
றோறறபையு ணினறு தொழிலறச செயதூட்டுந
கூததன புறபபட்டக கால 26

படுமழை மொககுளிற பலகாலுந தோனறிக
கெடுமிதோ யாககையென றெணணித — தடுமாறுந
தீபபேமயா மெனறுணருந திணணறி வாளரை
நோபபாராயார நீணிலததின மேல. 27

யாககையை யாபபுடைததாப பெறறவா தாமபெறற
யாககையா லாய பயனகொளக — யாககை
மலையாடு மஞசுபோற றோனறிமற றாங்கே
நிலையாது நீதது விடும 28

புனனுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
யினனினியே செய்க வறவினை — யினனினியே
நின்றா னிருநதான் கிடநதான்றன கேளலறச
சென்றா னெனபபடுத லான். 29

கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவரால் மாந்தர்கள் — வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து. 30

## (4) அறன்வலி யுறுத்தல்

அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப்
புகத்தாம் பெறாஅர் புறங்கடை பற்றி
மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத்
தவத்தாற் றவஞ்செய்யா தார். 31

ஆவாநா மாக்க நசைஇ யறமறந்து
போவாநா மென்னும் புலைநெஞ்சே — யோவாது
நின்றுஞற்றி வாழ்தி யெனினுநின் வாழ்நாள்கள்
சென்றன செய்வ துரை. 32

வினைப்பயன் வந்தக்கால் வெய்ய வுயிரா
மனத்தி னழியுமாம் பேதை — நினைத்ததனைத்
தொல்லைய தென்றுணர் வாரே தடுமாற்றத்
தெல்லை யிகந்தொருவு வார் 33

அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தாற்
பெரும்பயனு மாற்றவே கொள்க — கரும்பூர்ந்த
சாறுபோற் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோற் போகு முடம்பு. 34

கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார்
வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்காற் பரிவ திலர். 35

இன றுகொ லன றுகொ லென றுகொ லென்னாது
பின றையே நின றது கூற்றமென றெண்ணி
யொருவுமின தீயவை யொலலும வகையான
மருவுமின மாண்டா ரறம 36

மககளா லாய பெருமபயனு மாயுங்கா
லெததுணையு மாறறப பலவாற — றொகக
வுடமபிறகே யொபபுரவு செயதொழுகா துமபாக
கிடநதுணணப பணணப படும 37

உறகுந துணையதோ ராலமவித தீண்டி
யிறபப நிழறபயந தாஅங — கறபபயனுந
தானசிறி தாயினுந தககாரககப படடககால
வானசிறிதாப போரதது விடும 38

வைகலும் வைகல வரககணடு மஃதுணரா
வைகலும வைகலை வைகுமென றினபுறுவா
வைகலும வைகறறம வாழநாணமேல வைகுதல
வைகலை வைததுணரா தார 39

மான வருங்கல நீககி யிரவென னு
மீன விளிவினால வாழவேனமன — னீனததா
லூடடியக கணணு முறுதிசோந திவவுடமபு
நீடடிதது நிறகு மெனின 40

## (5) தூயதன்மை

மாககேழ் மடநலலா யென்றரறறுஞ சானறவா
நோககாரகொ னொய்யதோர புககிலலை — யாககைககோர
ரீசசிற கனனதோர தோலறினும வேணடுமே
காககை கடிவதோர கோல. 41

தோறபோர்வை மேலும் துளைபலவாய்ப பொயமமறைக்கு
மீபபோன்வ மாட்சித் துடம்பாலுன — மீபபோர்வை
பொய்மமறையாக் காமம புகலாது மறறதனைப
பைமமறியாப பாரககப படும். 42

தககோலந தினறு தலைநிறையப பூசசூடிப
பொய்ககோலஞ செய்ய வொழியுமே — யெககாலு
முண்டி வினையு ளுறைக்கு மெனபபெரியோர
கணடுகை விட்ட மயல. 43

தெண்ணீாக குவளை பொருகயல வேலெனறு
கணணிலபுன மாககள கவறற விடுவனே
வுண்ணீா களைநதககா லுஙகுருன றிடடனன
கணணீாமை கணடொழுகு வேன 44

முலலை முகைமுறுவல முததென றிவைபிதறறுங
கலலாபபுன மாககள கவறற விடுவனே
வெலலாருங காணப புறஙகாட டுதிாநதுகக
பலலெனபு கணடொழுகு வேன. 45

குடருங கொழுவுங குருதியு மெனபுந
தொடரு நரமபொடு தோலு — மிடையிடையே
வைதத தடியும வழும்புமா மறறிவற்று
ளெததிறததா ளீாஙகோதை யாள 46

[redacted]றி யுவாததகக வொனபது வாயபபுலனுங
கோதிக குழமபலைககுங கும்பததைப — பேதை
பெருநதோளி பெயவளா யெனனுமீப போாதத
கருநதோலாற கணவிளககப பட்டு 47

பண்ட மறியாா படுசாநதுங் கோதையுங
கொண்டுபா ராட்டுவாா கணடிலர்கொல — மண்டிப
பெடைசசேவல் வன்கழுகு போததிட்டுக் குததன்
முடைசசாகா டசசிற றுழி. 48

கழிநதா ரிடுதலை கண்டாாநெஞ் சுட்கக
குழிநதா ழநத கண்ணவாய்த தோனறி — யொழிநதாரைப
போறறி நெறிநின்மி னிறறிதன் பண்பெனறு
சாறறுங்கொல சாலச சிரிதது. 49

உயிரபோயார வெண்டலை யுட்கச் சிரிததுச
செயிரதீாககுஞ செமமாப பவரைச — செயிரதீர்நதார
கணடிற றிதன்வணண மெனபதனாற றமமையோா
பணடததுள வைபப திலா 50

## (6) துறவு

விளககுப புகவிருண் மாயநதாங் கொருவன்
றவததினமுன னிலலாதாம பாவம — விளககுநெய
தேயவிடததுச சென்றிருள பாயநதாஙகு நலவினை
தீாவிடததுத நிறகுமாந தீது 51

நிலையாமை நோயமூபபுச சாககாடென றெண்ணித
தலையாயார தநகருமஞ செய்வார — தொலைவிலலாச
சததமுஞ சோதிடமு மெனறுங கிலைவிதறறும
பிததரிற பேதையா ரில 52

இலல மிளமை யெழிலவனபபு மீக்கூறறஞ
செலவம வலியென றிவையெலலா — மெலல
நிலையாமை கண்டு நெடியார துறபபார
தலையாயார தாமுய்யக கொண்டு. 53

துனபம பலநா ளுழநது மொருநாளை
யினபமே காமுறுவ ரேழையா — ரினப
மிடைதெரிந தினனாமை நோககி மனையா
றடைவொழிநதா ரான்றமைந தார 54

கொன்னே கழிந்தன் றிளமையு மின்னே
பிணியொடு மூப்பும் வருமால் — றுணிவொன்றி
யென்னொடு சூழா தெழுநெஞ்சே போதியோ
நன்னெறி சேர நமக்கு 55

மாண்ட குணத்தொடு மக்கட்பே றில்லெனினும்
பூண்டான் கழித்தற் கருமையால் — பூண்ட
மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார் 56

ஊக்கித்தாங் கொண்ட விரதங்க ளுள்ளுடையத்
தாக்கருந் துன்பங்க டாந்தலை வந்தக்கா
னீக்கி நிறூஉ முரவோரே நல்லொழுக்கங்
காக்குந் திருவத் தவர் 57

தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா — லும்மை
யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன் 58

மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
வைவாய வேட்கை யவாவினைக் — கைவாய்க்
கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்
விலங்காமை வீடு பெறும் 59

துன்பமே மீதூரக் கண்டுந் துறவுள்ளா
ரின்பமே காமுறுவ ரேழையா — ரின்ப
மிசைதொறு மற்றத னின்னாமை நோக்கிப்
பசைதல் பரியாதா மேல் 60

---

48 ஆம் பாட்டு 'கண்டுபோதார்' என்னும் பாடம்

## (7) சினமின்மை

மதிததிறப பாரு மிறககு மதியார
மிதிததிறப பாரு மிறகக — மிதிததேறி
யீயுந தலைமே லிருததலா லஃதறிவார
காயுங கதமினமை நனறு 61

தணடாச சிறபபிறறம மினனுயிரைத தாஙகாது
கணடுழி யெலலாந துறப்பவோ — மணடி
யடிபெயரா தாறற விளிவநத போழதின
முடிகிறகு முளளத தவர 62

காவா தொருவனறன வாய்திறநது சொலலுஞ்சொ
லோவாதே தமமைச சுடுதலா — லோவாதே
யாயநதமைநத கேளவி யறிவுடையா ரெஞஞானறுங
காயநதமைநத சொலலார கறுதது 63

நேரதது நிகரலலார நீரலல சொலலியககால
வேரதது வெகுளார விழுமியோ — ரோரததனை
யுளளததா னுளளி யுரைததுரா யூரகேடபத
துளளிததூண முடடுமாங கீழ 64

இளையா னடகக மடககங கிளைபொரு
ளிலலான கொடையே கொடைபபய — னெலலா
மொறுககு மதுகை யுரனுடை யாளன
பொறுககும பொறையே பொறை 65

கலலெறிந தனன கயவரவா யினனாசசொ
லெலலாருங காணப பொறுததுயபப — ரொலலை
யிடுநீறறாற பையவிநத நாகமபோற றததங
குடிமையான வாதிககப படடு. 66

மாறறாராய் நினறுதம மாறேறபாராக கேலாமை
யாறறாமை யெனனா ரறிவுடையா — ராறறாமை
நோததினனா மறறவா செய்தக்காற றமவரைப
பேரததினனா செய்யாமை நன்று. 67

நெடுங்கால மோடினு நீசா வெகுளி
கெடுஙகால மினறிப பரககு — மடுங்காலை
நீாகொண்ட வெபபமபோற றானே தணியுமே
சீாகொண்ட சானறோா சினம. 68

உபகாரஞ் செயததனை யோராதே தஙக
ணபகார மாறறச செயினு — முபகாரந
தாஞ்செய்வ தலலாற றவறறினறு நீஙகூககல
வானறோய் குடிபபிறநதாாக கில 69

கூாததுநாய கௌவிக கொளககணடுந தமவாயாற
போததுநாய கௌவினறு நீஙகிலலை — நீாததனறிக
கீழமககள கீழாய சொலலியககாற சொலபவோ
மேனமககள தமவாயான மீட்டு 70

## (8) பொறையுடைமை

கோதை யருவிக குளிாவரை நனனாட
பேதையோ டியாது முரையறக — பேதை
யுரைககிற சிதைநதுரைககு மொலலும வகையால
வழுககிக கழிதலே நனறு 71

நேரலலாா நீரலல சொலலியககான மறநது
தாரித திருததத தககுதிமற — றோருமப
புகழ்மையாக கொளளாது பொஙகுநீா ஞாலஞ
சமழமையாக கொணடு விடும. 72

காதலார சொலலுங கடுஞசொ லுவநதுரைககு
மேதிலா ரின்சொலிற றீதாமோ — போதெல்லா
மாதாவண் டாரககு மலிகடற றணசேர்பப
வூாவ தறிவாரப பெறின். 73

அறிவ தறிநதடஙகி யஞசுவ தஞசி
யுறுவ துலகுவபபச செய்து — பெறுவதனு
லினபுறறு வாழு மியலபுடையா ரெஞஞானறுந
துனபுறறு வாழத லரிது. 74

வேறறுமை யினறிக கலநதிருவா நட்டககாற
றேறறு வொழுகக மொருவனக ளுணடாயி
னூறறுந துணையும பொறுககப பொறுககலாற
றூறறுதே தூர விடல 75

இனனு செயினு மினிய வொழிகென்று
தனனையே தானோவ னலலது — துனனிக
கலநதாரைக கைவிடுதல கானக நாட
விலஙகிறகும விளள லரிது 76

பெரியார பெருநடபுக கோடறறஞ செயத
வரிய பொறுபபவென் றனறோ — வரியரோ
வொலலை னருவி யுயாவரை நனனட
நலலசெய வாாககுத தமா 77

வறறிமற றறறப பசிபபினும பணபிலாக
கறற மறிய வுரையறக — வறற
மறைககுந துணையாரக குரைபபவே தமமைத
துறககுந துணிவிலா தாா. 78

இனபம பயநதாங கிளிவு தலைவரினு
மினபத்தினை பகக மிருநதைகக — வினப
மொழியாமை கண்டாலு மோஙககருவி நாட
புழியாகா வாரே தலை. 79

தானகெடினுந தககாாகே டெண்ணறக தனனுடமபி
னூனகெடினு முணணுாகைத துணணறக — வானகவிநத
வையக மெலலாம பெறினு முரையறக
பொயயோ டிடைமிடைநத சொல 80

## (9) பிறாமனை நயவாமை

அசசம பெரிதா லதறகினபஞ சிறறளவா
னிசச னினையுஙகாற கோககொலையா — னிசசலுங
குமபிககே கூாதத வினையாற பிறனறா
நமபறக நாணுடை யாா 81

அறமபுகழ கேணமை பெருமைமிந நானகும
பிறனறா நசசுவாாச சேரா — பிறனறா
நசசுவாாச சேருமு பகைபழி பாவமென
றசசததோ டிநநாற பொருள. 82

புகக விடததசசம போதருமபோ தசசந
துயககு மிடததசசந தோனறாமைக காபபசச
மெககாலு மசசந தருமா லெவன்கொலோ
வுடகான பிறனில புகல 83

காணிற குடிபபழியாங கையுறிற காலகுறையு
மாணினமை செயயுமா லசசமா — நீணிரயத
துனபம பயககுமாற றுசசாரி நீககணட
வினப மெனககெனைததாற கூறு. 84

செமமையொன றினறிச சிறியா ரினததராயக
கொமமை வரிமுலையா டோண்மரீஇ — யுமமை
வலியாற பிறாமனைமேற சென்றாரே யிமமை
யலியாகி யாடியுண் பாா. 85

பலலா ரறியப பறையறைநது நாட்கேட்டுக
கலயாணஞ செயது கடிபுகக — மெலலியற
காதன மனையாளு மிலலாளா வெனனொருவ
னேதின மனையாளை நோககு 86

அமப லயலெடுபப வஞசித தமரபரீஇ
வமபலன பெணமரீஇ மைநதுறறு — நமபு
நிலைமையி னெஞசததான றுயபபுரவு பாமபின
றலைநககி யனன துடைத்து. 87

பரவா வெளிபபடா பலலோரகட டஙகா
வுரவோரகட காமநோ யோஒ கொடிதே
விரவாரு ணாணுப படலஞசி யாது
முரையாதுள ளாறி விடும 88

அமபு மழலு மவிரகதிர ஞாயிறும
வெமபிச சுடினும புறஞசுடும — வெமபிக
கவறறி மனததைச சுடுதலாற காம
மவறறினு மஞசப படும. 89

ஊரு ளெழுநத வுருகெழு செநதீககு
நீருட குளிதது முயலாகு — நீருட
குளிபபினுங காமஞ சுடுமேகுன றேறி
யொளிபபினுங காமஞ சுடும. 90

## (10) ஈகை

இலலா விடததூ மியைநத வளவினு
லுளள விடமபோற பெரிதுவநது — மெலலக
கொடையொடு பட்ட குணனுடை மாநதரக
கடையாவா மாணடைக கதவு. 91

முன்னரே சாநாள் முனிதகக மூபபுள
பினனரும பீடழிககு நோயுள — கொனனே
பரவனமின பறறனமின பாததுணமின யாதுங
கரவனமின கைததுண்டாம போழது. 92

நடுககுறறுத தற்சோநதாா துனபந துடையாா
கொடுததுததான றுய்பபினு மீணடுஙகா லீணடு
மிடுககுறறுப பறறினு நில்லாது செலவம
விடுககும வினையுலநதக கால 93

இமமி யரிசித துணையானும வைகலு
நுமமி லியைவ கொடுததுணமின — உமமைக
கொடாஅ தவரெனபா குண்டுநீா வையத
தடாஅ வடுபபி னவா. 94

மறுமையு மிமமையு நோக்கி யொருவற
குறுமா றியைவ கொடுததல — வறுமையா
லீத லிசையா தெனினு மிரவாமை
யீத லிரட்டி யுறும. 95

நடுவூருள வேதிகை சுற்றுககோட் புக்க
படுபனை யனனா பலாநசச வாழவாா
குடிகொழுததக கணணுங கொடுததுண்ணா மாகக
ளிடுகாட்டு ளேறறைப பனை. 96

பெயறபான மழைபெய்யாக கண்ணு முலகஞ
செயறபால செயயா விடினுங — கயபபுலால
புனனை கடியும பொருகடற றண்சோபப
வெனனை யுலகுயயு மாறு 97

ஏறறகை மாறறாமை யெனனானுந தாமவரையா
தாறறாதாாக கீவதா மாண்கட — னாறறின
மலிகடற றணசோபப மாறீவாாக கீதல
பொலிகட னெனனும பெயாதது. 98

இறபபச சிறிதெனனு திலலெனனு தெனறு
மறபபயன் யாரமாட்டுஞ செயக முறைபபுதவி
ஐயம புகூஉந தவசி கடிஞைபோற
பைய நிறைதது விடும. 99

கடிபபிடு கண்முரசங காததோர கேடப
ரிடிதது முழங்கியதோர யோசனையோர கேட்ப
ரடுக்கிய மூவுலகுங கேடகுமே சானறோர
கொடுததா ரெனபபடுஞ சொல 100

## (11) பழவினை

பலலாவு ளுயதது விடினுங குழககனறு
வலலதாந தாயநாடிக கோடலைத — தொலலைப
பழவினையு மனன தகைததேதற செயத
கிழவனை நாடிக கொளறகு. 101

உருவு மிளமையு மொணபொருளு முடகு
மொருவழி நிலலாமை கணடு — பொருவழி
யொனறேயு மிலலாதான வாழககை யுடமபிட்டு
நினறுவீழந தகக துடைதது 102

வளமபட வேணடாதார யாரயாரு மிலலை
யளநதன போக மவரவ ராறறான
விளங்காய திரட்டினா ரிலலைக களங்கனியைக
காரெனச செயதாரு மில 103

உறறபால நீகக லுறுவாககு மாகா
பெறறபா லனையவு மனனவா மாரி
வறபபிற றருவாரு மிலலை யதனைச
சிறபபிற றணிபபாரு மில 104

திணைததுணைய ராகிததந தேசுள் ளடககிப
பனைததுணையார வைகலும பாடழிநது வாழ்வார
நினைபபக கிடநத தெவனுண்டாம மேலை
வினைபபய னலலாற பிற 105

பலலானற கேள்விப பயனுணாவார வீயவுங
கலலாதார வாழ்வ தறிதிரேற — கலலாதார
சேதன மெனனுமச சேறகத திண்மையாற
கோதெனறு கொளளாதாங கூறறு. 106

இடுமபைகூா நெஞசததா ரெலலாருங காண
நெடுஙகடை நினறுழலவ தெலலா — மடமபபூ
வனனங கிழிககு மலைகடற றணசோபப
முனனை வினையாய விடும 107

அறியாரு மலல ரறிவ தறிநதும
பழியோடு படடவை செயதல — வளியோடி
நெயத னறவுயிாககு நீளகடற றணசோபப
செயத வினையான வரும 108

ஈணடுநீா வையதது ளெலலாரு மெததுணையும
வேண்டாா மறறிய விழைபபய னலலவை
வேணடினும வேண்டா விடினு முறறபால
தீணடா விடுத லரிது 109

சிறுகா பெருகா முறைபிறழநது வாரா
வுறுகாலத தூறறுகா வாமிடததே யாகுஞ
சிறுகாலைப பட்ட பொறியு மதனால
விறுகாலத தெனனை பரிவு 110

---

92 ஆம பாடடு 'முனனா பினனா' இடமுணாததின மது 41.

## (12) மெய்ம்மை

இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை — நசையழுங்க
நின்றோடிப் பொய்த்த னிரைதொடீஇ செய்ந்நன்றி
கொன்றாரிற் குற்ற முடைத்து 111

தக்கார்ந் தக்கவ ரல்லார்ந் தந்நீர்மை
யெக்காலுங் குன்ற லிலராவர் — அக்காரம்
யாவரே தின்னினுங் கையாதாங் கைக்குமாந்
தேவரே தின்னினும் வேம்பு 112

காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவர் — ஏலா
விடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாடா
தொடர்புடையே மென்பார் சிலர். 113

வடுவிலா வையத்து மன்னிய மூன்றி
னடுவண தெய்த விருதலையு மெய்து
நடுவண தெய்தாதா னெய்து முலைப்பெய்
தடுவது போலுந் துயர் 114

நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉங்
கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற்செல்லும்
புல்லீரப் போழ்தி னுழவேபோன் மீதாடிச்
செல்லாவா நல்கூர்ந்தார் சொல். 115

இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்று
மடங்காதா ரென்று மடங்கார் — தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்தடினுங்
கைப்பறாப் பேய்ச்சுரையின் காய். 116

தமமை யிகழ்வாரைத தாமவரின முனனிகழ்க
வெனனை யவரோடு பட்டது — புனனை
விறறபூங் கமழ்கானல வீங்குநீர்ச் சேரப்ப
வுறறபால யாாககு முறும 117

ஆவே றுருவின வாயினு மாபயநத
பாலவே றுருவின வலலவாம — பாலபோ
லொருதனமைதத தாகு மறநெறி யாபோ
லுருவு பலகொள ளீஙகு 118

யாஅ ருலகததோா சொலலிலலாா தேருஙகால
யாஅ ருபாயததின வாழாதாா — யாஅ
ரிடையாக வினனாத செயதாதாா யாஅா
கடைபோகச செலவமுயத தாா 119

தானசெய வினையலலாற நமமொடு செலவதுமற
றியாஙகணுங தேறற பிறிதிலலை — யாஙகுததாம
போறறிப புனைநத வுடமபும பயனினறே
கூறறஙகொண டோடும பொழுது 120

## (13) தீவினையச்சம்

துககததுட டூஙகித துறவினகட் சோகலா
மககட பிணததத சுடுகாடு — தொக்க
விலஙகிற்கும புளளிறகுங காடே புலஙகெட்ட
புலலறி வாளா வயிறு. 121

இருமபாரககுங் காலரா யேதிலாாக காளாய்க
கருமபாா கழனியுட சோவா — சுருமபாாக்குங
காட்டுளாய் வாழுஞ சிவனுங குறுமபூழுங
கூட்டுளாயக கொணடுவைப பாா. 122

அகங்கேபோ லங்கை யொழிய விரலுழுக்த
துக்கத் தொழுநோ யெழுபவே — மக்கா
லலவனைக் காதலித்துக் கானமுரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால். 123

நெருப்புழற் சோர்ந்தக்கா னெய்போல வதூஉ
மெரிப்பச்சுட் டெவ்வநோ யாக்கும் — பரப்பக்
கொடுவினைய ராகுவர் கோட்டாருங் கோடிக்
கடுவினைய ராகியார்ச் சார்ந்து. 124

பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும் — வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. 125

சான்றோ ரெனமதித்துச் சார்ந்தாய்மற் சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தாக ணில்லாயிற் — சார்ந்தோய்கேள்
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
பாம்பகத்துக் கண்டு துடைத்து 126

யாஅ ரொருவ ரொருவர்தம் முள்ளத்தைத்
தேருந் துணைமை யுடையவர் — சாரற்
கனமணி நின்றிமைக்கு நாடகேண் மக்கண்
மனம்வேறு செய்கையும் வேறு 127

---

113 ஆம் பாட்டு 'கண்ணுடியனன்' என்னும் சிந்தாமணிச் செய்யுளில் 'கண்ணுடி வென்று' என்னுமிடத்து 'கண் எல்லா ரிடத்தும் உலாவி வென்று' என்று உரை கூறி, 'காலாடுபோழ் தின்' என்றாற்போல என்றார் நச் சிந்தாமணி 2327 காலாடு போழ்தின் - செல்வாக்குச் சென்றுகொண் டிருக்கும் காலத்தில் 116 'பெயத்டினும்' உயர்வு சிறப்பும்மை தொல் சொல் 257 நச்

உளளததா னள்ளா துறுதித தொழிலராய்க
களளததா னட்டாா கழிகேண்மை — தெளளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும பூங்குனற நாட
மனததுககண் மாசாய் விடும. 128

ஒக்கிய வொள்வாடன் ஞென்ஞாகைப் பட்டககா
லூககு மழிபபதூஉ மெய்யாகு — மாகக
மிருமையுஞ் சென்று சுடுதலா னல்ல
கருமமே கல்லாகட் டீாவு. 129

மனைபபாசங் கைவிடாய் மக்கட்கென் றேஙகி
யெனைததூழி வாழ்தியோ நெஞ்சே — யெனைததுஞ்
சிறுவரையே யாயினுஞ் செய்தநன றலலா
லுறுபயனோ விலலை யுயிாககு. 130



---

குறிபபு · 'பொறையுடைமை' எனனும அதிகாரம முதல் 'தீவினையசசம' எனனும அதிகாரம ஈறுக இலலற வியலாகக கொளக (130 ஆம பாட்டு பாசம - பிசாசு )

இரண்டாவது

# பொருட்பால்

## 1 அரசியல்

### (14) கல்வி

குஞ்சி யழகுங கொடுநதானைக கோடடழகு
மஞச ளழகு மழகலல — நெஞசதது
நலலமயா மென்னு நடுவு நிலைமையாற
கலவி யழகே யழகு 131

இமமை பயககுமா லீயக குறைவினறாற
றமமை விளககுமாற றூஉளராக கேடினறால
லெமமை யுலகததும யாஙகாணேங கலவிபோன
மமம ரறுககு மருநது 132

களாநிலததுப பிறநத வுபபினைச சானறோா
விளைநிலதது நெலலின விழுமிதாகக கொளவா
கடைநிலததோ ராயினுங கறறுணாந தோரைத
தலைநிலதது வைக்கப படும. 133

வைப்புழிக் கோட்படா வாயததீயிற கேடிலலை
மிகக சிறபபி னரசா செறினவவவா
ரெசச மெனவொருவன மககட்குச செய்வன
விசசைமற றலல பிற. 134

கலவி கரையில கறபவா நாளசில
மெலல நினைககிற பிணிபல — தெளளிதி
னாராயந தமைவுடைய கறபவே நீரொழியப
பாலுண குருகிற றெரிநது 135

தோணி யியககுவான றொலலை வருணநதுக
காணிற கடைபபட்டா னெனறிகழா — காணு
யவனறுணையா வாறுபோ யறறேநூல கறற
மகனறுணையா நலல கொளல. 136

தவலருந தொலகேளவித தனமை யுடையா
ரிகலில ரெஃகுடையா தமமுட் குழீஇ
நகலி னினிதாயிற காணபா மகலவானத
துமப ருறைவாா பதி. 137

கனைகடற றண்சோபப கறறறிநதா கேண்மை
நுனியிற கரும்புதின றறறே — நுனிநீககித
தூாிறறின றனன தகைததரோ பண்பிலா
வீா மிலாளா தொடாபு 138

கலலாரே யாயினுங கறறாரைச சோநதொழுகி
னலலறிவு நாளுந தலைபபடுவா — தொலசிறபபி
னொணணிறப பாதிரிபபூச சோதலாற புததோடு
தணணீா கருதத தானபயந தாஙகு. 139

அலகுசால கறபி னறிவுநூல கல்லா
துலகநூ லோதுவ தெலலாங — கலகல
கூஉந துணையலலாற கொணடு தடுமாற்றம
போஒந துணையறிவா ரில. 140

## (15) குடிப்பிறப்பு

உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும்
குடிப்பிறப் பாளர்தம் கொள்கையிற் குன்றார்
இடுக்கண் டலைவந்தக் கண்ணும் அரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று. 141

சான்றாண்மை சாய லொழுக்க மிவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது — வான்றோயு
மைதவழ் வெற்புப் படாஅ பெருஞ்செல்வ
மெய்தியக் கண்ணும் பிறர்க்கு 142

இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன — குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று 143

நல்லவை செய்யி னியல்பாகுந் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகு — மெல்லா
முணருங் குடிப்பிறப்பி னூதிய மென்னோ
புணர்நு மொருவர்க் கெனின். 144

கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சஞ்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்ச — மெல்லா
மிரப்பார்க்கொன் றீயாமை யச்ச மரத்தாரிம்
மாணாக் குடிப்பிறந் தார். 145

இனநன்மை யின்சொலொன் றீதன்மற் றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாங் — கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப
விற்பிறந்தார் கண்ணே யுள. 146

செய்கை யழிநது சிதனமண்டிற ருயினும
பெய்யா வொருசிறை பேரி லுடைததாகு
மெவவ முழுநதக கடைததுங குடிபபிறநதார
செயவா செயறபா லவை 147

ஒருபுடை பாமபு கொளினு மொருபுடை
யஙகணமா ஞாலம விளககுறூஉந — திஙகளபோற
செலலாமை செவவனோ நிறபினு மொடபுரவிற
கொலகார குடிபபிறந தார. 148

செலலா விடததுங குடிபபிறநதார செய்வன
செலவிடததுஞ செய்யார சிறியவர — புலவாய்
பருமம பொறுபபினும பாயபரி மாபோற
பொருமுர ணாறறுத லின்று. 149

எறறெனறு மிலலா விடததுங குடிபபிறநதா
ரறறுததற சோநதாரக கசைவிடத தாறறுவ
ரறறக கடைததும மகலயா றகழுநதககாற
றெறறெனத தெணணீர படும. 150

## (16) மேண்மககள்

அஙகண விசுமபி னகனிலாப பாரிககுந
திஙகளுஞ சானறோரு மொபபபாமற — றிஙகண
மறுவாறறுஞ சானறோரஃ தாறறார தெருமநது
தேய்வ ரொருமா சுறின. 151

இசையு மெனினு மிசையா தெனினும
வசைதீர வெண்ணுவர சானறோர — விசையி
னரிமா வுளஙகிழிதத வமபினிற றீதோ
வரிமாப பிழைபபெய்த கோல. 152

நரமபெழுந்து நலகூரநதா ராயினுஞ சானறோா
குரமபெழுநது குறறஙகொண் டேறு — ருரஙகவறு
வுளளமெனு நாரினாற கட்டி யுளவரையாற
செயவா செயறபா லவை. 153

செலவழிக கணணொருநாட காணினுஞ சானறவா
தொலவழிக கேணமையிற றேன்றப புரிநதியாபபா
நலவரை நாட சிலநா ளடிபபடிற
கலவரையு முணடா நெறி 154

புலலா வெழுததிற பொருளில வறுஙகோட்டி
கலலா வொருவ னுரைபபவுங கணணோடி
நலலா வருநதியுங கேட்டபரே மறறவன
பலலாரு ணாணல பரிநது. 155

கடிததுக கருமபினைக கணடகா நூறி
பிடிததுநீா கொளளினு மினசுவைததே யாகும
வடுபபட வைதிறநதக கணணுங குடிபபிறநதா
கூறறாததம வாயிற கிதைநது 156

களளாரகள ளுணணா கடிவ கடிநதொரீஇ
யெளளிப பிறரை யிகழநதுரையா — ததளளியும
வாயிறபொய கூறா வடுவறு காட்சியா
சாயிற பரிவ திலா 157

பிறாமறை யினகட செவிடாயத திறனறிந
தேதிலா ரிறகட குருடனுயத தீய
புறஙகூறறின மூஙகையாய நிறபானேல யாதும
மறஙகூற வேணடா வவறகு 158

பனனாளுஞ சென்றககாற பணபிலா தமமுழை
யெனனானும வேணடுப வெனறிகழப — வெனனானும
வேணடினு நனறுமற றெனறு விழுமியோா
காண்டொறுஞ செயவா சிறபபு 159

உடையா ரிவரென ஞொருதலையாப பறறிக
கடையாயாா பினசெனறு வாழ்வ — ருடைய
பிலநதலைப படடது போலாதே நலல
குலநதலைப படட விடதது 160

## (17) பெரியாரைப் பிழையாமை

பொறுபபரென றெணணிப புரைதீாநதாா மாடடும
வெறுபபன செயயாமை வேணடும — வெறுததபி
ஞாககு மருவி யணிமலை நனனாட
போககுதல யாாககு மரிது 161

பொனனைக் கொடுததும புணாதற காியாரைக
கொனனே தலைககூடப பெறறிருநது — மனனோ
பயனில பொழுதாக கழிபபரோ நலல
நயமி லறிவி னவா 162

அவமதிபபு மானற மதிபபு மிரணடு
மிகைமகக ளானமதிககற பால — நயமுணாாக
கையறியா மாகக ளிழிபபு மெடுததேததும
வையாா வடிததநூ லாா . 163

விரிநிற நாகம விடருள தேனும
முருமின கடுஞசினஞ சேணினறு முடகு
மருமை யுடைய வாணசோநது முயயாா
பெருமை யுடையாா செறின 164

எமமை யறிநதிலி ரெமபோலவா ரிலலெனறு
தமமைததாங கொளவது கோளனறு — தமமை
யாியரா நோககி யறனறியுஞ சானறோா
பெரியாாக கொளவது கோள. 165

நளிகடற றணசோபப நாணிழற போல
விளியுஞ சிறியவா கேண்மை — விளிவினறி
யலகு நிழறபோ லகனறகன றோடுமே
தொலபுக ழாளா தொடாபு. 166

மனனா திருவு மகளி ரெழினலமுந
துனனியாா துயபபா தகலவேணடா — துனனிக
குழைகொண்டு தாழநத குளிாமர மெலலா
முழைதநகட செனறாக கொருநகு. 167

தெரியத தெரியுந தெரிவிலாா கணணும
பிரியப பெருமபடாநோய செயயும — பெரிய
வுலவா விருநகழிச சோபபயாா மாடடுந
கலவாமை கோடி யுறும 168

கலலாது போகிய நாளும பெரியவாகட
செலலாது வைகிய வைகலு — மொலவ
கொடாஅ தொழிநத பகலு முரைபபிற
படாஅவாம பண்புடையாா கண 169

பெரியாா பெருமை சிறுதகைமை யொனறிற
குரியா ருரிமை யடககந — தெரியுஙகாற
செலவ முடையாருஞ செலவரே தறசோநதா
ரலலல களைப வெனின 170

## (18) நல்லினஞ் சோதல்

அறியாப பருவத தடஙகாரோ டொன்றி
நெறியலல செய்தொழுகி யவவு — நெறியறிநத
நறசாரவு சாரக கெடுமே வெயினமுறுகப
புறபணிப் பறறுவிட டாஙகு 171

அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறாகடுஞ்சொற போறறுமின் வஞ்சம
வெறுமின வினைதீயார கேண்மையெஞ ஞானறும
பெறுமின பெரியாரவாயச சொல 172

அடைநதாா பிரிவு மருமபிணியுங கேடு
முடங்குடமபு கொணடாாக குறலாற — றொடங்கிப
பிறபபினனு தெனறுணரும பேரறிவி னுரை
யுறபபுணாக வமமாவென னெஞசு 173

இறபப நினையுங்கா லினனு தெனினும
பிறபபினை யாரு முனியாா — பிறபபினுட
பணபாறறு நெஞசத தவாகளோ டெஞஞானறு
நணபாறறி நடகப பெறின 174

ஊாங கணநீா நுரைவுநீாச சோநதக்கால
பேருமம பிறிதாகித தீரததமாம — மோருங
குலமாடசி யிலலாருங குனறுபோ னிறபா
நலமாடசி நலலாரைச சாாநது 175

ஒணகதிா வாணமதிபஞ சோதலா லோங்கிய
வஙகண் விசுமபின முயலுந தொழுபபடூஉங
குனறிய சீாமைய ராயினுஞ சீாபெறுவா
குனறனனா கேணமை கொளின 176

பாலோ டளாயநீா பாலாகு மலலது
நீராய நிறநதெரிநது தோனறுதாம — தேரிற
சிறியாா சிறுமையுந தோனறுதா நலல
பெரியாா பெருமையைச சாாநது 177

கொல்லை யிருமபுனததுக குறறி யடைநதபு
லொலகாவே யாகு முழுவ ருழுபடைககு
மெலலியரே யாயினு நறசாாவு சாாநதாாமேற
செலலாவாஞ செறறாா சினம. 178

நிலநலத்தா னந்திய நெல்லேபோற் றத்தம்
குலநலத்தா லாகுவர் சான்றோர் — கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினஞ் சேரக் கெடும் 179

மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த
வினத்தா லிகழப் படுவர் — புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
யெறிபுனந் தீப்பட்டக் கால் 180

## (19) பெருமை

ஈத லிசையா திளமைசே ணீங்குதலாற்
காத லவருங் கருத்தல்லா — காதலித்
தாதுநா மென்னு மவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள் 181

இற்சார்வி னேமாந்தேன் மீக்கமைந்தே னென்றெண்ணிப்
பொச்சாந் தொழுகுவர் பேதையார் — அச்சார்வு
நின்றன போன்று நிலையா வெனவுணர்ந்தா
ரென்றும் பரிவ திலர் 182

மறுமைக்கு வித்து மயலின்றிச் செய்து
சிறுமைப் படாதேநீர் வாழ்மி — னறிஞராய்
நின்றுழி நின்றே நிறம்வேறாங் காரண
மின்றிப் பலவு முள 183

உறைப்பருங் காலத்து மூற்றுநீர்க் கேணி
யிறைத்துணினு மூராற்று மென்பர் — கொடைக்கடனுஞ்
சாஅயக் கண்ணும் பெரியார்போன் மற்றையா
ராஅயக் கண்ணு மரிது. 184

உறபுன றநதுல கூடடி யறுமிடததுங
கலலூற றுழியூறு மாறேபோற் — செலவம
பலாககாறறிக கெட்டுலநதக கண்ணுஞ சிலாககாறறிச
செயவா செயறபா லவை. 185

பெருவரை நாட பெரியாாகட டீமை
கருநரைமேற சூடேபோற றோனறுங — கருநரையைக
கொனறனன வினனா செயினுஞ சிறியாாமே
லொன்றுனுந தோனறா கெடும. 186

இசைநத சிறுமை யியலபிலா தாாகட
பசைநத துணையும பரிவா — மசைநத
நகையேயும வேண்டாத நலலறிவி னாாகட
பகையேயும பாடு பெறும. 187

மெலலிய நலலாருண் மென்மை யதுவிறந
தொனனாருட கூறறுடகு முட்குடைமை — யெலலாஞ
சலவருட் சாலச சலமே நலவரு
ணனமை வரமபாய் விடல. 188

கடுககி யொருவன் கடுஙகுறளை பேசி
மயககி விடினு மனபபிரிபபொன் றின்றித
துளகக மிலாதவா தூய மனததாா
விளககினு ளொண்சுடரே போனறு. 189

முறறுறறுந துற்றினை நாளு மறனுசெய்து
பிறறுறறுத துறறுவா சானறவ — ரததுற்று
முககுறற நீககி முடியு மளவெல்லாந
துககதது ணீககி விடும. 190

---

191 ஆம பாடடு ‘துஞசுக’, துஞசுவா’ என்றும பாடம

## (20) தாளாண்மை

கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போற்
கேளீவ துண்டு கிளைகளோ துஞ்சுப
வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறுந்
தாளாளர்க் குண்டோ தவறு 191

ஆடுகோ டாகி யதரிடை நின்றதூஉங்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்குங் கந்தாகும்
வாழ்தலு மன்ன தகைத்தே யொருவன்றான்
றாழ்வின்றித் தன்னைச் செயின் 192

உறுபுலி யூனிரை யின்றி யொருநாட்
சிறுதேரை பற்றியுந் தின்னும் — மறிவினாற்
காற்றொழி லென்று கருதற்க கையினான்
மேற்றொழிலு மாங்கே மிகும் 193

இசையா தெனினு மியற்றியோ ராற்றா
லசையாது நிற்பதா மாண்மை — யிசையுங்காற்
கண்ட றிரையலைக்குங் கானலந் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று 194

நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை — தொல்சிறப்பி
னொண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
யென்றிவற்றா னாகுங் குலம் 195

ஆற்றுந் துணையு மறிவினை யுள்ளடக்கி
யூக்க முரையா ருணர்வுடையா — ரூக்க
முறுப்பினா லாராயு மொண்மை யுடையார்
குறிப்பின்கீழ்ப் பட்ட துலகு 196

சிதலை தினப்பட்ட வால மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும் 197

ஈனமா யில்லிருந் தின்றி விளியினு
மானந் தலைவருவ செய்பவோ — யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றா
ளரிமா மதுகை யவர் 198

தீங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி
தேங்கமழ் நாற்ற மிழந்தாங்கு — ஓங்கு
முயர்குடி யுட்பிறப்பி னென்னாம் பெயர்பொறிக்கும்
பேராண்மை யில்லாக் கடை 199

பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங்
கருனைச்சோ றார்வர் கயவர் — கருனையைப்
பேரு மறியார் நனிவிரும்பு தாளாண்மை
நீரு மமிழ்தாய் விடும் 200

## 2. நட்பியல்

### (21) சுற்றந்தழால்

வயாவும் வருத்தமு மீன்றக்கா ணோவுங்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்
கசாஅத்தா னுற்ற வருத்த முசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும். 201

அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லா
நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கிப் — பழுமரம்போற்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன். 202

அடுக்கன் மலைநாட தற்சேர்ந் தவரை
யெடுக்கல மென்னார் பெரியோ — ரடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினு மில்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு 203

உலகறியத் தீரக் கலப்பினு நில்லா
சிலபகலா குசிற்றினத்தார் கேண்மை — நிலைதிரியா
நிற்கும் பெரியோர் நெறியுடைய நின்றனைத்தா
லொற்கமி லாளர் தொடர்பு 204

இன்னர் இனையர் எமர்பிற ரெனனுஞ்சொ
லென்னு மிலரா மியல்பினா — றுன்னித்
தொலைமக்க ளன்பநீர் பாரோயார் மாட்டுந்
தலைமக்க ளாகற்பா லார். 205

பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்க
லச்சாரம் பாலோ டமரார்கைத் துண்டலி
னுப்பிலிப் புற்கை யுயிர்போற் கிளைஞர்மாட்
டெக்கலத் தானு மினிது 206

நாள்வாய்ப் பெறினுந்தந் நள்ளாதா ரில்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும் — கேளா
யபராணப் போழ்தி னடகிடுவ ரேனுந்
தமராயார் மாட்டே யினிது 207

முட்டிகை போல முனியாது வைகலுங்
கொட்டி யுண்பாருங் குறடுபோற் கைவிடுவா
சுட்டுக்கோல் போல வெரியும் புகுவரே
நட்டா ரெனப்படு வார் 208

நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையுஞ் செய்வதொன் றுண்டோ — விறுமளவு
மின்புறுவ வின்புற் றெழீஇ யவரோடு
துன்புறுவ துன்புறுக் கால் 209

விருபபிலா ரிலலதது வேறிருந துண்ணும
வெருககுககண் வெஙகருனை வேமபாம — விருபபுடைத
தனபோலவா ரிலலுட் டயஙகுநீரத தண்புறகை
யெனபோ டியைநத வமிழது. 210

## (22) நட்பாராயதல்

கருததுணாநது கறறறிநதா கேண்மையெஞ ஞானறுங
குருததிற கருமபுதின றறறே — குருததிற
கெதிாசெலததின றனன தகைததரோ வென்று
மதுர மிலாளா தொடாபு 211

இறபிறப வெணணி யிடைதிரியா ரெனபதோா
நறபுடை கொண்டமை யலலது — பொறகேழ
புனலொழுகப புளளிரியும பூஙகுனற நாட
மனமறியப படடதொன றன்று. 212

யானை யனையவா நண்பொரீஇ நாயனையாா
கேண்மை தழீஇக கொளலவேண்டும — யானை
யறிநதறிநதும பாகனையே கொலலு மெறிநதவேல
மெயயதா வாலகுழைககு நாய. 213

பலநாளும பககததா ராயினு நெஞசிற
சிலநாளு மொட்டாரோ டொட்டாா — பலநாளு
நீததா ரெனககை விடலுண்டோ தநநெஞசத
தியாததாரோ டியாதத தொடாபு 214

கோட்டுபபூப போல மலாநதுபிற கூமபாது
வேடடதே வேட்டதா நடபாடசி — தோட்ட
கயபபூப்போன முனமலாநது பிறகூமபு வாரை
நயபபாரு நட்பாரு மில. 215

கடையாயார நட்பிற கமுகனைய ரேனை
யிடையாயார தெங்கி னனையா — தலையாயா
ரெண்ணருமு பெண்ணைபோன றிட்டஞான றிட்டதே
தொன்மை யுடையார தொடாபு. 216

கழுநீருட் காரட கேனு மொருவன
விழுமிதாக கொளளி னமிழ்தாம — விழுமிய
குயததுவையார வெண்சோறே யாயினு மேவாதார
கைததுணடல காஞசிரங காய். 217

நாயககாற சிறுவிரலபோ னனகணிய ராயினு
மீககாற றனையு முதவாதார நடபெனனாகு
சேயததா னாகு சென்று கொளளவேணடுஞ செயவினைககும
வாயககா லனையார தொடாபு 218

தெளிவிலா நடபிற பகைநனறு சாதல
விளியா வருநோயி னனறு — லளிய
விகழதலிற கோற லினிதேமற றிலல
புகழதலின வைதலே நனறு. 219

மரீஇப பலரோடு பனனாண் முயஙகிப
பொரீஇப பொருட்டககாக கோடலே வேண்டும
பரீஇ யுயிாசெகுககும பாம்பொடு மினனா
மரீஇஇப பினனைப பிரிவு 220

## (23) நட்பிற் பிழைபொறுத்தல்

நலலா ரெனததா நனிவிருமபிக கொண்டாரை
யலலா ரெனினு மடககிக கொளளலவேண்டும்
நெலலுக குமியுண்டு நீக்கு நுரையுண்டு
புலலிதழ் பூவிறகு முணடு 221

செறுததோ றுடைபபினுஞ செமபுனலோ டூடாா
மறுததுஞ சிறைசெய்வா நீர்கசைஇ வாழநா
வெறுபப வெறுபபச செயினும பொறுபபரே
தாமவேண்டிக கொண்டார் தொடாபு. 222

இறபபவே தீய செயினுநதன னட்டாா
பொறுதத றகுவதொன் றனறோ — நிறகோற
குருவவண் டாரககு முயாவரை நாட
வொருவா பொறையிருவா நடபு. 223

மடிதிரை தநதிட்ட வான்கதிா முததங
கடுவிசை நாவாய கரையலைககுஞ சேரபப
விடுதற கரியா ரியலபிலரே னெஞசஞ
சுடுதறகு மூட்டிய தீ 224

இனறு செயினும விடறபால ரலலாரைப
பொனனுகப போறறிக கொளலவேணடும — பொனனொடு
நலலிற சிதைததநதீ நாடொறு நாடிதத
மிலலததி லாககுத லால 225

இனறு செயினும விடுதற கரியாரைத
துனனுத துறததற றகுவதோ — துனனருஞசீா
விண்குததும நீளவரை வெறப கலைபவோ
கண்குததிற றெனறுதம கை 226

இலஙகுநீாத தண்சேரபப வினறு செயினுங
கலநது பழிகாணா சான்றோா — கலநதபிற
றீமை யெடுததுரைககுந திணணறிவி லலலாதாா
தாமு மவரிற கடை. 227

ஏதிலாா செயத திறபபவே தீதெனினு
நோதகக தெனனுண்டாம நோககுஙகால — காதல
கழுமியாா செய்த கறஙகருவி நாட
விழுமிதா நெஞசததுள் ளினறு. 228

தமரெனறு தாங்கொளளப பட்டவா தமமைத
தமான்மை தாமறிநதா ராயி — னவரைத்
தமரினு நன்கு மதித்துத் தமரனமை
தமமு னடககிக் கொளல 229

குறறமு மேனைக குணமு மொருவனை
நடடபி னாடித் திரிவேனே — னடடான
மறைகாவா விட்டவன செலவுழிச செலக
வறைகடலசூழ வைய நக 230

## (24) கூடாநட்பு

செறிபபில பழுஙகூரை சேறணை யாக
விறைததுநீ ரேறறுங கிடபபா — நறைகுனறம
பொஙகருவி தாழும புனலவரை நனறுடை
தஙகருமம முறறுந துணை 231

சீரியார கேணமை சிறநத சிறபபிறறுய
மாரிபோன மாணட பயததா — மாரி
வறநதககாற போலுமே வாலருவி நாட
சிறநதககாற சீரிலா நடபு 232

நுணணுணாவி னாரொடு கூடி நுகாவுடைமை
விண்ணுலகே யொககும விழைவிறறு — ணுண்ணூ
லுணாவில ராகிய வூதிய மிலலாாப
புணாத னிரயதது ளொனறு 233

பெருகு வதுபோலத தோனறிவைத தீபபோ
லொருபொழுதுஞ செலலாதே நநது — மருகெலலாஞ
சநதன நீளசோலைச சாரன மலைநாட
பநதமி லாளர் தொடாபு. 234

செய்யாத செய்துநா மெனறலுஞ செய்வதனைச
செய்யாது தாழ்த்துக்கொண் டோட்டலு — மெய்யாக
வினபுறாஉம பெறறி யிகழ்நதாாககு மநநிலையே
துன்புறாஉம பெறறி தரும. 235

ஒருநீர்ப பிறநதொருங்கு நீணடக கடைததும
விரிநீாக குவளையை யாமபலொக் கலலா
பெருநீராா கேண்மை கொளினுநீ ரலலாா
கருமஙகள வேறு படும. 236

முறறற சிறுமநதி முறபடட தநதையை
நெற்றுககண் டன்ன விரலான ஞெமிாததிடுக்
குற்றிப பறிககு மலைநாட வினனுதே
யொறறுமை கொளளாதாா நட்பு. 237

முட்டுறற போழ்தின முடுகியென ஞருயிரை
நட்டா ஞெருவனகை . நீடடேனே — னட்டான
கடிமனை கட்டழிததான செலவுழிச செலக
நெடுமொழி வைய நக. 238

ஆனபடு நெய்பெய் கலனு ளதுகளைநது
வேமபடு நெய்பெய தனைததரோ — தேமபடு
நலவரை நாட நயமுணாவாா நண்பொரீஇப
புலலறிவி ஞரொடு நடபு 239

உருவிற கமைநதானக ஞூராண்மை யினமை
பருகற் கமைநதபா னீரளா யறறே
தெரிவுடையாா தீயினத்த ராகுத ஞகம
விரிபெடையோ டாடிவிட் டற்று 240

212 ஆம பாடடு 'நறபுடைக கொணடமை' என றும பாடம

174. நன்றாய ஆராய்ந்து பார்க்க, பிறப்பு இன்றைத்தே யாயினும் அதை யாரும் வெறாகள் எக்காலத்திலோவெனில் மக்க ளாயப் பிறந்தகாலத்தும் மக்கட் பண்பினை இடையறாமற்செலுத்தி வரும் நெஞ்சினையுடைய நல்லவர்களுடனே எந்நாளும் தாமும் அந்த நட்பினை இடையறாமற் செலுத்தி நட்புக் கொள்ளப்பெற்றன அக்காலத்து எனக். இந்தப் பிறப்பு நலத்து ஆகும் இறப்ப - மிக, இறப்ப இனனது என்று கூட்டலுமாம். மக்கட் பண்பாவது - நன்மக்கட்கே உரிய அன்புடைமை, நல்ல குடிப்பிறப்பு முதலியன.

175 ஊருக்குள்ளே முற்றத்தினீரும் ஜலதாரையினீரும் கூடிச் சமுத்திர நீருடனே சேர்ந்தால் பெரும் வேறாகிப் புண்ணிய தீர்த்தமெனப்படும். அப்படிப்போல நல்ல குலத்திலே பிறவாத வரும் நல்ல குலத்திலே பிறந்த பெரியோர்களைச் சேர்ந்தால், மலை போலப் பெருந் தோற்றமுடையவராவர் எனக். பேரும் பெரி தாகி என்றும் பாடம் ஒரும், ஆராய்ந்து பார்க்கின்ற எனக், அசையும் ஆம். உரவுநீர் - மிக்கநீர், உலாவுநீருமாம். அது கட லுக்காயிற்று. குன்றுபோல நிற்றலாவது,

“ அளக்க லாகாப் பெருமையு மருமையு
மருங்கக்கல் முடைமையு மேற்ற ஈருமையும் ” ஆம்

176 ஓங்கிய அழகிய பரந்த ஆகாசத்தின் கண்ணே நல்ல கிரணங்களையுடைய வெள்ளிய சந்திரனைச் சேர்ந்துள்ள தன்ல முயலும் தொழப்படும். அப்படிப்போல சிறப்பில்லாதவர்களாயி னும் மலையொத்த பெரியோர்களுடனே நட்புக்கொண்டால் மிக்க சிறப்பினைப் பெறுவர் எனக். குன்றுதல் - இல்லையாதல், மகளிர் பிறைச் சந்திரனைத் தொழுதல் பண்டைக்கால வழக்கு. ‘ஒளி ளிழை மகளிர் உயாபிறை தொழூஉம்” (அகம் 239) என்பதும் காண்க. சந்திரனிடத்து முயலிருப்பதாகக் கூறுவது கவிமரபு ‘குறுமுயன் மறுநிறம் கிளர மதிநிறைந்து . . ’ என் பதுங் காண்க (அகம் 141)

177 பாலுடனே கூடின தண்ணீர் பாலாய்க் காணப்படுமே யல்லாது தண்ணீராய நிறம் வேறாகத் தெரியத் தோன்றாது. அதுபோல ஆராய்ந்து பார்க்குமிடத்து நல்ல பெரியோர்களது பெருமையின் சம்பந்தத்தினாலே சிறியவர்களுடைய சிறுமைக

குணமும் தோன்றுது மறையும என்க தெரிய எனற்பாலது தெரிநது எனத் திரிநது நின்றது

178 உழுகினற கொல்லையிலே பெரிய கட்டையைச சோநது நினற புல உழவா உழுகிற கலபபைககுப் பெயராது, அதுபோல வலலமையிலலாத மெலிநதவரேயாயினும அறிவு ஆற்றலகளால வனமையுடையவாகளைச சோநதவாமேல பகைவருடைய கோபமானது செலலாது எனக.

'புனதது இருநகுறறி' எனக 'செலலாவாம செறறுா சினம' எனபதற்கு 'சததுருககள படை செயய மாடடார்கள், அவாகளை வெலலபபோகாது' எனபது ஒரு பழையவுரை

179 நிலததினது நனமையினாலே வளாநத நெலலைப போலத தாம தாம சேரும குலததினது நனமையினாலே சானற வாகளாக ஆகினறாாகள நனறுய ஒடுகிற கபபலை ஒரு சுழல காறறு வநது கெடுததாற்போலத தீய சோககை யுண்டானால நலல குணமும கெடும எனக நலல காறறினாலே நலவழியில நனறுயோடுங கபபலும தீவளியால திசை தடுமாறிச சிதைதல இயலபாதலபறறி, நலவினஞ சோநத வழியும தீயினததின ஒருவுதல ஆவசியகமெனபதாயிறறு இதனை 'ஊதியம எனபது ஒருவாககுப பேதையாா கேணமை ஒரீஇவிடல்' எனனுங குறளால அறிக

180 மனததிலே குறறமிலலாதவரா யிருநதாலும தாம சோநத தீய இனததின கூட்டுறவாலே ஒருவா இகழபபடுவா எவவாறெனில், காடழிககபபடட கொலலையானது தீபபறறிய காலதது ஆண்டுளள நலல பரிமளமுளள சநதனமும வேஙகையும சோநது வேமாறுபோல எனக 'மனததான' எனபது உருபு மயககம மனததாலும எனறு பொருள கொளளலுமாம எறி புனம, வெடடிச சுட்ட கொல்லை (புறம 231) குறிஞசி நிலத்துக குறவா தினை விதைததறகுத தரிசாய்க கிடநத காடுகளை வெடடிச சுடுதல மரபு. 'தொடுதோற கானவன சூடுறு வியனபுனம' எனபது அகம 368 கீழ்பபாடலில் மெல்லியா துணைவலி பெறறுராயினுந தீயினஞ் சோநதாற் கெடுவரெனறுா, இபபாடலில இறபபச சிறநதாரும் அவ்வினஞ சேரக கெடுவரெனறு கூறினாா

(19) 'பெருமை'யாவது குல ஒழுக்கத்தினாலும் கல்வி யொழுக்கத்தினாலும் தமையும் தருமமும் உடைமையினாலும் நீங்கு வந்தடுத்த காலத்தும் தம் நற்குணங்களைக் கைவிடாமையினாலும் பெருமையுடையாரது இயல்பு நலவினஞ் சேர்ந்தாரகே இப்பெருமை சித்தித்தலின் இஃது அதன் பின் வைக்கப்பட்டது

181 ஒருவாக்கு ஒன்றைத் தானங் கொடுக்கவோ கூட வில்லை யௌவனமும் நீங்கி நெடுங்கால மாகிவிட்டது, அத னால் முன்பு ஆசையுடனிருந்த மகளிர் இப்போது நினைக்கின்றா களில்லை அப்படியிருக்க, ஆசை வைத்து ஸம்ஸாரத்தில் இருந்து வாழக்கடவோம் என்னும் ஆசையினை விட்டொழித்துத் துறந்து போவதே நமக்குச் சிறந்த பொருளாவது போலும் - ஒப்பில் போலி (தொல் சொல் சூ 278) இப்பாடல் நெஞ்சினை நோக்கி கூறியதாக எழுந்தது

182 இந்தச் சமசார வாழ்க்கையிலே நின்று இன்பமுற் றோம் என்றும், இப்பிறப்பிலே எல்லாப் பொருளையும் போகங் களையும் பூரணமாக அடைந்தோமென்றும் நினைத்து ஐசுவரி யத்தை மெய்யென்று நம்பிப் பிறகு தமக்கு வருகிற துக்கத்தை விசாரியாமல் மறந்து காலங்கழிப்பார் அறிவில்லாதவர் அந்த ஸம ஸார வாழ்க்கை இருந்தாற்போல விருந்து கெடும் என்றறிந்த ஞானிகள் சுகதுக்கம் இரண்டிற்கும் ஒருபடியாக இருந்து, துக்கம் வருங்காலத்து வருந்தார் எனக எமுறுதல - இன்புறுதல், மயங்குதலுமாம் பொச்சாத்தல் - மறத்தல

183 மறுமைக்கு உறுதியாகிய தாமங்களை மயக்கமில்லாமற் செய்து, நாகத்தில் விழாதவாறு நீங்கள் அறிவுடையவாகளாய் வாழுங்கோள் நீங்கள் நின்றவிடத்தில் நிற்கும்போதுதானே பொருள்கள் நிறம் மாறுகின்றன அஃதேயன்றி ஒரு காரணமு மின்றிப் பல புதிதாகவும் உண்டாகின்றன அதை நீங்கள் காண் டீராக எனக மறுமைக்கு வித்து ஆவது அறம் அது வீட்டில் கிற சென்று முளைத்து இவனுக்குப் பயன்படுதலால் சிறுமைப் படல், சிறியோர் தன்மையைப் பொருந்தல் என்றலும், சிறறி னஞ்சேறல் என்றலும் ஆம

184 மழை பெய்யாத காலத்தும், நடுவே யூறுகின்ற நீரை யுடைய மணற்கேணி தன்னிடத்திலுள்ள தண்ணீரை இறைத்துக் கொண்டுபோய ஓர் ஊரார்எல்லாரும் உண்டாலும், அவர்களுக்கு நீர் கொடுக்கவல்லதாகும் என்று பெரியோர் கூறுவர். தரித்திரம் வந்த காலத்தும் பெரியோர் ஏற்பார்க்கு இல்லை யென்னுமல் சுபாவமாகக் கொடுக்கிறவாறு போலச் செல்வமுற்ற காலத்தும் சிறியோர் மகிழ்ச்சியுடன் கொடார் எனச் ஆஅஅயக் கண்ணு மென்றும் பாடம்

உறைத்தல் - மழை துளித்தல் மழையில்லாத காலத்து மணற்கேணி பல ஊற்றுக் கண்களால் நீர் சுரவாமற் போனாலும் நடுவிலுள்ள ஓர் ஊற்றுக்கண்ணால் சுரத்தலபற்றி நடுவேயூறு கின்ற என்பபட்டது மற்றையார் என்பார் பெரியோரின் வேறான சிறியோர் 'பெரியோர்' என்பதில் ஓர் விகுதி அப்பெரி யோரின் அருமை குறித்து ஒருமைக்கண் வந்தது, மற்றையார் என்பதில் ஆர்விகுதி அத்தகையார் பலர் என்பது குறித்துப் பன் மைக்கண் வந்தது மணற்கேணி போலப் பெரியோர்க்கு ஈதலும் சிறியோர்க்கு ஈயாது தாழ்த்தலும் இயல்பென்பதூஉம் பெறறும்

185 மிக்க நீரைக் கொடுத்து உலகத்து மக்களையெல்லாம் ஊட்டின ஆறு தண்ணீரில்லாமற் போனவிடத்தும் அந்த ஆற றிலே கல்லுகிற அவ்வூற்றிலே நீர் ஊறுவதுபோல, பெரியோர் கள் தம் ஐசுவரியத்தைப் பலருக்கும் கொடுத்து வறுமையடைந்து வாடியவிடத்தும், தங்களுக்கான மாத்திரம் செய்யத்தக்க கடமை களைச் செய்து சில பேருக்காவது கொடுப்பரெனக் கல்லூறறு, வினைத்தொகை கலலூறறூழி என்றும் பாடம்

186 பெரிய மலையையுடைய நாடனே ! பெரியவர்களிடத் திலே உண்டாகிய குற்றம் வெளிய எருதின்மேல் போட்டப்பட்ட சூடுபோல வெளிப்படத் தெரியும் பெரிய இடப்பத்தைக் கொன் றதோடொத்த குற்றத்தைச் சிறியோர் செய்தாராயினும் அச் சிறியோரிடத்திலே அந்தக் குற்றம் தெரியாது மறையும் எனக. நரை, இடபம் தோன்றூ கெடும், ஆகாரவீற்று அஃறிணைப பன்மை முற்றுமுன் வலிஇயல்பாயிற்று ஒன்றுனும், சிறிதும் : 'தோன்றூக்கெடும்' என்றும் பாடம்

187 பொருந்திய சிறுமைக் குணத்தை உடையராய பண்பில்லாதாரிடத்திற் கலந்து உறவுகொண்ட நாளெல்லாம் துன்பமேயாகும். நெறியல்லாதவற்றை விளையாடுமிடத்தும் வேண்டாத நல்ல அறிவினை விரும்புமவர்களிடத்துப் பகையுண்டாயிருந்தாலும் பெருமையுண்டாகும் எனக் அசைதல், தளர்தல் ஈண்டு நெறியிறந்தளாந்தலை உணர்த்திற்று செல்வக் கடுங்கோ ஆழியாதன் "நகையினும் பொய்யா வாய்மையான்" என்று புகழப்படுதலும் ஈண்டு நோக்கத்தக்கது (பதிற் 70)

188 மெத்தென்ற இயல்பையுடைய நல்லாரிடத்து மெத்தெனவே ஒழுகுக அது கடந்து பகைவரிடத்திலே யமதூதனும் அஞ்சத்தக்க பலத்தினைச் செய்க முழுதும் கபடமாயிருக்கிறவரிடத்துக் கபடமாகவே ஒழுகுக எல்லா நன்மைக் குணமும் உடையாரிடத்து நன்மையை விட்டு விலகாது ஒழுகுக, எனக் மென்மை, உட்குடைமை, சலம் என்ற இடங்களில் ஆயவிடல் என்னும் தொடரைத் தனித்தனியே பெய்து முடிக்க மெல்லியல் நல்லாருள் என்னும் பாடத்திற்கு மெல்லிய இயல்பும் நற்குணமுமுடைய ஸ்திரீகளிடத்தில் என்று பொருள் கூறுக சலவர் - பொய்யருமாம்

189 பரிசுத்தமான மனமுடையவர் தன்னைக் கடியவனுக்குப் பண்ணி, ஒருவன் மிகவும் கொடிய கோட்களைச் சொல்லி வேறுபடுத்தி விட்டாலும், தம் மனத்திலே வேறுபாடு சிறிதுமில்லாமல், உறுதியான மனமுடையவர்களாய், அசையாமல் நின்று எரிகிற விளக்கினுள்ளே யிருக்கிற சுடர்போலே தங்கள் குணம் சலியார் எனக்

கடுக்குதல், அசசுறுத்தலுமாம் துளக்கமில்லா விளக்கின் சுடர்போலத் தூயவருடைய மனம் சலியாதென்பது கருத்து

190 முற்பட உண்ணும் உணவினை நாடொறும் தருமம் செய்து, அதனால் வருகிற பயனைப் பெரியார் உணப்பர் அப்படி உண்ட பயனானது காமம் வெகுளி மயக்கங்களாகிய மூன்று குற்றங்களையும் கெடுத்துத் தாம் பிறக்கிற பிறப்பெல்லாவற்றுள்ளும் அம்மலங்களினின்றும் தம்மை நீக்கிவிடும் எனக் பிறழுதல் துறத்தல், விருந்தோம்பி மிச்சில் மிசைதலுமாம

(20) 'தாளாண்மை' யாவது இடைவிடாத மெய்முயற்சியை ஆளுந் தன்மை. அதனை ஆள, பொருளும் பெருமையும் உறவும் உண்டாமாதலாலும் பெருமையுடையாக்கே இஃது அமையு மாதலாலும் இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

191 தண்ணீரை மிகுதியாகக் கொள்ளாத குளத்தின் கீழுள்ள பயிரைப்போல, உறவினார் கொடுப்பதனைஉண்டு இருப்போர் பின்பு அந்த உறவின் முறையார் இல்லாதபோது இறந்துபடுவர். வாளைக் கையிலேந்திச் சுழற்றிக்கொண்டு கூத்தாடுகின்ற கூத்தியின் கண்கள்போல இடைவிடாமல் எந்நாளும் ஊக்கமாயிருக்கின்றவர்களுக்கு ஒரு காலத்திலும் பொருள் வருவாய் தவறுவதில்லையெனக் குளத்து நீர் வற்றியபோது பயிர்கள் சாதலைக் கூறின முகத்தால் புடைகள் வேறாக குளங்களுக்குச் சென்று உயிர்வாழ்தலையும் கூறி, நட்டாரை நம்பித் தாம் மடிந்திருத்தல் அரசர்க்கு மிக்க இழுக்கினைத்தரும் என்று கூறினருமாயிற்று. 'வாளமலையாடும்' என்னுமிடத்து "வாளை எடுத்து நின்று ஆடுங் கூத்து" என்று சிலப் அரும்பதப் பொருள் கூறியவதனால் 'வாளாடு கூத்து' எனபதற்கு வாளைக் கையிலேந்திச் சுழற்றிக்கொண்டு கூத்தாடுதல் எனக் 'மீளாது பெற்ற விறற்கழலோன் வாளாட்டின் வாளாடு கூத்திவந் தாடினள்' என்று பயின்று வருதலால், கூத்தியருள் வாளாடு கூத்தியரெனபார் ஒரு சாரார்போலும்.

192 அசைந்து ஆடுகிற கொம்பாய் வழியருகே நின்றது கூடப் பெரிதாய் வைரம் முற்றியவுடனே யானையைக் கட்டுகிறதற்கு உதவும். ஒரு தறியாகும். ஒருவன் முயற்சியினாலே தன்னைக் குறைவில்லாமற் செய்து கொள்வானானால் அவன் செல்வமுடையவனாதலும் அவ்வாறேதான் எனக.

193 வலிமிக்க புலி தனக்கு இரையாகிய மாமிசம் கிடைக்காதபோது ஒருநாளைக்குச் சிறிய தேரையைப் பிடித்தும் தின்று கிடக்கும். அறிவினாலே செய்த உத்தியோகம் பலிக்கவில்லையென்று மனம் சலிக்க வேண்டாம். இடைவிடாமல் முயலுகின்ற ஒழுக்கத்தினாலே மேலான தொழில்களும் கைகூடும் என்க. காற்றொழில் - உத்தியோகம். சிறு தொழிலும் ஆம். கை, ஒழுக்கம்.

194 தன்னுடைய முயற்சி ஒருகாலத்துப் பலித்ததில்லையாயினும் அதனை ஒருவழியாக முயன்று முடித்துத் தளராமல் நிற்பது ஒருவனுக்குச் சாமர்த்தியமாகும். முயன்ற காரியமெல்லாம் பலிக்குமாயின், மகளிர்களுங்கூடச் செல்வமுடையவர்கள் ஆவாரன்றோ எனக்.

கண்டல், முள்ளி, முள்ளியைக் கடலலைகள் சிதைக்கின்ற குளிர்ந்த கழிக்கரையையுடைய நாடனே என்றது வலிமையில்லாத முள்ளிச்செடியை மோதி அழிப்பது வலிய அலைக்குப் பெருமையில்லாதவாறு போல எளிய காரியங்களைச் செய்து முடித்தல் வலியோர்க்கழகன்று என்பது தொகைமொழியின் பொருள். புருஷர் வாழ்வது ஆண்மையில்லை என்று பொருள்பட்டு நின்றமையால், தொழில்பற்றி, மற்று வினைமாற்றின்கண் வந்தது ஓகாரம், எதிர்மறை. கண்டல், தாழையும் ஆம்.

195 இவர் நல்ல குலத்தோனென்றும் இவர் தீயகுலம் என்றும் சொல்வதுமாத்திரமே யல்லாமல், அதில் ஒரு பயனுமில்லை. பழைய சிறப்பினையுடைய சுத்தமான பொருளால் மாத்திரமே அல்ல, தவம் கல்வி முயற்சி என்ற இவற்றாலும் ஒருவருக்குக் குலம் மேலாகக் கூறப்படும் எனக். பொருட்குத் தொல் சிறப்பாவது, நடுவண் எய்த இருதலையும் எய்தலாய ஒண்பொருளாவது அறத்தினால் ஈட்டப்பெற்ற நம் தமர்க்கு ஈயப்படுவதுமாகியது ஒன்றோ, என்பதனை எண்ணிடைச் சொல்லாக்கி, பொருளும், தவமும், கல்வியும், முயற்சியும் ஒன்றுசேரக் குலனும் என்னுமாம். எல்லாவற்றிற்கும் முயற்சி வேண்டும் என்பது ஒரு பழைய உரை.

196 தாங்கள் கருதின காரியம் முடியுமளவும் தங்கள் அறிவினை வெளிப்படாமல் அடக்கிக்கொண்டு, அந்நினைத்த காரியத்தைப் பிறர் அறிய வெளியிடார் அறிவுடையவர்கள். பிறர் நினைத்த நினைவை அவர்களுடைய காரியங்களைப் பார்த்தே ஆராய்ந்து அறியும் நுட்ப புத்தியுடையார் குறிப்பிலே உலகம் தங்கிற்று எனக். அறிவு, ஊக்கம், உறுப்பு என்பன அவ்வவற்றால் செய்யப்படும் காரியங்களை உணர்த்தின. ஊக்கமுடையார் என்பதற்குத் தம் வலிமிகுதியை எடுத்துச் சொல்லார் என்றலுமாம். ஊக்கம் உறுப்பினால் ஆராய்தல் என்பதற்கு வலிமிகுதியைக் கண் தோள் மார்பு

முதலிய உறுப்புகளால் ஆராய்தல் என்று உரைப்பினும் அமையும். ஊக்கம் வலிமிகுதியென்று பொருள்படலை "ஊக்கமுடையான ஒடுக்கம்" என்னும் குறள் உரையிற் காண்க

அமைச்சரின் இலக்கணங் கூறுமிடத்து அவர் "பகைவர் சூழ்வனவற்றைத் தாமறிந்து அழித்து, அவர் அறிந்து அழியாதன தாம் சூழ்வர்" என்ற பரிமேலழகர் விசேடவுரை நினைக்கத்தக்கது

197 கறையானால் தின்னப்பட்ட ஆலமரத்தை அதிலே பிறந்த அதன் வீழ் ஊன்று கோலாகத் தாங்கினாற்போல, தன்னுடைய பிதாவுக்கு ஒரு குற்றம் தோன்றினவிடத்து மைந்தனானவன் பாதுகாக்க அது கெடும் எனக் குதலைமை, தளர்ச்சி

198 யானையினுடைய புகர்முகத்தைப்பிளந்து புண்படுக்கும் கூரிய நகங்களையும் வலிய முயற்சியினையுமுடைய சிங்கத்தை ஒத்த வலிமையுடையவர்கள் தாம் செய்கின்ற உத்தியோகத்திற்கு அழிவு வந்து வீட்டிலே யிருக்கத்தக்க கேடுவந்தாலும், பானை கெடத்தக்க காரியங்களைச் செய்வாரோ? செய்யார் எனக் இல் இருக்க என்றபாலது இலவிருந்து என்க திரிந்து நின்றது தலை வருதல். முடிவடைதல் 'தலைப்போகன்மையின்' என்பது புறம் (223) னோன்றுள், வலிய காலுமாய "ஆளி, புயாநுதல் யானைப் புகர்முகத்து ஒற்றி, வெண்கோடு புய்க்கும்" என்று பயிலுதல் உண்மையால், அரிமா யானையை அடித்தலை அறிக (அகம் 252)

199. இனிய கரும்பிலே பிறந்து, திரண்ட அடியையுடைய குதிரையின் பிடரிமயிர் போலும் அதன் பூவானது தேனோடு கூடிய வாசனையை இழந்தாற்போல மிக உயர்ந்த குலத்திற் பிறந்ததனால் என்ன பயனுண்டாம்? தன்னுடைய பெயரை நிலை நிறுத்தும் மிக்க ஆண்மையிலலாவிட்டால் எனக் பெயர் பொறிக்கும் பேராண்மையாவது நடுகலிடத்துப் பெயரும் பீடும் எழுதி, பீலி சூட்டிப் பூசிக்கப் பெறுதல் இமயத்தில் புலியுங் கயலும், வில்லும் பொறித்தல் போன்றதுமாம் பெயர் பொறித்தற்கு ஏதுவான ஆண்மை எனக

200 பெரிய செல்வத்தையுடைய முத்தரையர் என்பார் மிகவும் சந்தோஷத்துடனே கொடுக்கிற கறியோடு கூடிய

சோற்றை முயற்சியில்லாத கயவர்கள் விரும்பிப் புசிப்பர் தாம் மிக விரும்பிச் செய்யும் உத்தியோகத்தினாலே வந்த புலவரிசிக் கூழும் மேலோருக்கு அமிருதமாக இருக்கும் அவர்கள் கருணைச் சோறு என்ற பெயரையும் கேட்டறியார் என்க

முத்தரையர் என்ற பெயருடையார் இந்நூல் செய்தார் காலத்து விளங்கிய சிற்றரசர் வகுப்பினர் என்ப "தம்மில் இருந்து தமது பாத்து உண்டற்றால் அம்மா அறிவை முயக்கு" என்னும் குறளோடு இப்பாடலை ஒப்பிடுக



2 'நட்பியல்' என்பது அரசர்க்கு அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றற்கும் துணையாகிய நட்பினரது திறன் கூறும் இயலாம் அரசர்க்கு இன்றியமையாதனவான அங்கம் ஆறனுள் நட்பு ஒன்றாதலாலும் அஃதில்வழி அரசன் நீதி செல்லாதாதலாலும், இவ்வியல் வேண்டப்பட்டது அரசனது அங்கம் ஆறாவன "படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும்" இவ்வியலுள் உறவினரைத் தழுவுதலும், நட்பினரைச் சோதித்தறிந்து நட்டலும், நட்டபின் ஒருகாலத்து அறியாமையால் அவர் செய்த பிழையைப் பொறுத்துக் கோடலும், தீயநட்பினரை ஒருவுதலுமாகிய உபாயங்கள் கூறப்படும் அவற்றுள்,

(21) 'சுற்றந்தழால்' என்பது, அரசன் தன் கிளைஞரைத் தன்னின் நீங்காமல் அணைத்தல் மந்திரச்சுற்றமும் அடங்குதற்குப் பொதுப்படச் சுற்றமென்றார் 'திரியாச் சுற்றமொடு முழுது சேணவிளங்கி நடுக்கின்றி நிலியர்' (புறம் 2) என்று அரசர் ஓம்படுத்துக் கூறப்படுதலின், இச்சுற்றமும் ஒருதலையாகத் தழுவற்பாலதாம் தாளாண்மையுடைய அரசர்க்கே இது கூடுமாதலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது

"பகைவர் கையார் அடிபட்டுவந்தடைந்தவர்களையும், கருப்புக் காலங்களிலே உண்ண உடுக்க இல்லாமல் வந்தடைந்தவர்களையும் கைவிடாது, அவர்கள் துக்கத்தைப் பரிகரித்தலும் தம்முடைய உறவின் முறையார்களும், கிளையிலுள்ளார்களும் தீங்குற்ற காலத்து, அத்தீங்கு தமக்கு வந்ததுபோல எண்ணிப் பரிகரித்து வருதலும் ஆம்" என்பது ஒரு பழைய உரை

201 கருப்ப முற்பத்தியான காலத்திலே மசக்கை என்ற நோவும் பிறகு கருப்பத்தைச் சுமந்திருக்கிற வருத்தமும் பிள்ளையைப் பெறுகிறபோதுள்ள நோவும் இவை முதலான துக்கங்களும் மடியிலே கிடக்கிற பிள்ளையைக் கண்டவுடனே தாய் மறந்தது போலத் தான் தனியளாயிருந்து தளர்ந்த துக்கமெல்லாம் க்ஷேமம் விசாரிக்கிற தன்னுடைய சுற்றத்தாரைக் காணவே கெட்டுப்போம் எனக.

வயா, வேட்கைப் பெருக்கம், அஃதாவது "கருப்பத்தாங்கி வருத்தமுற்று, நுகரப்படும் பொருண்மேற் செல்லும் வேட்கை" என்பார் நச் (தொல் சொல் சூ, 371) கவான் - பக்கமுமாம் அசைதல் - தங்கியிருத்தல், தளர்தலுமாம் ஈன்ற அக்காலென்பது ஈன்றக்கால் என அகரம் தொகுத்தது செய்யுள் விகாரம்

202 வெயில் மிகவும் கடுமையாய்க் காய்கிறபோது மரமானது அந்த வெயிலையெல்லாம் தான் மேலே பொறுத்துக் கொண்டு, தன்னண்டையிலே வந்தவர்களுக்கெல்லாம் ஒருபடியாக நிழலைக் கொடுத்து அவர்களுடைய தாபத்தைப் போக்கியும், பழுத்த மரம் பலருக்கும் அநுபவமாவதுபோலத் தன்னுடைய திரவியங்களைப் பலரும் அனுபவிக்கப் பண்ணி, அவர்கள் வருத்தத்தை நீக்கித் தான் வருந்தி வாழ்கின்றதே நல்ல முயற்சியையுடைய புருஷனுக்கு லக்ஷணமாவது எனக அழல், சூரியவுஷ்ணம் 'அழனமேயந் துண்ட நிழனமா யியவு' என்பது அகம் 395 நேரொத்தல் - ஒருபடியாக எல்லார்க்கு மொத்தல்

203 ஒன்றன்மேலொன்றாக அடுக்கிய பக்கமலையையுடைய நாடனே! தம்மைச் சேர்ந்தவரைப் பெரியோர் தாங்கமாட்டோம் என்னார்கள் அஃதென்போலவெனில் மேன்மேலும் கனத்த காய்களைப் பலவாகக் காய்த்தாலும் தன் காயைப் பொறுக்கமாட்டாத கொம்பில்லாதவாறு போல எனக எடுத்தல், நிலையினின்றும் உயர்த்துதல் எடுக்கலம் என்பது எடு என்ற பகுதியும் கு என்ற சாரியையும் பெற்று எடுக்கு என்றாகி, பின்பு எதிர்மறை இடைநிலை அல்லும், தன்மைப் பன்மை விகுதி அம்மும் பெற்று உகரங்கெட்டு அகரமேறி முடிந்தது யாம் எடுக்கமாட்டோம் என்பது பொருள் வன்காய் என்பதில், வன்மை பெருமையையும்

கனத்தையும் உணராததிறறு தமசோநதார எனற் பாலது தன் சோநதார எனறு ஒருமைப் பணமை மயக்கமாய வநதது. பெரு மலையானது அடுக்கிய பல மலைக கறகளைத தன சிகரததது ஏறறி வைததுக கொணடிருததல் போலத தன சுறறததை உயாததுதல பெரியோாக்கு அழகெனபது தொகைமொழி "தொகைமொழி எனினும சுருக்கமெனினும ஒக்கும்" (வீர அலங 11)

204 உலகததார அறிய முடிய நட்புக்கொணடாலும், சிறி யவாகளுடைய நட்புச சிலநாளொழிய நிலலா, தளாசசி யிலலாதாருடனே கொணட நடபானது தாம கொணட தவமாகிய நெறிககோரிடையூறு வருஙகாலததும அதறகுத தளராமல நிறகிற பெரியோா நிலைபோல நிலைகெடாமல நிறகும எனக ஒலகுதல - தளாதல நட்பு நிலலாவாயச சிலகாலமே நிறகும எனலுமாம இது தழுவககூடாத நடபினரை விலகக வேணடுமென்றும தழு வககூடிய நட்பினரை அணைததல வேணடுமெனறும கூறிய முகததால பெரியோருடன கொணட நடபு நனனெறியில உயககுமெனறு குறிபபிததாராயிறறு

205 இவா நலலவா இவா பொலலாதவா, இவா எமமைச சோநதவா இவா அனனியா எனறு சொலலபபடட பேசசே சிறிதும இலலாதவராகும இயலபுடைமையினாலே, தளாநதா துனபஙகளை ஆராயநது, அவரைச சென றுகிடடி அநதத துனபங களை நீககுவாா யாவாசிலருணடோ, அவா எலலாாககும பெரியவா ஆதறகு உரியாாளென்க நலலோா தீயோா எனற வேறறுமைஇனறி இடா உறறுழி உதவுக எனபதாயிறறு சிறறினததாா கேணமை தீபபயன தருமெனறு கீழபபாடலகளிலெலலாங கூறிவநத ஆசிரி யா இபபோது நலலாா பொலலாா யாவரையும ஒருபடியாகக கருதி இடாதீககக எனறது எனனையோவெனின, இறபபச்சிறநதா ஞனை ஒா இறைவன தீயினததாலே தீஙகுறலும நலலினததாலே நலனுறலும இலனுயத தன பெருவலியின முனனே மறறையாா பெருமையை, விளககுமுன இருளபோல மாயவிகக வலலன என பதை உணாததறகெனக அஃது இலஙகையாா வேநதனை இரா வணன போரிலே தன சேனை முழுவதுமபடத தனியனாய அகப படடகாலதது, அவனது நிலைமையை நோககிய இராமன அவனை

வதைபபதைவிட்டு 'நீ இனறுபோய நாளை நின சேனையோடு வா' என விடுதது உதவியதுபோலும ஊராணமையாகும தனபந துடைபபார யாா எனபதூஉம பாடம இனனா எனபது இனி மையெனனும பணபடியாகப பிறநத குறிபபுமுறறு இதக்கை யா எனறு பொருளபடும இனியா எனபது ஈணடு இனனரின வேறுஉ தீயா எனறு பொருளபட்டு நினறது

206 பொனனின கலததிலே புலிநகததைப போலே வெள ளையான சோறறை மிகவிட்டு, சாககரையும போகட்டுப பாலும வாாதது அனனியா உணபிகக அவா கையிலே மனங கைதது உணடலினும, உபபிலலாத புலவரிசிக கூழைத தன உயிாபோலு மிருககிற சுறறததாா பககலிலே எநதக கலததில வாாததுச சிறிதளவு குடிததாலும மனம திருபதியடையும எனக

அமராா தம மனததே கைககத தாம உணடலினும என றும, அமராா கைததாகிய புழுககலை உணடலினும எனறும கூறலு மாம முனனையதில கைதது எனபது எசசத திரிபு பெயதல - மிகச சொரிதல பொறகலததிறகு மறுதலையாய எககலததானும எனற துணையால, கலம யாதுமினறிக கையே கலமாகக கூழை உறிஞசிக குடிததாலும எனறும கொளக புழுககல - புழுககிய உணவு புலியுகிா போனற புழுககல ஆவது - பிடிததால அடஙகி, விட்டால வெவவாறாகும அனனம எனபது ஒரு பழைய உரை இததகைய அனனததைச சாககரையும பாலுங கூட்டி யுணணும உணவின சிறபபினையும, மிகக நீரை யூறறித தளரக காயசசிய கூழை உபபும இனறி உணணும உணவின இழிவையும விளக கினறா புறகைககு 'தயஙகுநீாத தணபுறகை' 'நெடுநீாபபுற்கை'என னும அடைகள கொடுககபபடுதல காணக (நால 210, புறம 64)

207. காலததாலே உபசாரததோடு, இட்டாலும, பகைவா வீட்டிலே இட்ட இனிய கறிசசோறு வேமபுபோலவிருககும அநதி வேளையிலே உறவின முறையாா ருசியறற இலைககறியை இட்டாலும அவரிடததிலே அது ருசியாயிருககுமெனக நாள வாய, விடியறகாலையில வெஙகருனை - சூடான கறியுணவு எனலுமாம வேளாணமை வெஙகருனை, ஒபபுரவு செயது இட்ட விருமபததகக கறிசசோறு எனலுமாம

208 கருமானுடைய செம்மட்டியைப் போல வெறுப்பில்லாமல் தினந்தோறும் நன்மை போலவும் ஹிதம்போலவும் சொல்லிப் பதம்பண்ணி உண்கின்ற சில உறவினர் நெருப்பிலே இரும்பைப் போகட்டுத் தான்மாத்திரம் திரும்பி வருகிற குறடு போலக் கைவிட்டுப் போவார்கள், அக்கருமானுடைய உலையாணிக் கோலைப்போலத் தம் உறவின்முறையார் எரிகிற நெருப்பிலேயும் முழுகுமவரே நட்பினர் என்று சொல்லத் தக்கார் எனக

கொட்டியுண்டலாவது தானம் போட்டு உண்டல், அஃது பிரபுக்களுக்கு இச்சகம் பேசி வயிறு வளர்த்தல் "இச்சை பல சொல்லி இடித்து உண்கை" என்றார் பிறரும் கொட்டுதல் - தானம் போடல் என்னும் பொருட்டாதலை 'கொட்டி அளந்தறி யாப் பாடலும்' (திரிக 57) என்பதனால் அறிக பதம் பண்ணும் தொழிலையுடைய செம்மட்டிக்கு வஞ்சகர் உவமை கூறப்பட்டார். சுற்றத்தார் துன்புறும்போது தாமும் துன்புறுதலே சுற்றந்தழுவுத லினிலக்கண மென்றாராயிற்று தம் உயிர்த்தோழனை வேள்பாரி மூவேந்தர்களாலும் வஞ்சித்துக் கொல்லப் பெற்றபோது கபிலர் பிரிவாற்றாது வடக்கிருந்து உயிர்துறந்த புறப்பாட்டு வரலாறு ஈண்டு சிந்திக்கத்தக்கது.

209 நல்ல வாசனையை யுடைத்தா யிருக்கிற பூவினாலே கட்டப்பட்ட குளிர்ந்த மாலையையுடைய பெண்ணே! ஒரு நட்பினருக்கு ஒரு நட்பினர் இறக்குமளவும் இம்மையில் அவர்களுடனே இன்புறுவன வற்றிலே இன்புற்றெழுந்து அவர் துன்புறுவன வற்றிலே தாமும் துன்புறாது போனால் அவருக்கு மறுமையிலே செய்யும் உதவிதான் யாதொன்றுண்டு எனக

அரசர்க்கு 'துணைநலம் ஆக்கந்தரூஉம்' என்றபடி நட்பினரால் எய்தற்பாலன அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுமே யாதலாலும், அவை இம்மையிலேயே எய்துவன வாதலாலும் நட்டார்க்கு ஒரு நட்டார் மறுமையிற் செய்வது ஒன்று மில்லை என்றார்

210. தம்பால் விருப்பில்லாதார் மனையிலே வேறுயிருந்து உண்ணுகின்ற காட்டுப் பூனைக் கண்போன்ற ஒளியும் ஸ்வேகோத

ணமுமான கறியுணவும வேமபுபோலே கைககும தன்னைத் தான் விரும்புவது போன்ற விருப்பமுடைய சுற்றததா மனை யில் தளுபபத தளுமப நீா கூட்டி அட்ட பழைய குளிாநத கூழம எலுயபு அளவும் சென்று இனிககும அமிாதமாகும எனக வேறு இருநது உண்டலாவது "வாயாா பெருநகை வைகலும" நகாது மனம வேறுபட்டு உண்டல். வெருககுககண ஒளியுடைத தென்பது "வெருகிருளைககி யனன கதிாவிடு." எனனும அகப்பாட்டானுணாக (73) புற்கை, மிகக நீா கூட்டி யடப பட்ட கூழ் எனபது கீழ் 206 ஆம பாடலினும கூறபபட்டது காணக தயஙகுதல, அசைதல எனறும எனபோடு இடைதறகுக காரணமாகிய அமிழ்தம எனறுமாம என்பு, உடமபு (குறள 72)

(22) "நடபாராயதலாவது ஒருவருடைய பல குணஙகளையும ஆராயாமல விரைநது நட்புக கொணடவா பினபு அவா பால ஒரு குற்றங கண்டவிடததுு நடபுவிடுதல, "விலங கிற்கும விளளல அரிது" எனறபடி இழிவாதலால நட்புக கொளளுமிடததுக குடிபபிறபபும ஒழுககமும குணமும நனமையும வாயமையும பழுதுசெயயாத தன மையுமாகிய இவைகளை நனகுக ஆராயநது நடபுச செய தலாம கீழதிகாரததிற கூறிய சுற்றததாாபோல நலல நட்பினரும அரசாககு அறம பொருள இனபஙகளுககுத துணையாக இருததலின, இது சுற்றநதழாலின் பின வைக கபபடடது

211 நட்புக கோடலின கருததினை உணாநதும, கலவி கற்றும அறிநதவாகளுடைய நடபு, கருமபின குருததிலிருநது அடிவரையில் தினறுறபோல நாளுககு நாள ருசி யதிகரிததுக கொணடேவரும இனிமைக குணமில்லாதவருடைய நட் பானது அககருமபின அடியிலிருநது குருததிற்கு நேரே தினறு கொணடு போனதுபோல நாளுககு நாள ரஸம குறைநது கொண்டே வரும எனக

நடபுக கோடலின கருததினை யுணாலாவது, 'நகுதற பொருட்டனறு நட்டல் மிகுதிககண் மேற்சென றிடித்தற்

'பொருட்டு' என்று உணர்தல் கற்றறிந்தாரின் கருத்தினை அறிந்து அவரோடு கொண்ட கேண்மை யெனினும் பொருந்தும்.

212 பொன்னைக் கொழித்து அருவி விழுவதனாலே பக்ஷிகளெல்லாம் பறந்தோடுகின்ற பூக்களையுடைய மலைநாடனே! நல்ல குடிப்பிறப்பைக் கருதி, 'இவர் நடுவே வேறுசாதவர்' என்று ஒரு பக்ஷமாக நட்புக் கொண்டதேயல்லாது மற்றொரு பக்ஷமாகிய மனத்தினை நன்கு ஆராய்ந்தறிந்து நட்புக் கொள்ளப் பட்டதொன்று அன்று எனக.

நல்லிற்பிறப்பு என்று கூட்டுக. மனத்தால் குடிப்பிறப்பு மனந்தூய்மை என்ற இருபக்கமும் ஆராய்ந்து அறிந்து நட்புக் கொள்ளப்பட்ட தொன்றல்லாததாய, நல்லிற பிறப்பொன்றே எண்ணி, இவர் இடையில் திரியார் என்று கொண்ட நட்பு நன்மை அல்லாதது ஆகும் என உரைப்பினும் ஆம் கெழு கேழ் என் றுயப் பொருந்துதலை உணர்த்திற்று (தொல் சொல் சூ 303 நச உரையை நோக்குக) பொன்னோடு பொருந்தி என்பது பொருள். மலையிடத்துப் பிறந்த அருவியானது நீரைக் கொழித்தலை விட்டு ஒரு காலத்துப் பொன்னைக் கொழித்து விழுந்து, பக்ஷிகள் அஞ்சி இரிதற்கிடனாதல் போல நற்குடியிற் பிறந்தோரும் ஒரு காலத்து வெருவத் தக்கன செய்தல் கூடுமென்பது தொகை மொழிப் பொருள் "குடிப்பிறப்பு ஒன்றனையுங் கொண்டு நட்புக் கொள்ளாமல் அவர் மனத்தினையுந் தீர ஆராய்ந்து நட்புக் கொள்ள வேண்டும்" என்பது ஒரு பழையவுரை. அதற்கு உதாரணம் அடுத்த பாட்டிற் கூறுவர் மனமறிய, மனம் அறிந்த தனாலே என்று காரணப் பொருட்டாய் வந்தது.

213 யானையைப் போலே இருக்கிறவர்களுடனே கொள்கிற நட்பை விட்டு நாயைப் போலே யிருக்கிறவர்களுடைய நட்பினைக் கொள்ளக்கடவன். யானை தனக்குக் கவளம் இட்டு வளர்க்கிறவனையே ஒருகாலத்தில் கொல்லும். நாய் தன்னை வளர்க்கிறவன் எறிந்த வேல் தன் உடம்பிலே பட்டு உருவாநிற்கவும், தன் வாலைக் குழைத்து அன்பு பாராட்டும் எனக.

இது ஒருவரை நட்புக்கொள்ளுமிடத்து அவருடைய உயர் குடிப்பிறப்பினையும் மனந்தூய்மையையும் நோக்கவேண்டுமென

ராம், குடியும் குலமும் உண்டென்று நட்புக் கொள்ளாமல் அவர் மனத்தினை நன்றாய் ஆராய்ந்து மனந் தூயரா யிருப்பின் குடியும் குலமும் இல்லையாகிலும் நட்புக்கொள்க என்றுமவிதித்தாராயிற்று

"பெருமையும் சிறுமையும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்து (285) கழியச் சிறிதாக உவமித்தற்கு 'யானை யனையவர் ... வேண்டும்' என்பதனைக் காட்டினார் பேரா 'நட்புரீஇ' என்றும் பாடம் அறிந்தறிந்தும், நன்றாய் அறிந்தும்

214 மனத்தினாலே ஒருநாளும் நட்புக்கொள்ளாதவர் எந் நாளும் தம்மருகில் இருந்தாராகிலும், நட்பினராகார் தம் நெஞ்சிலே எந்நாளும் சினேக பந்தம் உடையார் தாம் கொண்ட நட்பினைத் தந்நட்டோர் தம்மை விட்டு அகன்று பலநாளும் தூரத்திலுள்ளார் ஆயினும் கைவிடுதலில்லை எனக

நட்புக்குப் "புணர்ச்சி பழகுதல் வேண்டா, உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும்", (குறள் 785) "தூரந்தொழுகிக் கண்ணுந் துணைகள் துணைகளே, சாரந்தொழுகிக் கண்ணுஞ் சலவர் சலவரோ" (திரிக 51) என்பன ஈண்டு சிந்திக்கத்தக்கன

215 கொம்பிற் பூத்த பூப்போல மலர்ந்து பின் குவியாது தலைநாளிலே நட்புக்கொண்ட சந்தோஷம் போல இருக்கிறதே நட்பாகும் தோண்டிய குளத்திலே யிருக்கிற தாமரை அல்லி ஆம்பல் முதலிய பூக்களைப்போல முன்னம் மலர்ந்து பின்பு முகுளிதமாவதுபோலக் கண்டபோது சந்தோஷமாக நட்புக்காட்டிக் காணாதபொழுது இகழ்ந்து பேசுகிறவர்களைப் பெரியோர் விரும்புவதுமில்லை நட்புக்கொள்ளுவதுமில்லை எனக

கோடு, கிளை கூம்புதல், குவிதல் வேட்டல், நட்புக் கோடல் தொடுதல், தோண்டுதல் தொட்ட என்பது தோட்ட என நீண்டது பின்னையதான கூம்புதல், இகழ்தல் என்று பொருள் பட்டது 'உலகந் தழீஇயது ஒட்பம் மலர்தலும் கூம்பலு மில்லது அறிவு' என்னுங் குறளுரையில் இப்பாட்டின் கருத்தினை உரைநடையில் மடுத்தனர் பரிமே

216 கடையான அதமருடனே கொண்ட சினேகம் பாக்கு மரத்துக்குத் தினம் நீரூற்றுவது போல எந்நாளும் பிரியனு

சொல்லி ஆகவேண்டும்; மத்திமருடனே கொண்ட சினேகம் தென்னைமரத்தைப் போலச் சிலநாள் பின்னே திரிந்து ஆக வேண்டும், உத்தமருடனே கொண்ட சினேகம் பனைமரத்தைப் போல ஒரு நாள் கண்டு பேசியபோதே அமையும் எனக்

தொன்மையுடையாராவார் நற்குடியிலராயினும் மனம் தூய மையாகிய சிறப்பினை உடையார் எண்ணரும் பெண்ணை என்றது, பனைக் கமுகு தெங்குகளைப் போல மக்களால் மதிக்கப்பட்டிருத்தல். எண்ணுதல் - மதித்தல் அருமை, ஈண்டு இன்மைமேற்று. பனங்கிழங்கினை நட்டவர் பின்பு அதற்கு நீருற்றி வளர்க்க வேண்டுவதில்லை தென்னைக்குச் சில வருஷங்கள் நீர் ஊற்றியே வளர்க்கவேண்டும் பாக்கினுக்குத் தினம் நீரூற்றவேண்டும்

217 கமழ் நீரிலே வெந்த பசுமை இலைக்கறியானாலும் நட்பினர் கையிலே ஒருவன் பெற்றால் அது சிறந்ததான அமிர்தம் போல இருக்கும் சிறந்த தாளிப்போடும், துவையலோடும் பொருந்திய வெள்ளைச் சம்பாச்சோறே யாயினும் விரும்பாதவர் கை யகத்து உண்டால் எட்டிக்காயைப்போலாகும் எனக் கமட்டுகள் ஆம் இலைக்கறியினும் இழிந்த கறியை உணாததிற்று குய, தாளிப்பு, "குய்கொள் கொழுந்துவை" என்றார் புறத்தினும் 160

218 நாயின் காலவிரலைப்போல மிகவும் சேர்ந்திருந்தாலும் ஈயின் காலளவுச் சிறுமையும் உதவி செய்யாதவர்களிடம் நட்பு என்னபயனும்? வயலால் தனக்கு ஒரு பயனும் இல்லாவிட்டாலும் தூரத்திலே யிருக்கிற தண்ணீரைக்கொண்டுபோய் அந்த வயலுக்குப் பாய்ச்சி, அதனை விளைவிக்கும் வாய்க்கால் போன்றவர் நட்பினை. அவர் தூரத்தே யிருந்தாலும் செய்து கொள்ளவேண்டும் எனக் ஈக்கால், ஈச்சிறகு என்பன மிகச் சிறுமைக்கு ஆகா அளவு

219 மனம் சுத்தமில்லாதாரிடத்துக் கொண்ட நட்பினும் பகை நல்லது மருந்திலே தீராத வியாதியை அனுபவித்தலினும் சாதல் நல்லது ஒருவனை நெஞ்சுநோவ வைவதினும் கொல்லுதல் நல்லது இல்லாத குணத்தைப் புனைந்து சொல்லிப் புகழ்தலினும் வைதலே நல்லதெனக

220 பலருடனே மருவிப் பலநாளும் கலந்து நடந்து ஆராய்ந்த பின்னர் பொருளாகத் தக்கவரை நட்புக் கொள்கிறது

ஒருவனுக்கு உறுதியாகும் பல்வினாலே கடித்துப் பிராணனைப் போக்கும் பாம்புடனேயும் நட்புக்கொண்டபிறகு அதை விடுகிறது முனத்திறகுத் துன்பமா யிருக்குமாதலால் எனக.

தன்னோடு நட்ட நாகராஜனை தக்ஷகனை இந்திரன் ஜனமே ஜயனது யாகத்தீயில் விட்டுவிட அஞ்சி அவ்வா வரசனுடன் தானும் அத்தீயில் விழுந்தழியத் தீர்மானித்து விண்ணுலகினின்றும் இழிந்தனனென்னும் புராண கதை ஈண்டு நினைக்கத்தக்கது. பரிதல் - அறுத்தல். ஈண்டுக் கடித்தல். மருவி, பொருவி, பரிந்து, மருவி, என்பன நான்கு மாத்திரை அளபெடுத்தன (தொல் எழுத்து. 6 நச் உரை)

(23) 'நட்பிற்பிழை பொறுத்த'லாவது, தாம் நட்புக்கொண்டவர் பொல்லாத காரியங்களைச் செய்தாராயினும், அவர் அறியாமையால் செய்தாரென்றுதல், தம்மிடத்திலே விசுவாசத்தினாலே செய்தாரென்றுதல் கொண்டு அவர் செய்த குற்றங்களைப் பொறுத்தல்

221 ஒருவர் நல்லவரென்று, தாம் மிகவும் விரும்பி நட்புக் கொள்ளப்பட்டவரிடத்து ஒரு நட்புமில்லையாயினும் அதனைப் பிறரறியாமல் அடக்கிக்கொண்டு போகக் கடவர் அஃது என் போல எனனின் நெல்லுக்கும் உமியை அடக்கிக் கோடல் உண்டு, நீருக்கும் நுரையை அடக்கிக் கோடலுண்டு; பூவிற்கும் புறவிதழை அடக்கிக் கோடலுண்டாயவாறு போல எனக.

'உயிரை ஆக்கும் நெல்லும் நீரும்' என்றும் 'நெல்லுயிர் மாந்தாக நெல்லாம் நீருயிர்' (புறம் 186 உரை சிந் 2908) என்றும் சிறப்பித்துக் கூறப்படும் நெல், நீர் என்ற இரண்டும் மங்கல மாதலோடு நாற்றமுடைமையும் காலத்தின் மலர்தலும் வண்டிற்கு நெகிழ்தலும் கண்டோருவத்தலும் விழையப்படுதலு முடையதாய சிறந்த பூவும் சிறப்பில்லாத உமி, நுரை, புறவிதழ் என்ற தம் அங்கங்களை அடக்கிக்கொண்டிருத்தல்போல அரசனும் சிறப்பில்லா தவராயினும் தன நட்பினரைத் தழுவிக்கோடல் வேண்டுமென்று ராயிற்று உமியுண்டு, நுரையுண்டு, புறவிதழுண்டு எனபனவற்றிற்கு உமியை அடக்கிக் கோடலுண்டு, நுரையை அடக்கிக் கோடலுண்டு, புறவிதழை அடக்கிக் கோடலுண்டு என்றுபொருள்

தந்து உரைக்கப்பட்டது நெல்லிற்கு என்னுமிடத்துச் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

222 கட்டுகிற கரையைத் திரும்பத் திரும்ப உடைத்துக் கொண்டுபோகும் தண்ணீரை நச்சிப் பிழைக்கின்றவர் அந்த நீருடனே பிணங்கிக் கொண்டிரார்; பின்னை யந்த நீரைப் போக வொட்டாமல் அணைபோட்டுக் கட்டுவார்கள் அப்படிப்போல் தாம் வெறுக்க வெறுக்கத் தீயன செய்தாராயினும் தாம் வேண்டி ஆக்கிக்கொண்ட நட்பினார்களைப் பொறுத்துக் கொள்வார்கள் எனக. செறுதோறு என்பது செறுந்தோறென்று வலிமிக்கு நின்றது. செறுதல், தடுத்தல் வயல்தோறும் எனினும் அமையும், செறு, வயல் உம்மை விகாரத்தாற்றொக்கதெனக் செம்புனல் என்றார் உழவர்க்கு மிகவும் ஆவசியகமான புதுப்புனலை புதுப்புனலைக் கண்டு உழவர் களி சிறந்து ஆர்த்தலும், அரசர் விழவு அயர்தலும் தமிழ்நாட்டு வழக்கு இதனை, 'உழவர் ஓதை மதகோதை உடைநீரோதை தண்பதங்கொள் விழவர் ஓதை சிறந்தார்ப்ப' என்னும் சிலப் கானல்வரிப் பாட்டானும், 'மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக் கலிகொள் சுற்றமொடு கரிகால்காணத் தண்பதங்கொண்டு' என்னும் 276 ஆம் அகப்பாட்டானும் (தண்பதங் கொள்ளல் - புதுப்புனலாடல்) வையையைப் பற்றிய பரிபாடற் பாட்டுக்களானும் பிறவற்றானும் அறிக முன்னையதான வெறுப்ப - வெறுக்கத்தக்கன, பின்னையதான வெறுப்ப - மிக எனலுமாம்

223 பொன்னைப்போல நிறத்தையுடைய கோங்கமலரிலே அழகிய வண்டுகள் ஆரவாரிக்கும் உயர்ந்த மலைநாடனே! மிகவும் பொல்லாத காரியத்தைத் தன்னுடனே நட்புக் கொண்டவர் செய்தாராயினும் பொறுக்கத் தகுவதொன்று அன்றோ? என்னெனில் ஒருவர் பொறுக்கவே இருவர்க்கும் நட்பு உண்டாகுமாதலால் எனக.

உயர்வரை வினைத்தொகை உரு, வடிவழகு, உருவ என ஈறு திரிந்தது (அகம் 1 உரை தொல் சொல் 302. நச) தன்னிடத்துள்ள தேனையெல்லாம் நுகர்ந்து தன்னை யிறுதியிற் றுறக்கும் வண்டினுக்கு நெகிழ்ந்து, பின்னையும் பல புதுமலர்களை ஊழ்த்து அதனை நுகர்விக்கும் கோங்குபோல அரசனும் தன் நட்டார் செய

யும் மிகைகளைப் பொறுத்துக் காலங்களில் உள்ளம் நெகிழ்ந்து, உதவி செய்தல் கடனென்பது தொகை மொழியின்பொருள். தன வடிவழகாலே கோங்கினை மயக்குறுத்திய வண்டெனபாா உருவவண்டென்றா நிறக் கோங்கென்றது நலல ஜாதியைக் குறிப்பித்தது அதனை உபமேயத்தினும் பொருத்திக் கொள்க. கோங்கின நிறம பொனனை ஒக்குமெனபதனை 'கோங்கின, காழுறக் கழனற கணகமழ பனிமலா, கைவிடு சுடாிறரேறுனறும்' (அகம 153) எனபதனுல அறிக

224 மடிகினற அலைகள கொணாநது ஒதுக்கிய தூய வெள் ளிய கிரணங்களையுடைய முத்துக்களைத் தீவிரமாக வருகினற கபபல் கரைகளிலே சிதறச்செய்யும கடறகரையை யுடையவனே! தமமால நடபு விட்டுவிடுதற கரியவா நறகுணஙகளை யுடையவ ரலலாதவராயின, அவா தம நெஞ்சினைச சுடுகிறதறகு மூடடிய தீயாவா என்க கபபல விரைநது கரையை நோககி வருதலால அலை பலமாயமோதி, கரையிலே ஒதுஙகிக கிடநத முத்துக்களைப பரதமாககள வாரிக்கொள்ள ஒட்டாமல சிதற அடித்தும, மீணடும கடலிலேயே மடுத்தும விடுகினறன என்றாராயிறறு கபபல இவ வாறு மனம நோவத தீஙகிழைத்தாலும, அது விடுதறகரிய தொன றுதல போல நட்டாரும இயல்பிலரேனும விடறகரியா எனபது தொகை மொழிப்பொருள

225 பொனனையும தானியத்தையும நலல வீட்டையும சுட் டுபபோட்ட நெருப்பினைத தினநதினம இருக்கிற விடநதேடிக கொணடு வநது வீட்டுக்குள்ளே வைத்து ஆக்கிக்கொள்ளுதலால பொலலாத காரியஙகளைச செய்தாராயினும விடபபோகாதவா களைப பொனனைபபோலே தக்கவிடத்து வைத்துச சோாவு படா மற காத்து அடக்கிக்கொள்ள வேணும எனக

'அலகுபத மிகுத்த கடியுடைவியனகா' என்றும, 'கூழுடைத் தநதை இடனுடை வரைப்பு' என்றும (அகம 49, 145) 'நெல் லுடைமை கூறியவதனுல', இலலிறகு அஃதுடைமையே நனமை யாவது பொன்னெடு கூடிய நலலில என்றமையால தன தானியங களும பிற சமபத்துக்களும நிறைநத இலலினைக கூறினாராயிறறு. பொனனும நலலிலலும சிதைநதமைக்கு இலலவா சோாவே

பின் உவாபபீனேக குறறமாக எண்ணுது விழுநதெழுநது ஒளிவிடு தலபோல அரசனும தன நட்பினா குறறததைத தானுந் தழுவிக கோடலவேணடுமென்பது தொகைமொழிப்பொருள்.

228 ஒலிககினற அருவியையுடைய நாடனே! அனனியர் செயத தீஙகுகள பிராணவாதை தருவதொன்ருயினும, ஆராயு மிடததது 'உறறபால தீணடா விடுதலரிது' எனறு, 'தன்னேயே தான நோவின அலலது' அவவனனியரை நொநது கொள்ளற் குத தகக காரணம யாதுளது? ஒனறுமிலலே அவ்வாறிருக குமபோது காதல பொருநதியவா செயத தீஙகுகள நெஞ்சத துளளே கிடநது சீரியவாகும என்க

செயத விழுமியவாம எனறபாலது விழுமிதாம எனறு பன மைககண ஒருமை மயஙகி வநதது. சீதாபிராட்டியாரைக கணடு திருமபி வநத வானரவீரரகள மதுவனததை அழிததாராயினும, அககுறறம சுககிரீவனுககுப போகயமாயிருநத தெனனும இராமா யண வரலாறு ஈணடு சிநதிககத தககது மலையினினறு வருபுனல ஒயாது ஒலிககினறதாயினும, மககள அதனே ஒா அழகாகக கருது வது போலக காதலா குறறஞசெயவாரேனும அதுவும ஒா சுவையேயாம 'பணணிய யாழொககும நட்டார கழறுஞ் சொல' (நான்மணி 100) எனபது பிறரும

229 தமா எனறு தமமால நட்புககொள்ளப பட்டவரிடத திலே தமரலலாமையைத தாம காணில, அவரைப பணடை நட்பினருளளும அகிபபாக தனககு மதிததது, அவா செயத குறறங களைத தம மனததில அடககிககொளக எனக 'தமமை' என புழி இரணடனுருபு தொக எழுனுருபின பொருள கொடுததுரைக கபபட்டது கீழபபாடலில தமா குறறஙகளைப போகயமாகக கொள்ள வேணடுமெனறா இபபாடலில அது கூடாவிடில, 'முகபட்டு அகநட்பு ஒரீஇ விடல' எனறா

230 ஒருவனுடைய குறறததினையும நலலகுணததினையும அவனே நட்புககொணடபின இது குறறம இது குணம எனறு சோதிததுககொண்டு திரிவேனுனல, நட்பினன கூறிய இரகசியத தை வெளியிட்டவன செல்லும தீககதியை நான் அடைக, அக

தேயன்றி ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த வையகத்தார் என்னை இகழ்க
எனக் 'என்மகன் இராமன் நாடிழந்ததற்கும் காட்டிற்கேகியதற்
கும் நீயே காரணம் என்ற கோசலைமுன் பரதன் செய்யும் சபதங்
களுள் 'மறைகாவா விட்டவன் செல்லுந்தீக்கதியை நான் அடைக'
என்று கூறி, அதன்பின் 'செய்ந்நன்றி கொன்றவன் செல்கதியை
நான் அடைக' என்று கூறலான் செய்ந்நன்றி மறத்தலோடொப்ப
இதுவும் பெரும்பாவமென்று கொள்ளப்படும் 'ஊழி பெயருங்
காலத்து யாவருஞ் செய்த இருவினையும் நீங்குதலின், அக்காலத்
தும் செய்தி (செய்ந்நன்றி) கொன்றோர்க்கு உய்தியில்' (புறம் 34
உரை) என்று கூறுவது நோக்கி, செய்ந்நன்றி மறத்தலின் பாவத்
தை உணர்க 'அருமறை காவாத நட்பும் ஒற்றுளெனப்படுவார்'
(திரி. 55) என்றார் பிறரும் இப்பாட்டில் நட்பின் ருசியறிந்த
ஒருவன் கூறிய வஞ்சினமொழி எனக்கொள்க

(24) 'கூடா நட்'பாவது குடியாலும் குணத்தாலும் ஆசாரத்
தாலும் தம்மனத்திற்கு ஒவ்வாதவரும் மனத்தாற் கூடா
திருந்தே, தம் காரியம் முடியுமளவும் புறத்தாற் கூடி
யொழுகுநருமாயுள்ளார்களது நட்பு இத்தகைய நட்பின
ரை அஞ்சி ஒழுகல் வேண்டுதலின் இது நட்பிற் பிழை
பொறுத்தலின்பின் வைக்கப்பட்டது

231 கரிய குன்றத்தினின்றும் மிக்க அருவிகள் விழுகின்ற
நீர்மலையையுடைய நல்ல நாடனே! தீய நட்பினர் தம் காரியம்
முடியுமளவும் கட்டுகள் எல்லாம் அற்றுப் பிரிந்த பழைய கூரை
யையுடைய வீட்டிலே மழைபெய்யும்போது ஒழுகுகிற தண்ணீ
ருக்குச் சேற்றை அணையாகக் கோலிக்கொண்டும், அந்த அணைக்
குள்ளே விழுகிற தண்ணீரைத் தம்மேல் ஏற்றும், அதிகமான
போது இறைத்தும் இடப்பார் எனக. செறித்தல் - பொருத்துதல்.
அஃதில்லாத கூரை, கட்டுப்பிரிந்த கூரை. கறை - கறுப்பு. சுனை
யாய் மலையில் தங்கியிருந்த நீர் மிகுதியான வழி அம்மலையைத்
திறந்து அருவியாய் வீழ்ந்துபோய் விடுவதுபோலப் புறத்தாற்
கூடிய நட்பினரும் தம் காரியம் முற்றியவழிப் பிரிவர் எனக.

232 வெள்ளிய அருவியையுடைய நாடனே! சீரியவருட
னோம் கொண்ட நட்பு மிக்க சிறப்பினையுடையதாய் மலையினுமேல

விளையுளைகள் மிக வுண்டாகுற்போல நன்மையைத்தரும சீரியவா அல்லாருடனே கொண்ட மிகக நட்பானது மழை பெய்யாக காலம்போல வறுமையாகவிருக்கும் எனக

மாரியால் என்னும் மூன்றனுருபு தொககது மாண்ட பயத தது என்பது பயம மாணடது என்று மாறறியுரைககபபட்டது

233 நுணணிதான அறிவினையுடையாரோடு உறவு செய ததிலுண்டான பயனை அனுபவித்தல விருப்பததிற றேவருல கததை ஒககும், நுணணிதான நூலை அறியமாட்டாதாராகிய பய னிலலாருடனே உறவுகொணட பயன் நரகததிலே அனுபவிக்கி றதுபோல விருககும எனக

நுகாதல - அனுபவித்தல விழைவிறறு - விருபபததையுடை யது- ஊதியம - இலாபம அது மககடபிறபபாகிய இலாபம ஒனறு - ஒபபு நுணணிதான அறிவினையுடையாராவா புலவா, 'தேவரனையா புலவா'' (ஞானமணி 75) எனபா ஆதலாவ, அவ ரோடு கூடி நுகாவுடைமை சுவாககபோகததை ஒககுமெனறா 'ஒருமைச செயலாறறும பேதை எழுமையும தான புககு அழுந தும அளறு' எனபவாதலால, நூலுணாசசியிலலாத மாககளோடு கூடுறவு நரகானுபவம போலும எனறா

234 அருகுதோறுஞ சநதனமரஙகள நிறைநத சோலையை யுடைய மலைநாடனே! மனததிலே நடபுக குணமிலலாதாருடனே கொணட உறவு வளருவதுபோலத தோனறி வைககோல நெருப புபபோல ஒருபொழுதும நிலலாமற கெடடுபபோம எனக

நநதுதல - ஆதலும, கெடலுமாகிய பொருளபடுவதோா சொல ஈணடுக கெடல எனறு பொருளபடடது, சாரல - பகக மலை, பநதம, கட்டு, சினேககக கட்டின ருசி எனக

235 செயயததகாத காரியததைச செயவதாகத துணிதலும செயயததகக காரியததைச செயயாமல நெடுகாள விடடுவைத்த லும நிசசயமாக இனபம வாததகக காரியததை யிகழதலும ஒரு வாககு அபபொழுதே துககததைககொடுககும எனக

'செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க செய்யாமை யானும் கெடும்' என்பதும், 'துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி இன்பம் பயக்கும் வினை' என்பதும் காண்க.

236 ஒரு குளத்திலே தோன்றி ஒருவழிப்பட வளர்ந்த விடத்தும் விரிந்த நன்மையையுடைய குவளையை ஆம்பல் சரி ஒவ்வாத் தன்மைபோலப் பெரியாருடனே உறவுகொண்டாலும், நல்ல குணமில்லாதார் காரியங்கள் வேறாயிருக்கும் என்க.

குவளை - செங்கழுநீர்ப்பூ. ஆம்பல் - வெள்ளாம்பல். யாமை வாளை கரும்பிற்கொண்ட தேன் இவற்றினோடு கூட்டிக் குவளை யானது மருதநிலத்து மக்களாற் குறிஞ்சி முல்லைகளாகிய வன்புலத்துத் தம் சுற்றத்தார்க்குப் பெறுதற்கரிய உணவாக விருந்திடும் சிறப்புடைத்தாகலானும், ஆம்பலரிசியுணவு தலைமழித்த கழிகல மகளிரும் அடைமதிற்பட்டோரும் அபராணத்தில் வருந்தியுண்ணும் இழிவுடைத்தாகலானும், குவளையை ஆம்பலொக்கலா எனப்பட்டது. இவற்றினை 'கீழ்மடைக்கொண்ட வாளையும்... . யாமையும் கரும்பிற்கொண்ட தேனும் பெருந்துறை குவளையும் வன்புலக் கேளிர்க்கு வருவிருந்தயரும்' (புறம் 42) என்றும், 'அளியதாமே சிறு வெள்ளாம்பல் பெருவளக் கொழுநன் மாய்ந்தெனப் பொழுது மறுத்த, இன்னா வைகல் உண்ணும் அல்லிப் படூஉம் புல்லாயினவே' (ஷ 248) என்றும், 'சிறு வெள்ளாம் பல்லி யுண்ணும் கழிகல மகளிர் போல' (ஷ 280) என்றும், 'செழுஞ்செய் நெல்லின் விளைகதிர் கொண்டு, தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி இடூஉம் கடந்து வாள்மருழங்கி வேந்தரோட்டிய பாரி' (அகம் 78) என்றும் வந்துள்ளவாற்றான் அறிக.

237 இளைய சிறுகுரங்கு முந்திப்போய்த் தன் தகப்பன் கொண்டுவந்த கனியைப் பயற்ற நெற்றைப்போலும் விரலாலே தெரித்துக் குற்றிப் பறிக்கிற மலைநாடனே! ஒருமை யில்லாதாருடனே கொண்ட உறவு பொல்லாதென்க.

முற்றல் - முற்றிய கனி. நெற்று - ஈண்டுப் பயற்றம் நெற்றினை உணர்த்திற்று. இது மந்தியின் விரல்போன்றிருத்தலால்

ஞெமிர்த்திடுதல் - தழும்பாகுதல், நெரித்தல், ஞெமுக்கிட்டு என்றும் முற்பட்டத்தாதையை என்றும் பாடங்கள்

238 என்னால் நட்புச் செய்யப்பட்டவன் தனக்கு ஒரு துன்பம் வருங்காலத்து என்னுடைய உயிரை அந்நட்புச் செய்தவன் கையிலே கொடேனாகில், நட்புச்செய்தவனது காதன்மையாளைக் காவலழித்தவன் புகக் நரகத்திலே புகக்கடவேன் பெரிய புகழையுடைய பூமியிலுள்ளவர்கள் என்னை சிரிப்பாராக என்க.

239 பசுவின் நெய்வார்த்திருக்கிற கலசத்திலே அந்த நெய்யைக் கொட்டிப் போட்டு வேப்பெண்ணெயை வார்த்து வைத்ததனோடொக்கும் தேன்படுகின்ற மலைநாடனே! நல்ல அறிவினையுடையவர் உறவைவிட்டுப் புல்லறிவாளருடனே நட்புக்கொள்ளுகிறதென்க

வேம்பு அடு நெய் - வேப்பங்கொட்டையைக் காய்ச்சிய நெய்

240 வடிவினால் நல்ல அழகையுடையவனிடத்து ஒப்புரவில்லாதது காய்ந்த பருகுவதற்கு அமைந்த பாலிலே நீரைக் கலந்ததனோடொக்கும் அறிவுடையவர் பொல்லாதவர்களைச் சேர்ந்து தீயராகுதல் நாகப்பாட்டு விரியன் பெடையோடே கூடினதோடொக்குமெனக

'நாகம் விரியன்பெடையுடனே புணர்ந்தால், அதின் வயிற்றிலே கற்பமுற்பவித்த அந்த நாகத்திற்கு ஆயுசு குறைந்துபோமாறுபோலப் பொல்லாதவனைச் சேர்ந்தால் நல்லவனும் கெட்டுப் போவான்' என்பது ஒரு பழைய உரை

3 'இன்பவியல்' லாவது இன்பம் எய்துதற்குரிய ஒழுக்கங்களைக் கூறும் இயலாம் அவை அறிவுடையாராதலும், அறிவின்மையின் நீங்கியாராதலும், நன்றியைப் பயக்கும் செல்வமுடையாராதலுமென மூன்றுமாம் நட்பினரை உடையாரே இன்பம் எய்துதற்குரியாராதலால், இது நட்பியலின்பின் வைக்கப்பட்டது

(25) 'அறிவுடைமை'யாவது "இயற்கையறிவினனாதலும், அறம் பொருளின்பம் வீடெனனும் நான்கினையும் நூல்சொன்ன முறைமையாலே அறிந்து அறிவுக்குத் தக்கதாக இம்மைக

கண் நடந்து மறுமைக்கு உறுதியாகிய காரியங்களைத் துணிந்தறிதலும், உலகவியற்கை யறிந்து உலகத்துக்குத் தக்கதாக ஒழுகுதலுமாம்."

241 பகைவர் இளைத்தவிடம் பார்த்துப் பெருமைக் குண முடையார் தாமாகவே தலையிறங்கிக் கொள்வார்கள் (அந்தப்பகை வரைக்கொல்லப் படையெடுத்துப்போகார்) ஆராயுங் காலத்து, சந்திரனை மறைக்கும் இராகு அந்தச் சந்திரன் பிறையா யிருந்த காலத்து மறையாது பூரண சந்திரனானபோது, மறைக்கும் என்க.

வீரரல்லாதார் மேலும், முதுகிட்டார் மேலும், புண்பட்டார் மேலும், மூத்தார் இளையார் மேலும் போர்க்குச் செல்லுதல் படை மடமாதலின் (புறம் 142 உரை), தகவுடையார் அது செய்யார் என்க. தகவு - பெருமை. தலைச்செல்லல் - மேற்செல்லல். அணங்குதல் வருத்துதல், அணுகுதல்.

242 குளிர்ந்த கடற்கரையையுடையவனே! தரித்திரரான மனுஷ்யருக்கு, அணிகலமாவது அடக்கமுடைமை. ஒருகால் வரம்புகடந்து அடக்கமின்றி நடந்தாராகில் தாம் வாழ்கின்ற ஊராராலே தம் குடி பழிக்கப்படுவார் என்க.

சீர் உயர்வு. மாத்திரை அளவு. 'சிறிய சுருக்கத்து வேண்டும் உயர்வு' என்பவானாலும், அவ்வுயர்ச்சிதான் அளவிறத்தலாகாது என்று விதித்தாராயிற்று.

243 எந்நிலத்திலே விதைத்தாலும் எட்டிவிதை தென்னை மரமாகாது. தென்னாடாகிய நரகத்திலே பிறந்தவரும் பூமியிலே பிறந்து தருமத்தைச்செய்து சுவர்க்கத்திற்குப் போவார்கள். தன்னுடைய அறிவினது நன்மையே மறுமைக்கு உறுதி ஆவது. வடக்காகிய சுவர்க்கத்திலே பிறந்தவரும் மறுமைக்கு உறுதியாகிய பயனைச் செய்துகொள்ளாமல் நரகத்திலே விழுகின்றவர் பலர் உளர் என்க.

தென்னன் நாடு தென்னாடு. தென்னவன் - கூற்றுவன். இதனைத் 'தென்னவற்பெயரிய துன்னருந் துப்பின்' என்னும் மதுரைக் காஞ்சியடிக்கு நச்சினார்க்கினியர் உரைத்த விசேடவுரையால்

அறிக கூற்றுவன் நாடு நரகமாயிற்று "தேவரெல்லாரும், யாம் சேரவிருத்தலின், மேருத்தாழ்ந்து தென்திசை உயர்ந்தது" (தொல் எழுத்து. பாயி நச உரை) என்னும் தொடர்நோக்கி, வட திசை சுவர்க்கமாதலறி

244 வேம்பினிலைப்பிலே வாழைப்பழம் பழுத்தாலும் தன் னுடைய இயல்பான தீஞ்சுவை சற்றுங் கெடாது. அதுபோலத் தான் சேர்ந்த இனம் பொல்லாதாயினும் பெரியோர்கள் அக் கூட்டுறவாலே மனம் பொல்லாதாகிறதில்லை பண்டையினும் குணசிறப்புறுவாரெனக

245 கடற்கரையிலும் நல்ல நீருண்டாம் மலைச்சாரலிலே யும் உப்புநீர் தோன்றும் ஆதலால் தாங்கள் இணங்கின இணக்கத் தின் வழியே யார் ...ரைகளை மோதுகின்ற அலைகளையுடைய குளிர்ந்த கடற்கரையையுடையவனே! அறிவுடைய மனிதரானார் தம்மறிவினவழியிலே ஒழுகுவார் எனக

246 பருத்த அரையையுடைய புன்னைமரத்தாற் சிறப்புப் பெற்று, மிகக் குளிர்ந்த கடற்கரையையுடையவனே! ஒருகால் விட்டு நீங்குதலும் ஒருகால் கூடுதலும் செய்யக்கடவதொன்றல்ல மருவிய செய்கையை எல்லாவிடத்துமுடையவர் யாவர் ஒருவருட னேயும் நட்புக்கொள்ளாமல் இருக்கிறது நல்லது எனக

247 ஒருவர் அறிவிக்க அறியும் அறிவுடையாரை நட்புச் செய்யவே இன்பங்கள் பொருந்தும், அறிவை அறிவிக்கவும் அறி யமாட்டாதாரை விட்டு நீங்கவே, பல துன்பங்களும் நீங்கும் எனக

'பிணிபயிலும் புல்லன்னார் புல்லறிவினுடையார்' (நான்மணி 33) எனபவாதலால், அவரைப் பிரியப் பிரியுமாம் நோய் என்றுரா

248 நல்ல நிலையிலே தன்னை நிறுத்திக்கொள்ளுவானும், தன்னை முன்னின்ற நிலையினின்றும் கெடுத்துக் கீழாக்கிக் கொள் வானும், முன்னின்றநிலையினும் தன்னை மேன்மேலும் உயர்ச்சி பண்ணிக் கொள்ளுவானும், தன்னைத் தலைமையுடையும்படிசெய்து கொள்ளுவானும் தானே எனக.

'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம், கருமமே கட்டளைக் கல்' (குறள் 505) என்பதுங் காண்க.

249 தமக்கு ஒரு கருமஞ் செய்துகொள்ளுகை காரணமாக அறிவில்லாதாரையும் பெருமைக் குணமுடையார் செல்லு கின்றது, பெறுதற்கரிய மரபினை யுடைய திரைகள் ஆரவாரிக்கும் பேரொலியையுடைய கடற்கரையை உடையவனே! அது அறியாமையல்ல அறிவுடைமையேயாம் எனக.

கரும வரிசை, கருமத்தின் தகுதி வரிசை தகுதி என்று பொருள் படலைத் 'தத்தம் வரிசையான் இன்புறூஉம் மேல்' என்பதனுல் அறிக. ஓதம் - அலை. 'நிலையிய பண்பிலா நேரலார் என்றெனறு, உளைய உரையாது உறுதியே கொள்க' (பழ 253) என்பது ஆன்றோர் ஆணை எனக.

250 'பொருள் வரவானுகிய காரியங்களை உட்படுதலும் போக போகயங்களை அனுபவித்தலும், தாமத்தினைத் தகுதியுடைய பெரியவர்களுக்குச் செய்தலும் ஆகிய இவை மூன்று காரியமும் ஒரு பிறப்பிலே முட்டுப்படாமல் ஒருவருக்கு வந்து எய்துமாகில் அதுவல்லவோ சிறந்த யாத்திரையாகப் போய்,தான் கருதின தீவிலே பலிப்புண்டாக வியாபாரம் பண்ணி, இடையூறின்றியே வந்து தன் பட்டினத்தைச் சேரவிட்டிருந்த கப்பலையுடையவன் மனம்போலே அமைதியுடையது' என்பது ஒரு பழைய உரை.

(26) 'அறிவினமை'யாவது தன்னுடைய அறிவில்லாமையைக் கண்டு மாதா பிதா குரு முதலானவர்கள் தனக்கு அறிவு வரத்தக்கதாகச் சொன்ன வசனங்களையும் உட்கொள்ளாமல் அவர்களை உதாசீனம்பண்ணி, நூல் கூறுவனவற்றையுமிகழ்ந்து, உலகத்தியற்கையான முறைகளை விட்டு, தன்னறியாமைக்கேற்ற வொழுக்கங்களை ஒழுகி, எல்லாராலும் இகழப்படுதலும், மறுமைக்கு உறுதியல்லாதன செய்தலுமாம். இஃது அறிவுடைமையின் மறுதலையாகலின் அதன் பின் இது வைக்கப்பட்டது.

251 கூரமையான அறிவில்லாமையே ஒருவர்க்கு வறுமையாவது, கூரமையான அறிவுடைமையே பெரிய செல்வமாவது;

விசாரிக்குங்காலத்துப் பெண்ணிலக்கணங்களும் சில நிறைவுறு மையால் அவற்றினை விரும்பி, ஆண்மையைமுற்றும் இழந்த பேடியுயப் பூணுளோ கண்ணுக்கினிதான ஆபரணங்களை என்க

'தனக்குப் பாழ் கற்றறிவில்லா உடம்பு' என்பவாகலான, நுண்ணுணா வின்மையை வறுமை என்றூ 'அறிவுடையார் எல்லாமுடையார்' என்பவாதலால நுண்ணுணா வுடைமையைப் பெருஞ் செல்வமென்றூா செல்வம் அறிவைப்போல சொர்க்க மோக்ஷங்களைக் கொடாதெனபது ஒரு பழைய உரை

252 பல நூல்களையுங் கற்றறிந்து கேளவியாலவரும பயனை உணாவாா பெருமை அழிந்து துக்கப்படுகிறகாரணம அறிந்தீரில லையோ ? பழைய பிறப்பினையுடைய சரஸ்வதி அவாகளிடம வசித் தலினாலே மகாலக்ஷமி பிணங்கி அவாகளிடம சேராமற போவா ளெனக முந்தின ஜனமததிலே இவா கலவிக்குத் தவசுபண்ணிச செல்வததுக்குத தவசு பணணுமையால இந்த ஜன்மததில வறிய ராய்த் துனபுறுகினறூாகள், கலவிக்கும செல்வததுக்கும தவசு பண்ணத தக்க அறிவு வேணும எனபது ஒரு பழைய உரை

253 பிதா படி எனறு தனக்குச் சொலல இது உறுதியாகிய சொலலலலவோ எனறு அதனை உடகொளளாமல இகழந்தவனை ஒருவா அறிவுகொளுத்த எழுதிய ஓலை ஒனறனைப பலாகூடிய அவையின முனனே மெலலக கொடுக்க, அதறகு அவன கோபித துககொணடு எலலாரும பாாததறியத தன கலவியிலலாமையை யறிவிதது, அவரைப புடைக்க ஒரு கோலை எடுத்துக்கொளளு வான எனக கழறுதல வைதல, 'கழறப வெனபவவனபெணடிா' (அகம 76) எனபுழியும இப்பொருடடாதல காணக

254 கலவியிலலாமல் வளாநதாளொருவன உலகததிலே நலல அறிவாளரிடம புகுந்து மெளள (மெளனமாக) விருந்தாலும அது நாய் இருந்ததனோடு ஒக்கும, ஒரு வசனத்தைச சொன னாலும அது நாய குரைததததனோடு ஒக்கும எனக

255 இலக்கணத்தோடு பொருந்தாத பூாவபக்ஷ ஸமாதான கோடியையுடைய கடையானவன அறிவுடையோாகள நடுவே புகுந்து தான் கல்லாததைச் சொலலுவன பெரியோாகளை

தாம கற்றவறறையும அறிவிலலாதாரிடம அவாகேட்பினும சொல லாா, அஃதேனெனில் தாமசொலலுகிற விடததிலே அநதச்சொல் மதிககபபடாமல விடபபடுமென்று எணணி எனக கோட்டி எனபதறகுககீழ 155 ஆமபாடலிலும இபபொருளே கொளளப பட்டது, கடாவுதல - கேளவிகேடடல

256 கறறறிநத நாவினையுடையவா தாம சொல்லுகிற வச னஙகளிலே தபபுவரபபோகிறதே எனறு அஞசி ஒனறையும சொலலாா கலலாதாா அநதத தபபு வசனஙகளுககுப பயப படாதே சொலலுவாாகள அஃதெனபோல வெளில பனைமரத தினமேலே உலாநத ஓலை சலசல வெனறு சததமாயிருககும, எபபொழுதும பசசோலை சததமிலலாம லிருககும எனக

257 நனமை யறியாத மனிதாககு அறததினது வழியைச சொலலுங காலததுமலைமேலே அடிககிற முளைபோலத தலைமு றிநது செவியிலே சென்று ஏறுவாகும, ஆதலால, அவவுபதேசம பனறிககுக கூழ்வாாககிற தொட்டியிலே தேமாஙகனியைப பிழிந ததனோடொககும எனக

பததாககுப பனறிப பததா எனற பெய ருணமையால, (சிலப நாடு 110 அடியாா உரை மதுரை அடி 91 நச உரை) கூழ வடிததறகுரிய பனறிப பததரிற றோ வடிததறறுலகானவுாம பனறிபபததராவது, நீா இறைககும ஒரு வகைக கருவியாம, இதனை ஆாபி எனப

258 பாலவாாததுககமுவிப பலநாள உலாததினும காிககு வெளளிதாகிய நிறமுணடாகாது அதுபோலக கோலகொணடு அதடடிக குததிச்சொனனாலும புணணிய மிலலாதவனுககு அறிவு புலபபடாதெனக வால - வெணமை ற்றிருககை - -ர்

259 தேனொ ழிநது காறுய மணததாலும, பூவிற்சிறேனை குடிககச்செலலாது இழிநத மல முதலியவறறையே விருமபும ஈயைபபோல நெஞ்சிலே கலநத இழிகுணஙக ளுடையவா ககுத தகுதியை யுடையாா வாயினின்றும வரும தேனபோலு மினிய தெளிநத சொலவின் ஸாரம எனன பயனுணடாம எனக

பூ மிசைதல் என்று மேல் வருதலநோக்கிப பொழிந்து என் பதற்குத தேன் பொழிநது என்று பொருள் கூறபபட்டது மிசை தல் - உணடல் தோவு ரசம

260 கறறுணாநதவாகள சொல்லும குறறமற்ற நுணணிய கேளவியினையுடைய உறுதிச சொலலைக கீழாயினுன் தன மனத தில் தரிததுககொளளாமல தளளிவிடுதலால, தனனைபபோலும பிறிதொரு கீழாயினுன முகததைப பாாததுத தானுமொருகூட்டங கூடிககொணடு அதிலே பிரியமாயப பேசுவான எனக

(27) 'நனறியில செலவ'மாவது தாம ஈடடிய செலவததா லுளள அனுபவததைத தாமே அறியாதாரிடததுந தமமுற வினருககு உதவாத பேதையாரிடததும ஒனறினை வேண டிவநதாாககுக கொடாதே தாமுகரா யிருபபாரிடததும நிறகும செலவமாம எனபது ஒரு பழைய உரை அறி வினமை காரணமாகவே செலவம நனறி பயவாதொழி தலின, இஃது அதனபின வைககபபடடது

261 குறைத விலலாததாகிப பழஙகள மிகப பழுததிருநதா லும பொரிநத அரையினையுடைய விளாமரததில வெளவால செலலாததுபோலக குணமிலாதாா மிகக அனுமைககண மெதத ஐசுவரியமுடையாராயிருநதாலும அவா செலவம பெரியோாகளால விருமபப படுவதொன றனறு எனக அருகுதல - குறைதல

262 அளளிககொளளத தககதாய குறிய மொடடுக்கை யுடையதாயினும, சூடுமபூவை விருமபுவோா கள்ளியின மேலே கைகளை நீட்டாா அது சூடுதறகுரிய பூவலலாமையாலே, அது போலச செலவம மெதத உணடாயிருநதாலும கீழமககளை அறி வுடையாா குறுகாா எனக

263 அனேகமான அலைகளையுடைய கடற்கரையிலே தாமி ருநதாலும வலிதாகத தணணீா ஊறுவதும உவரிலலாததுமான கிணறறு நீரிடததுபபோய்ச சாபபிடுவாாகள், அபபடிபபோலக கொடாதவாகள் ஐசுவரியவானகளாயச சமீபததிலேயிருநதாலும அவாகளை ஈததாமல் தூரததிலே போயாகிலும கொடுககிறவ னிடததிலே அறிவுடையவா பொருளை வேண்டுவா் எனக

264. அறிவுடையார் மிடித்திருக்க அறிவில்லாமல் வட்டுப் போலவும் வழுதுணங்காய் போலவும் இருக்கிறவர்கள் பட்டுப் புடவையும் நல்லபுடவையும் உடுத்து வாழ்ந்திருக்கிறபடியினாலே பொருந்தின கடல்சூழ்ந்த பூமியிலே புண்ணியம் வேறுபட்டிருக்கும் என்க வட்டுகெறி முளரி, வழுதுணங்காய்-கத்தரிக்காய்

265 நல்லவரும் நயத்தினை உணரத் தக்கவருமாய் இருப்பவர் வறியராயிருக்க, நயமில்லாரும் கல்லாதவருமாயிருப்பாருக்குச் செல்வம் வருகைக்குக் காரணம் முன்செய்த வினைப்பயன் அல்லாமல் வேல்போலும் நீண்ட கண்களையுடையவளே ! இப்போது நினைத்து வருகின்றதொன்று அன்று எனக

266 நல்ல செந்தாமரை மலர்மேல் உறையும் பாவை போன்ற மகாலக்ஷ்மியே ! நீ பொன்போன்ற நல்ல மக்களைத் துறந்து அவரின் வேறான மணவாத புறவிதழ் போன்ற அறப் மக்களிடம் புகுவாய் அதற்குத்தொல்லை வினைப்பயனே காரணமாதலால், அந்நன்மக்களும் புன்மக்களும் இங்ஙனத்துச் சாமபராய் நசிக்கக்கடவர் எனக

நன்மக்களையும் சேர நசிக்க என்றார், தாம் காமங்களை ஆக்கிக் கோடற்கு ஆவசியகமான ஆத்தம் அவரிட மின்மையால் இனி, செல்வத்திற்கு முற்பிறப்பிலே தவம் செய்யாத பாபி ஒருவன் வறுமையுற்று வருந்திக் கூறும் கூற்றாக இப்பாடல் செய்யப்பட்டுள்ளதாகக் கொண்டு, வேறு பொருள் கூறி அபசாரப்படுவாரு முளர் கல்விக்குப்போலச் செல்வத்திற்கும் தவஞ் செய்யவேண்டு மென்று கீழ் 252 ஆம் பாடலிற் கூறப்பட்டிருத்தலின் யாம் கூறிய பொருளே பொருத்தமாதல் உணர்க தகடு தன்னுள்ளே மணங்கமழும் பூவை வைத்திருந்தும் மணத்தை அடையாததுபோல, தாம் காமங்களுக்குரிய ஆத்தத்தை வைத்திருந்தும் புன்மக்கள் அவற்றினை அடைவதில்லை எனபது கருத்து இனி, பாவைக்குத் தகட்டினை அடையாக்கின், அது தன் காப்பத்திற் பூவினை வைத்துக் காத்து வெளிப்படுத்திருப்பதுபோலப் பலவுயிரையும் காத்தீன்ற ஜகன்மாதாவான மகாலக்ஷ்மியே' எனக் நாறு எனபது குருதிக் கோட்டுக் குஞ்சரக்கரம் எனபுழிப்போல நின்றது விளியா, வை தற்பொருளில் வந்த வியங்கோள்

267. ஈரமுடையாரிடத்திலே யிருக்கிற வறுமைக்கு நாணமில்லையோ? ஒருவர்க்கும் பிரயோசனமில்லாதாரிடத்துள்ள செல்வமானது கல்லொடு கூட்டிய அரக்குப்போலப் பிரியாது நிற்கின்றதே! வேல்போலுங் கண்ணையுடைய மகாலக்ஷ்மியே! இந்த இரண்டும் நயந்தாராதே நீங்காமல் நிற்கின்ற இந்த அதிசயங் காணாயோ நீ என்க.

கொடாத லோபியிடத்திலே ஏற்று நிற்கிறவர் படுகிற துக்கங்களைப் பாராமலிருக்கிறாயே என்றவாறு. 'திருக்கூழாம் ஒண்செய்யாள் பார்த்துறின் உண்டாகும்' என்பவாதலால், மகாலக்ஷ்மியைக் கடாக்ஷிக்குமாறு பிரார்த்தித்தது இப்பாடல் என்க. ஒருவர்க்கும் பிரயோசனமில்லாதாரிடத்து நிற்குஞ் செல்வம் ஏற்கிறவர்கள் பசி நோயைத் தணிக்கவில்லை என்பது ஒரு பழைய உரை.

பறப்பு - மலை, ஈண்டு, கல்லுக்கு ஆயிற்று. பயின் - அரக்கு, அரக்குங் கல்லுங் கூட்டிற் பிரியாது என்பதனை 'பயினொடு சேர்த்திய கற்போற் பிரியலம்' (அகம் 1) என்பதனால் அறிக.

268. நாணிலிகள் அல்லாதார் காலநடையாக வழிநடந்து தூரதேசங்களுக்குச் சென்று இழிந்த கலவை யுணவுகளை உண்டு வருந்திக் காலங்கழிக்க, நாணிலிகளோ அப்படி வழிநடவாமல் தம் வீட்டிலே சுகமாக இருந்து, நெய்யும் பாலும் மேலே ஆறுபோல ஒழுகும்படி நல்ல உணவைக் கருனை முதலிய பொரிக்கறியோடு உண்டு மகிழ்வர் என்க.

வல்லைகள் - நாணிலிகள், வல்லைகளிடத்தே பெருஞ் செல்வந் தங்கி யிருத்தலும் மாண்புடையாரிடத்தே வறுமை தங்கி யிருத்தலும் பிரத்தியக்ஷமாம்.

வல்லைகள் அல்லார் 'இட்டாற்றுப் பட்டு ஒன்று இரந்தவர்க்கு ஆற்றாது, முட்டாற்றுப்பட்டு முயன்று உள்ளூர் வாழ்தலின் நெட்டாற்றுச் சென்று நிரைமனையிற் கைநீட்டும், கெட்டாற்று வாழ்க்கையே நன்று' என்று கொண்டு, காலாறு சென்று கலவைகள் உண்டு கழிப்பர் என்றார்.

நாணில்லாதவர்கள் தூரதேசங்களிலே போய்க் கிடைத்த விடத்திலே சோற்றிலும் கூழிலும் உண்டு நாளைக்கழிப்பர்,

ஊணமுடையவர்கள் தூரதேசங்களுக்குச்செல்லாராய் தமமுள்ளே அடங்கியிருந்து கிடைத்திருந்த மாத்திரஞ் சாப்பிட்டுத் தங்களுடம்பிலே வேலைவடிய வீட்டிலேயிருந்து வயிற்றை வளர்த்துக்கொண்டிருப்பர் என்பது ஒரு பழைய உரை

269 பொன்னிறத்தினை யுடைய செந்நெல் கதிருடனே கருவும் வாட மின்னலுடனே விளங்காநின்ற மேகமானது கடலுக்குள்ளேயும் பெய்யும், அதுபோலக் கொஞ்சமான அறிவுடையவர் பெரிய செல்வத்தைப் பெற்றால், தரித்திரருக்குக் கொடாமல் வலிமையினால் பறித்துக்கொண்டுபோகிற பேருக்கும் தன்னைப் போலே செல்வத்தைப் பெற்றவர்களுக்கும் கொடுப்பரெனக்

காற்றால் அலைப்புண்ட மேகம் தான் விரும்பாத விடத்திற் பெய்தலை நலிவார்க்குக் கயவர் ஈதற்கு உவமையாகக் கொள்க "ஈர்ங்கைவிதிரார் கயவர் கொடிறுடைக்குங் கூன்கையரல்லாதவர்க்கு" என்றார் வள்ளுவனாரும்

270 ஓதினாராயினும் ஓதாதவரோ டொப்பர் அறிவில்லாதார், ஓதாதாராயினும் ஓதினவரோடு ஒப்பர் அறிவுடையவர் மிகுந்த தரித்திரவானகளாயினும் ஒருவரைச்சென்று இரவாராகில் பரிசுத்தரான செல்வரோடொப்பர், செல்வருங் கொடாராகில் தரித்திரரோடொப்பர் எனக

'செல்வரெனினும் கொடாதவர் நல்கூர்ந்தார், நல்கூர்ந்தக்கணும் பெருமுத்தரையரே செல்வரைச்சென்றிரவாதார்' என்மேல் 294 ஆம் பாடலில் வந்துள்ளமையும் நோக்குக

4 'துன்பவிய' லாவது, இன்ன இன்ன ஒழுக்கங்களால் துன்பமெய்தற்பால தெனக்கூறும் இயலாம் அஃது ஈயாமை, இன்மை, மானம், இரவச்சம் என்னும் நான்கு அதிகாரங்களாற் கூறப்படும், அவற்றுள்,

(28) "'ஈயாமை'யாவது ஒரு பொருளைக் கண்டவிடத்து அதன் மேல் ஆசை செல்லுதலும், பொருள் கொடுக்கிற காரணமாகக் கோபமுண்டாதலும், பொருள் தனக்கு மெத்த வந்தவிடத்தும் ஆசையடங்காமையும், ஒருவர்க்கு ஒன்

றைகொடுத்தால் அதிலகுறையுமென்று லோபத்தால்ஒரு வாக்கு ஒன்றைக் கொடாமையுமாம" இது நன்றியில் செல்வம்போலப் பிறாக்குப் பயனபடாத தொன்றுதலால், அதனபின இது வைக்கப்பட்டது

271 தமமுடன சிநேகம் பண்ணின பேருக்கும பண்ணைத பேருக்கும தமக்குள்ள மாத்திரம் சமைத்த அமுதை அவாகளுக்குக கொடுத்துத்தாமும உணடாராகில, அஃது இல்லறத்தாமத்திற்கு அழகு அஃதனறிச சமைத்ததை வைத்துக்கொண்டு ஒருவரையும வரவொட்டாமல் கதவை அடைத்துக்கொணடு தாம மாத்திரம உணடு உயிா வாழும மறுமைக்கு உறுதியைச செய்து கொள்ளாதவாக்குச சொாக்கத்தின கதவு அடைத்திருக்கும எனக

அடுதல - சமைத்தல , பிரமசாரி வானபபிரத்தன, சநநியாசி என்ற மூவரும அட்டு உணணுதவராகையால, அட்டுணடு வாழ்தல இலலறத்தாா தாமமாயிறறு அவாக்கு விருநதினா, பணடையறிவுணமையிற் குறித்து வநதாரும அஃதினமையிற குறியாது வநதாருமென இருவகையினராதலின அவவிருவரும ஈணடுக கூறப்பட்டாா ஆவது - சொாக்க மோக்ஷஙகளுக்காவது 'இலலாவிடத்தும இயைநத வளவினுல் உளள விடமபோற பெரிது உவநது - மெலலக கொடையொடு பட்டகுணனுடை மாநதாக்கு அடையாவாம ஆணடைக் கதவு' எனபதும நினைக்கத்தக்கது

272 எவவளவாகிலும பொருநதியவளவினுல கொஞசமாத்திரம தாமத்தைப பணணினவா தலைவராவா, பெரிய செலவங்கள வந்தவிடத்தும அறத்தைச செய்யாது பினனைச செய்வோமென்று இருக்கிறபோா கடுக இறநதொழிநது கடலசூழநத உலகத்திலே பழியாகிய கடலின் முழுகினுா எனக

273 தான தேடின பொருளை நனறாக உணடு கழியாமலும், துறநதபேருக்குக கொடுக்காமலும அபபொருளைச சுமமாவைத்து இறநதுபோன அறிவிலலாதவனை அவன தேடிவைத்துபபோன பொருளும அவனைச சிரிக்கும, உலகத்திலே அருளுடையாரும அவனைச சிரிபபாாகள் என்க.

பொருள் அவனைச் சிரித்தலாவது, கள்வர் முதலாயினரால் அது கவரப்பட்டு ஒழிய, உலகம் அவனைச் சிரித்தலாம்.

274 ஒருவர்க்கு ஒன்றைக் கொடுத்தலும் தானுண்டலும் தெளியாத குறுகிய நெஞ்சினையுடையவன் பெற்ற பெரியசெல்வம் தன் குடியிலே பிறந்த அழகிய கன்னியரைப் பருவ காலத்திலே பிறன் வந்து மணஞ்செய்து அனுபவிக்கிறது போல, கொடாதவன் செல்வமும் பிறனால் அனுபவிக்கப்படும் எனக்.

275 அலை யெறிகிற பெருங் கடலைச் சேர்ந் திருந்தும் உலகத்தார் நீர்வறளுகிற சிறிய கிணற்றி லூறுகிற ஊற்றைத்தேடி உண்பார், அதுபோல, மறுமைக்கு உறுதி யறியாதவர் ஐசுவரியத்திலும் அறிவுடையோரிடத்திலுள்ள மிக்க தரித்திரமே நல்லது எனக். மறுமைக்கு உறுதி அறியாதார் ஆக்கமாவது, பழிமலைந்து எய்திய ஆக்கம். சான்றோர்க்கு அவ்வாக்கத்தினும் நல்குரவே சிறந்ததென்றார், நிலையாத செல்வத்தின்பொருட்டு நிலையுள்ள பழியை மேற்கோடல் அவர் சால்போடு இயையாமையின்.

276 என்னுடையது என்னுடையது என்று இருக்கிற அறிவில்லாதவன் தேடிவைத்த பொருளை யானும் என்னுடையது என்னுடையதென்றிருப்பேன், தன் தாயின் தான் ஒருவனுக்கும் ஒன்றையுங் கொடுக்கிலன், தானு மநுபவிக்கிலன் இவையிரண்டையும் யானும் செய்கின்றிலேன் அந்தப்பொருளை எனக்.

277 ஒருவருக்கு ஒன்றைக்கொடாத செல்வரினும் தரித்திரர் பிழைத்தார், அஃதெப்படி எனில், பொருளைப் புதைத்து வைத்து விட்டதில் ஒருவன் எடுத்துப்போக அதனை இழந்தானென்ற சொல்லினையுந் தப்பினார் வருத்தப்பட்டு வந்தபொருளைக் காக்கிற கவலையுந் தப்பினார் புதைத்தற்குத் தோண்டுகிறதையும் தப்பினார், இவர் பொருளுடையவரென்று பலவான்களாலே நோவக் கைபிணித்துக் கட்டியடிக்கப்படுகின்றதனையும் தப்பினார், இப்படிப் பலவகையாலும் வருகிற துக்கங்களைத் தப்பினார் செல்வமிலாதார் எனக்.

278 தான் தேடியபொருளைத்தான் உள்ளபொழுதே கொடுத்திலன் தன் தாயத்தார்களுக்கும் சுற்றத்தார்களுக்கும் அப்பொருள் உரித்தாயிருக்கின்றதாயினும், அவர் கொடுக்க வலியிலர், தான்

இறப்பதன் முன்னரே தானே கொடுப்பானாயின் அந்தச் சுற்றத் தார் வேண்டாமென்று சொல்லார், தானிறந்துபோனபின்பு அவர் அதனைச் செலவழிக்கிறபோது தான் வந்து வேண்டாமெனச் சொல்லான், ஆதலால், கொடாமலிருக்கிற காரணம் யாது எனக

279 இரக்கின்றவர் கன்றைப்போலவும் கொடுக்கின்றவர் பசு வைப்போலவும் உபாயத்தால் கொடுக்கின்றதே ஒருவர்க்கு வண்மை யாவது அந்த உபாயத்தை ஒழித்துப் பசுக்கறக்க வல்லவர்கள் அழுத்திவருத்தக் கறக்கும்போது சுரக்கும் பசுவைப்போல ஆயுதங் கொண்டு உடம்பிலே நோவப் பண்ணுகிற பேருக்குக்கொடுக் கிறது கீழ்மக்கள் இயல்பாம் எனக

இரவலரிடத்து வள்ளல்களுக்கு இயல்பாயுண்டாகிய வாத் ஸல்லியத்தை விளக்க அவரைக் கன்றாகவும் பசுவாகவும் உவமித் தார் 'கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி நினைத்து முலை வழியே நின்று பால்சோர நனைத்தில்லஞ் சேறாக்கும்' என்றும், 'காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த பால்' என்றும் பயின்றுள்ளமை கொண்டு, கன்றுக்கு மனம் நெகிழ்ந்து சுரக்கும் இயல்பு எருமைக்கும் உண்டு எனப்பாருளராயின், அதற் குப் பசுவைப்போல் ஈனறிற்கு விரகிற சுறக்கும் ஆற்றலில்லை எனக விரகிற சுரத்தலாவது, கறக்கிறவர்க்கு வேண்டிய வளவு பால்கொடுத்து அவர் இனிப்பாலில்லை என்னும்படி வஞ்சனையால மடியை வற்றவைத்து அவர் விட்டபிறகு தன் கன்றுக்குத் தான ஒளித்துவைத்திருந்த பாலைக்கொடுத்தல வள்ளல்கள் தெய்வத்தால் தாழ்வுற்று ஒன்று மிலராயவிடத்தும் வறியவர்க்குச் சிறிதாயினும் கொடுப்பர் எனபது கருத்து இது, தன தம்பியால் நாடுகொள்ளப் பட்டுக்காடுபற்றியிருந்த குமணன் பெருந்தலைச்சாத்தனுக்கு வாள் கொடுத்ததுபோன்ற பெருவண்மையாம் கீழ்களோ, "கரும்பு போல கொல்லப் பயன்படும்" என்க

280. பொருளைத் தேடுதலுந் துன்பம் அங்ஙனம் துக்கப்பட டுத் தேடின பொருளைக் களவுபோகாமற் காக்கிறது மிகவுந் துன பம், காத்த பொருள் சிறிது குறையுமாயினுந் துன்பம், அந்தப் பொ ருள் கெட்டுப்போனாலுந் துன்பம், ஆதலால் துன்பத்துக்கெல்லாம் இருப்பிடமாயிருக்கும் இந்தப்பொருள் என்க

இப்படித் துன்பத்திற்குக் காரணமாயிருக்கிற பொருளைப் புதைத்துவையாமற் கொடுக்கவேணு மென்பது கருத்து.

(29) 'இன்மை' யாவது உலகத்துள்ள மனுஷ்யரால் எண்ணப் படாமற் செய்வதும், பசிபிணிக் குண்டாக்குகிறதும், இன்பங்களை அனுபவியாமற்புரிவது, பிறராலிகழப்படுவது மான வறுமையாம். இத் முற் பிறப்பிற பிறர்க்கு ஈயா தார்க்கே வந்து எய்துவது ஒன்றாதலின் ஈயாமையின் பின் வைக்கப்பட்டது. 'உமமைக் கொடாஅ தவரெனபர் குணடுநீர் வையத் தடாஅ அடுப்பினவர்' என்பதனால் முற்பிறப்பிற் கொடாதவரே இப்பிறப்பில் வறியராயப் பிறப்ப ரென்பதனை அறிக.

281. துவர் ஊட்டிய புடைவைகளை யுடுத்துக்கொண்டு திரிந் தாராயினும் பரதாக எட்டாக ஒரு சிறு பொருளுடையராயிருந் தால், எல்லாருடனேயும் சரியாக வைத்தெண்ணப்படுவார்கள். தங்களுக்கு எல்லா வழியாலும் ஒத்திருக்கும் நல்ல குடியிலே பிறந்தாராயினும் தரித்திரராயிருந்தால் அவர்கள் செத்த பிணத் திலும் கடையாக வைத்து எண்ணப்படுவார்கள் என்க.

பொன் வெள்ளி முதலிய உலோகங்களைச் சந்நியாசிகள் ஸ்பரிசித்தலுங் கூடாதென அறநூல் விதியுண்டேனும், அவ் விதியைக் கடந்து பொருள் வைத்திருந்தாரோ மதிக்கப்படுவார் என்றமையால் உமமை இழிவு சிறப்பு. மற்ற மூன்று ஆச்சிரமத் தினரும் கண்டமாத்திரத்திற் றெழுதற்க இறப்பச் சிறந்த சந்நி யாசிகட்கும் இன்மை தீதெனக் கூறிய முகத்தானே அதன் இழி வைப் புலப்படுத்தினாராயிற்று. அதது - சிவப்பு பதநூ எட்டு என் பன அப்பொருளுக்கு ஆகு பெயர். பாடு பெருமை.

282. நீரைப் பார்க்கிலும் இலேசானது நெய்யென்று சொல்லுவார்கள். நெய்யைப்பார்க்கிலும் புகை இலேசென்பது எல்லாரும் அறிந்தது. ஆராயுங்காலத்து இரப்பெனனும் துன்ப முடையவன் சென்று புகும் புகையும் புகுதற்கரிய வாயிலை நுழைந்து என்க. இரப்பவன் மிகவும் அற்பமெனபது கருத்து. கிரப்பிடுமமை என்று கண்ணழித்து, பொருள் தேடுகிற துன்பம்

எனவுமாம நிரபபு இபபொருடடு ஆதலே 'நிரப்பிடுமபை பல பெணடிராளனறியும்' எனபுழியுங காணக (நானமணி 96)

283. கொல்லேபபுனததிலே கிளிகளைக கலலினைககொணடு ஓடடும காடடையுடைய நாடனே! ஓஙகியகலலேயுடைய மலேயின மேலே காநதடபூ மலராககாலததது, சிவநத காலகளையுடைய வண டினஙகள போகாவாகும அதுபோல வறுமை யுறறபேருககு உற வின முறையா ரிலலே எனக பொறி, ஈணடுப பாததததினே உணாததிறறு

284 சரீரததைவிடடுச சீவனுடைநது போயினவிடததது அபபிணததைக காககைகள கொததவநது கூடிஞறபோல ஒரு வாககுச செலவமுளள காலததது அனேகமபோ அடிமையாய வரு வாாகள பிறகு அநதச செலவங கெடடுபபோயத தரிததிரம வநது, வணடுகளபோலபப பல திககுகளிலும சென்று, பெறற உணவுகளே உணடு அவாகள திரியுஙகாலததது அவரைககணடு மிடி யாலே துனபமறறீரோவெனறு வினவுவாா இவவுலகததிலிலலே எனக தொணடாயிரவா - ஒனபதிஞயிரமபோ எனவுமாம, தொணடு-ஒனபது(மலேபடு 21) உடைநதுழீஇ எனறுமம பாடம

285 ஓசையையுடைய அருவி கலலின மேறபுறததைக கழுவுகிற கூடடமான மலேகளையுடைய நாடனே! வறுமையுடை யவாககுப பிறநத குலங கெடும, பெரிதாகிய ஆணமைததனமும கெடும சிறபபுடைததான கலவியுங கெடும எனக

286 உளளே மிகுகினற பசியினலே தமமிடததிலே ஒன றை விருமபிவநதவாகளுககு உளளூரிலேயிருநதும ஒனறை உதவ மாட்டாதவன உளளூரிலேயிருநது ஒரு பயனுமிலலாமல தன வாழநாளேக கழியாமல, தான தூர தேசஙகளிலேபோய ஊா தோறும புதியஞயத திரிநது உயிா வாழதலே நனறு எனக

287 தமமுடைய நயமான ஒழுககததையே யலலாமல நிரமபி எழுநத அறிவையுஞ் சேர இழநதுவிடுவா, கூரமையா யிருககிற முலலேயருமபைத தமககுச சரியிலலேயெனறு வருத்து கினற பறகளையுடையவளே! நாடோறுந தமமுடைய குடுமபத திககு வேணடுவதை அனறனறு தேடிககொணடுவநது சோக கினற துககததையுடையவா என்க

288 இல்லிலேயிருந்து வாழ்கிறவிடத்துப் பொருள்குறுகி இரக்கிறவர்களுக்கு ஒன்றைக் கொடுக்க இயலாமல் முட்டியவழித் தன்னுடைய முயற்சி யுற்சாகங்களினாலேயும் ஒன்றுமாகாமல் உள்ளூரிலேயிருந்து வாழ்கிறதிலும் தூரதேசங்களிலே போய்வீடுகள் தோறும்புகுந்து கையேற்கிற கெடுவழி வாழ்க்கையே நன்று எனக.

இட்டாறு - குறுகியவழி கீழ் 286 ஆம் பாட்டில் இல்லறத்தானாகஇருந்தே வேறொருவர்சென்று இரத்தல் நல்லது என்றார் இப் பாட்டில் துறவியாகி இரத்தல் நன்று என்றார்

289 முன்பு தாம் செல்வத்துக்குப் பண்ணின தவம் மாண்டகாலத்து வறியராய் வருந்தி, உடங்களை இட்டிருந்த கைகளினாலே இலைக்கறி பறித்தற்குத் தூற்றினைப்பிடித்து வளைத்து, ஆர இலைக்கறியைப் பறித்துவந்து வேக வைத்து, பானை குட்டலையே கலமாகக் கொண்டு உப்பில்லாமல் வெந்த இலைக்கறியைத்தின்று மனங்குறைந்து வாழ்வார் எனக

290 நல்ல நீர்மையினையுடைய அருவிகள் ஒருகாலத்தும் அறுமல் மிகுகிற சிறப்பினையுடைய குளிர்ந்தமலைநாடனே! புள்ளிகளையுடைய அழகிய வண்டுகள் ஒருகாலத்துப் பூத்துத் தம்மிடத்துள்ள தேனை அருந்தச்செய்து இப்போது மாறிப்போன கொம்பின்மேற் போகாது அதுபோல ஐசுவரியம் குறைந்தாருக்கு உறவின் முறையார் இல்லை எனக

ஆர்த்த - நுகர்வித்த, 'வருநிதி பிறர்க்கார்த்தும் மாசாத்துவான்' என்புழிப் போல (சிலப் மங்கல 33) இதற்குக் 'கால்கை சிறகுகளை விரித்துக்கொண்டு திரிகிற' என்பது ஒரு பழையவுரை

(30) 'மான'மாவது எவ்விடத்திலும் தன் குடிக்கேற்ற ஒழுக்கஞ்சிதையாமற்காத்தொழுகுதலும், அவ்வொழுக்கத்துக்கு அழிவுவரின் தன் பிராணனைவிட்டு அதை ரக்ஷித்தலுமாம் 'சிறிய சுருக்கத்து வேண்டும் உயர்வு' என்ப ஆகலின், இஃது இன்மையின்பின் வைக்கப்பட்டது

291 தமது செல்வ பலத்தால் திறமையில்லாதார் செய்கின்ற பெரிய ஆரவாரத்தினைக் கண்டவிடத்தும், எரிந்து மண்டிக் காடு தீப்பட்டாற்போல வேகாநிற்கும் மானமுடையார் மனம் என்க.

292 தமமுடைய வறுமையைச சொல்லுவதன் முன்னரே அறிநது அவவறுமையைத தீாககவலல இயல்புடையாாகளுந தாம் பட்ட வறுமையைச சொலலாத தம நெஞ்சததைத தமககு உரித தாகப பெறற மானமுடையவா பசிநோயால எலுமபு தோன்ற வுடைன கெடினும பணபிலாதாா பினசெனறு, தமது வறுமை தோனறச சொலவரோ எனக

முனனையதான ஒகாரம எதிாமறை பினனையது இரககக குறிபபு தம வறுமையை ஒருவருககுஞ சொலலாா எனபது ஒரு பழைய உரை

293 ஐசுவரியவானகள வநதால நமமுடைய மனையிற கொணடு புகுநது, நமமாலேயான உபசாரஙகளைச செயவோம, அநதச செலவமுடையாரிடததிலே நாம போனால, நமமைத தம முடைய மனையினுட் கொணடு புகுநதால தமமுடைய மனையாள் காணில அவள கறபழியும எனபாா போல நாணிச சோறறைப புறஙகடையில வைதது இடுவாாதலால செலவருடைய உறவை மறநதிடுக எனக

294. இபபிறபபினையும நனறாககும, இறநதுபோன பிறகு பூமியிலே தன கீாததியையும அழியவிடாது, மறுமைககு நன மையினையும விளைபபிககும வெறுபபிலலாபல புழுகுமணவா நினற மயிரினையுடையாய ! மானமுடையோரால பதிககபபடட நடககை ஒருவாககு மிகவும நனறு எனக

இயலுதல - உலாவுதல எணடிப புகழடமப உலாவுதல, இயலநெறி - இயலுதறகான வழி எனக மதிபபு, பதிப புககு எதுவாகிய நடககையை உணாததினமையால ஆகுபெயா. அது, பெருஞ்சித்திரனாா தமககு வெளிமான தமபி சிறிது ஈய வா, அதனைக கொளளாது வெறுததுப போயக குமணனைப பாடிக குமணன பகடுகள் கொடுபபக கொணாநதுநினறு, வெளி மானுாக கடிமாதது யாதது, நின்னுாக கடிமாம வருநதத தநது யாம பிணிதத நெடுநல யானை எமபரிசில' (புறம 162) எனறதும, தம மனைவியை நோககி, 'நினனயநதுறைநாககும நீ நயநதுறை நாக்கும, பண்மாண கறபினின கிளைமுத லோாககும. கடுமபின

கடும்பசி தீர யாழ நின் நெடுங்குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும், இன்னோர்க்கு என்னாது என்னொடுஞ் சூழாது, வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும் எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே' (புற. 163) என்றதும் போல்வது.

295 பாவமென்றும் பழிப்பு வசனங்களும் முண்டாகத் தக்க காரியங்களைத் தாங்கள் சாகவரினும் சான்றவர் செய்யார்; சாவுதுதான் ஒருவர்க்கு ஒருநாளில் கணப்பொழுதைத் துன்பமே யல்லாமல் அந்தப் பாவமும் பழியும்போல எப்பொழுதும் உளதாய குற்றங்களைச் செய்யமாட்டாது எனக்.

'பிராணனைவிட்டாலும் மானத்தைக் காக்கவேண்டும்' என்பது ஒரு பழைய உரை. அருநவை - தீராத குற்றம்.

296 வளப்பத்தையுடைய பெரிய பூமியில் உயிர் வாழ்பவ ரெல்லாருள்ளும் செல்வராயினும் ஒருவர்க்கு ஒன்றைக் கொடாத வர் தரித்திரரேயாவர், வறுமை வந்தவிடத்தும் பெரிய முத்தரை யார்போன்ற செல்வரோடொப்பார் செல்வரை யடைந்து இரந்து உயிர்வாழார் எனக்.

ஒருவர்க்கு ஒன்றனைக் கொடாமைக்குக் காரணம் ஆசையாத லாலும், அவ்வாசை 'நல்குரவு என்னும் நசை' (குறள் 1043) என் றபடி நல்குரவாதலாலும், கொடாதவரை நல்கூர்ந்தாரென்றார். 'வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை' என்பது பொய்யாமொழியாதலால், ஒருவரிடத்து ஒன்றினை வேண்டாத வரைச் செல்வரென்றார். கீழ் 270 ஆம் பாட்டிலும் நல்கூர்ந்தும் செல்வர் இரவார், செல்வரும் நல்கூர்ச்சார் ஈயாரெனின் என்று கூறப்பட்டது நோக்குக.

297 கடையானவரெல்லாரும் மானத்தினும் காயம் பசிக் கஞ்சுவர்; இடையானவரெல்லாரும் அதனினும் சாவுக்கஞ்சுவர்; விற்போலும் வளைந்த புருவத்தினையும் வேல்போலும் நீண்ட கண் களையுமுடையவளே! தலையானவரெல்லாம் உலகம் சொல்லும் பழிப்புரைக்கே அஞ்சி விடுவர் எனக்.

'சாதலின் இன்னாததில்லை' என்பவாகலின், ஈண்டு இன்னா மையைச் சாதலென்றார். மானங் கெடவருங் காலத்து. அத்

னினும் பகையை அதிகமாகக் கொள்ளுவார் கடையாயினார், அதனைப் பொறுத்தாராயினும் பிராணனை அதிகமாக நினைப்பார் இடையாயினார் மானத்தையே முதன்மையாக நினைத்து உயிரைவிடுவோர் தலையாயினார் என்பது கருத்து. 'தனக்கு ஒவ்வாச சொற்பட்டாற் சாவதாம் சால்பு' என்றார் பிறரும் (நான்மணி 4)

298 'இவர் நல்லவர், மிகவும் இரங்கத்தக்கவர், இப்பொழுது தரித்திரராயினார்' என்று இகழ்ந்து செல்வராயினார் கொஞ்சமாகப் பார்க்கிற காலத்திலே கருமானுடைய உலை ஊதுகிற துருத்தியைப் போல உள்ளே வேகாநிற்கும் தலைமையுடைய சான்றோர் மனம் எனக் சிறுநோக்காவது, சிறுமைதோன்ற நோக்குவது

299 தம்மை விரும்பிவந்தவர்க்கு ஒன்றைக்கொடாதிருப்பது நாணமன்று, எல்லாநாளும் பயத்தினாலேவருகிற நாணமும் நாணமன்று தன்னை எளியவனாக்கவைத்துக் குடிப்பிறப்பாலும் ஒழுக்கத்தாலுந் தன்னினும் மேலானவர்கள் செய்ததைச் சொல்லாதிருப்பதே நாணம் என்பது ஒரு பழைய உரை

300 கடமானைக் கொன்ற காட்டிலுறை வேங்கைப் புலியானது அந்தக் கடமான் இடப்பக்கம் கீழாக விழுந்ததானால், அதனைத் தின்னாமற் போயவிடும், அதுபோலப் பெரியோர்கள் விரைந்த ஆகாசம் கவித்த உலகமெல்லாம் பெறினும் மான மழிய வந்தாகில் அதனை விரும்பார்கள் எனக

'தொடங்கு வினைதவிரா அசைவில நோன்றாட், கிடந்துயிர் மறுகுவதாயினும் இடம்படின் வீழ்களிறு மிசையாப் புலி' (அகம் 29) என்பதனால் புலியின் அத்தகைய மானத்தைஅறிக

(31) 'இரவச்ச' மாவது வறுமையுற்று ஒருவரை அவ்வறுமை தானே தள்ளிக்கொண்டுபோய இரப்பிக்கும்பொழுது, தங்கள் பிரகாசமெல்லாம் அடங்கி, கண்கள் குழிந்து, கடுகப் பேசவுங் கூடாமல் ஒடுங்கி, தாம் அறிந்த தாமங்களை மதுரமாகச் சொல்லித் தமது வறுமையைப் புலப்படுத்துங்காலத்து ஐசுவரியவான்கள் அதனைச் செவியிலே ஏற்காது அவரை எளியராக நினைத்துக் கடைக்கணித்தலையும், கொடுப்பாரைப்போலே யிருந்து, பிறகு ஒன்றுமில்லையெனவே, பெருமூசசெறிந்து செயலற்றுப்போகும் போக்கையுங் கண்டு, அந்த இரப்பினை அஞ்சுதலாம்.

மானமுடையாரே இரவினை அஞ்சுவ ராதலால் இஃது, அதன் பின் வைக்கப்பட்டது.

301 'இந்த வறுமியார் நம்மாலே ஆகின்றாரல்லது எந்த நாளும் இவர் தம்மாலே நாம் ஆதரப்படியான ஒரு காரியமுமுடைய ரல்லர்' என்று தம்மை மயங்க நினைத்த மனத்தினையுடையாரின் தெரிந்த அறிவினையுடையார் செல்லக்கடவரோ எனக

மயங்க நினைத்தலாவது 'செல்வம் சகடக்கால் போலவரு' வதனைச் செருக்கால் நினையாமை 'தெருண்ட வறிவினவர்' என்புழி இன்சாரியை நிறக இரண்டனுருப தொக்கது

302 இழிவான காரியங்களைச் செய்து சாந்துமனம் சந்தோஷப்பட்' ஈன்றிய நிறைய உணக்கின்றதிலும் பழிக்கத்தக்க காரியங் களைச் செய்யாமல் பசித்தல் ஒருவர்க்குக் குற்றமோ? கண்ணிமைத்து விழிக்கிற மாத்திரமாயிருக்கும் ஒருவன் இறந்துபிறக்கிறது எனக

'அப்படிப்பட்ட பிறப்புக்காக இழிவான காரியங்களைச் செய்யாமல் நல்ல காரியங்களைச் செய்யவேணுமென்பது கருத்து'

இழி, பழி, முதனிலைத் தொழிற்பெயர்கள் இழித்தற்கு பழித்தற்கு எனக அழித்து, இவவுடலை யழித்து என்னுமாம்

303 வறுமையினாலே இரக்கத் துணிந்து இரவாமலிருப் பாருமில்லை அப்படி இரந்துகொண்டு திரிந்தாலும் சிறிதுதூரத்தி லேயே எதிரேவந்து தழுவிக்கொண்டு வீட்டுக்கு வாருமென்று கூட அழைத்துக்கொண்டுபோய் உண்ணுமென்று உபசரிப்பாரு மில்லை. அப்படி உபசரித்தாரிடத் தல்லது சாப்பிடச் சம்மதியார் மேலானபெரியோர்கள் எனக

"உலகத்தில் இப்படிச் செய்வா ரில்லாமையால், இரப்பினை அஞ்சக்கடவன்" என்பது ஒரு பழைய உரை முகம் - அதிதி யானவன் உள்ளே நுழைதற்கு இடமாகிய இல்லத்தான் நோக்கு, புகுதல் - அவ் இல்லத்தான் நோக்கிய அந்நோக்கெதிர் சென்று புகுதல், முகம் புகுதல் என்பது இல்லத்தான் முகனமர்ந்து நோக்க, அந்நோக்கினுக்கு எதிர்சென்று புகுதல்

304 மகாலக்ஷுமி தன்னை விட்டு நீங்கினாலும் தெய்வங் கோபித்துக் கொண்டாலும் செல்வார்பாற் சென்று இரா என்னும் நெஞ்சத்தைக் கோபித்துக்கொண்ட மனத்தினையுடைய, இரவாமை யாகிய உயர்ந்த ஒழுக்கத்தை நினைக்கின்றலது பொருளைத்தேடிப் புதைத்து வைக்கும் அறிவில்லார் பின்சென்று எனக்கு இல்லை யென்று அவர்கள் முகம்பார்க்கத் தாம் நாணிக் கழுத்தை வளைத்துக் கொண்டு நில்லார் மேலாயினார் என்க

305 ஒளியாத உறுதியான நெஞ்சையுடைய கண்களைப்போல் வாரிடத்தும் இரவாமல் உயிர்வாழ்வதே ஒருவருக்கு வாழ்க்கையா வது, இரக்கக்கடவேன் என்னும் நினைப்பினுள்ளும் ஒருவர்க்கு நெஞ்சு வெந்து உருகாநிற்கும் ஆதலால், இரக்கிறவன் மனம் எப்படி இருக்கும் என்க.

'கரவாது உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும் இரவாமைகோடி யுறும்' என்றும் 'இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள, உள்ள தூஉம் இன்றிக்கெடும்' என்றும் கூறினார் பொய்யில் புலவர் என்க.

306 தமக்கு இன்றியமையாத பொல்லாததே பொருந்தக்க டவது, நல்லதே பொருந்தாமல் விருக்கக்கடவது என்று சொல்லித் தன் நெஞ்சினைத் தானே இரக்க ஆசை நீங்கிவிடுதலால், பொருண் மேற் காதலையுடைய மனத்தினாலே துன்பமிகுத்துக் கண்ணுங் குழிந்து அன்னியர் பக்கற்சென்று இரக்குமிரப்பு என்ன காரணந் தான் என்க காதலகவற்றல் - காதலால்வருத்தல்

307 மலையின் அகலமெல்லாம் பொன்னைக்கொழித்து விழு கிற அருவியினையுடைய மலைநாடனே! இந்த உலகத்திலே எந்நா ளும் முன்பு பிறந்தவர்கள் வடிவல்லாமல் பலரும் புதியவர்களாய்ப் பிறந்தாலும் இரக்கிறவர்களை இகழ்ந்து பேசாதவனே என்றும் பிற வாதவன் என்க எல்லாரும் இரப்பவர்களை இகழ்வதால், இகழாதவனே உத்தமபுருஷன் என்பதும், அவனே மோக்ஷமடை தற்கு உரியான் என்பதும் கருத்து மகன் - உத்தம புருஷன். 'மகனே தோழி என்றனள்' (அகம். 48) என்புழியும் காண்க

'இல்லெனக்கு ஈக என்பவனை நகுவான்......யாதும் கடைப் பிடியாதா'ன் என்றார் பிறரும் (திரிக 75)

308. தனனுடைய வறுமை தன் மேனியை அழிககத் தன னெஞசினுளளே நலலறிவினைக கெடுததது, அறிவிலலாமையை நிறுததிககொணடு, ஒருவரிடததிலேபோய எனககு யாதானு மொனறினைத தரவேணுமெனறு இரகக இரககபபட்டவன இலலையெனறு மறுததானாகில தான சாகாமலிருபபனோ எனக

"இரபபவா சொல்லாடப போஓம உயிா" எனறாா வளளுவ னாரும மாறறுதல - மறுததல

309 "ஒருவா ஒருவரைச சோநதால அவா நினைவினபடியே ஒழுககவலலராய மனஙகொளள நடநதுபோவதலலது பெருமை கெட்டு எமககு யாதானும சிறிது தநது உதவி செயயமாட்டீரோ எனறு சொலலுஞ சொலலைபபாாககிலும மௌளத தான துறநது போயத தவமபணணும நலலவழி இனறோ" எனக

மேற்பாடலில இரததலினும இறததல சாலுமெனறாா, இப பாடலில துறததல சாலுமெனறாா. ஏகாரம எதிாமறை, வறுமை யால ஒடுஙகிஒழுகும வாழ்ககை எனறுமாம.

310 பழைய நட்பே காரணமாக ஒருவா தமபால விருமபி வநதவிடததுஅபபழைமைககுப பொருததமாக யாதானும ஓ உதவியைத தாமசெயக, அவவாறனறி அவவுரிமையினாலே வநத அவரை இவாதாஙகி உதவிசெயயாரெனில, வநதவாடநதவா தம நெஞசததில மூட்டபபட்டு அணையாமல நினறு சுடுகினற நெருபபு அது ஆகும எனக

கநது - பற்றுககோடு பசைதல - விருமபுதல கிழமை - உரி மை பொததுதல - மூட்டுதல பொறுததல - தாஙகுதல, ரக்ஷித தல கிழமை அவா பொருரெனனின எனறு கூட்டுக இது பாஞசாலனன துருபதன துரோணாசாரியன கிழமையைப பொறாது எளளியபோது, அததுரோணாசாரியனுககு உணடான மனககொதிபபுப போனறதொனறு.

'பழைய உறவே காரணமாகத தாமும அவரும கலநது நடநத முறைமையினைக கொணடு, அவவுறவினாலே அவரை வினவாமல ஒனறைசசெய்தால், அபபடி சசெயத காரியததை அவா

பொருளாகில, தன நெஞ்சிலே மூடடபபடடு ஆறுமல இருநது கொணடு சுடுகிறநெருபபலலவோ' எனபது ஒரு பழைய உரை

5 'பொதுவிய' லாவது, அரசியல முதலாக முறகூறிய வியலகளுககும 'பகையியல' முதலாகப பிற்கூறும இயல்களுககும பொதுவாகிய இயலாம

(32) 'அவையறித' லாவது கறற அறிவினையுடையவா திரட சியை அறிதல 'அஃதாவது உலகததுககுப பொதுபபட வழஙகும நூலகளைககறறுணாநதாரும தஙகள தஙகள சமய நூலகளைமாததிரம கறறுணாநதாரும, எலலா நூலகளையு முடடுகுநது உணமையான பொருளகளை உணாநதாரும, பலகற்றும ஒனறனையும சொலலாமலடஙகி யிருபபாரும கூடியுளள சபையிற போய, தான ஒனறனைசசொனனுல அது வெலலும தோறகும எனறு அறிநது சொலலுதலாம இரவினை அஞசுவான கலவிமுகததால அரசன பாற பரிசு பெற்றுவாழ முயலுபபோது அவ அரசனேடிருநத அவை யினது இயலபினை அறிதல இனறியமையாத தொனருக லின இஃது இரவசசததினபின வைககபபடடது

311 உணமையான ஞான நூலகளைக கற்றவருடைய ஸபையிலே கலநதிருபபதனைத தவிாநது, அவவிடததிலே ஞான மிலலாதபொருளைக கொணடுவநது அவறறினை மிகவும பரககப பேசித தாம சொனனை அறபபொருளையேகைககொண்டு ஒழுகும மயககமான அறிவுடையாா முன சானறோா தமமுடைய நலல ஞான உபதேசஙகளைச சொலலாமல நழுவ விடககடவா எனக

கோட்டி - ஸபை உறழதல - கலததல கை - சிறுமை இருள எனனும பொருளதரும காா எனனுஞ் சொல் ஈணடு மயக கததை உணாததிறறு 'வெளியாாமுன வானசுதை வணணங கொளல' என்றாா பெரியாரும

312 தனனுடைய நாவுக கிசைநத பாடஙகளைச சொல்லி நூலின் நயததினை உணாவாாபோல நடிததுச சமபிரதாயமலலாத பொருளை அநநூற்கூட புகவிடும வஞ்சகரான பொயபபுலவனை ஸபையிலே கறறடஙகிய உணமைபபுலவா அணுகாா; அவ்வாறு

அணுகினால் அத்தீயபுலவன் அச்சபையிலே அவ்வணுகியார்குடியைச் சீர்குறையும்படி பழிக்கும், அல்லது தன் தோள்களைத் தட்டிக்கொண்டு சண்டைக்கு எழுந்திருக்கும் என்க.

அணுகினால் என்பது அவாய நிலையான் வந்தது. நாப்பாடம், செவியேறக் கற்றபாடம் என்பது ஒரு பழைய உரை.

313 தாம் சொன்னவழியையே பிடித்துக்கொண்டு, தம் நா சுழன்றெடுத்தாற்போல அதனையே பலகாலும் சொல்ல விரும்புவாரும், பிறர் கற்ற கல்வியின் அளவையாவது அவர் மற்றையோர் மனங்கொள்ளும் வண்ணம் பொருளை விரித்துரைக்கும் வல்லபத்தையாவது தெளிய அறியாரும், தாம் கற்ற சில விஷயங்களைப் பிறர் மனம் கொள்ளும்படி உரைக்கும் வழியை அறியாரும், இவற்றைச் சொல்லின் நாம் தோற்பது நிச்சயம் என்பதனை அறியாராய் மரபில்லாதன பலவற்றை உரைப்பாருமான மாந்தர் பலர் உண்டு என்க.

'சொற்றஆறு' என்பது சொற்றாறு என்று அகரம் தொகுத்து, ஆறு கொண்டு என்பது ஆற்றுக்கொண்டு என்று வலிமிக்கு, 'சொற்றாற்றுக்கொண்டு' என்றாயிற்று. கற்ற ஆற்றல் என்றும் கற்றவன்மை யென்றும் கொள்ளப்பட்டது. சொல் தாறு என்னும் கொண்டு, சொல்லாகிய தாறு எனவும் ஆம். தாறு, யானை காளை முதலியவற்றைத் குத்தி ஓட்டச்செய்யும் முட்கோல்.

314 நல் ஆசிரியனிடத்துப் பொருள் விளங்க அறிந்த பாடத்தால் அல்லாமல் பேதையானவன் தான் பள்ளியிலே அபத்தமாகக் கற்ற பாடத்தால் ஒரு சூத்திரத்தைக் கற்றுக்கொண்டு அதனை நல்லறிவுடையோர் நடுவிலே புகுந்து கூசாமற் சொல்லித் தனனுடைய புல்லறிவினைத் தெரிய அறிவித்துவிடும் என்க.

கணக்கு - ஆயர், கணக்காயர் என்றாயிற்று, கணக்கு நெடுங்கணக்கு எனப்படும் அரிச்சுவடி, ஆயர், ஆயத்தை உடையவர், ஆயம் ஆவது கூட்டம், ஈண்டுச் சிறுபிள்ளைகளின் கூட்டம், சிறுபிள்ளைகளைக் கூட்டமாக வைத்துக்கொண்டு அரிச்சுவடி கற்பிக்கும் உபாத்தியாயர் என்பது கணக்காயர் என்பதன் பொருள், இவ்வுபாத்தியாயர் பால் இளமையில் வழுப்படக் கற்ற பாடம்

என்க பேதை நாணுது சொல்லுதல், 'ஒண்மை உடையம யாம் என்னும செருக்கிருல்

315 தாம வெல்லுகிறது காரணமாக விலஙகுகளைபபோல உண்மைபபொருளை மனததுககொள்ளாமல வெமபிக கொதிதது எழுநது எரிநதுவிழுவாரோடு எதிரததுத தமது சொலலின சதுரபபாட்டினைக கொணடு செலகின்றவா தமகையில் அவாகளால அறைநது உதிரககபபட்ட தம பலலைச சுரையின விதைபோனறு காண்பா எனக

ஒனறுதல - எதிரதது நெருஙகுதல விததகம - சதுரபபாடு பல்லுதிர அறையபபடுவா எனபது கருதது

316 சுதத பாடததைக கறறு, அதன பயனைத தெளிய அறியமாட்டாத மூடா வெறுககத தககனவறறைச சொலலும போது, அழியாத சீாமையினையுடைய சானறோா 'இபபடிக் கொத்த பிளளைகளைப பெற்றவள என்னபாவஞ செயதாளோ!" எனறு மிக வருநதித தாமும இபபுலலிய சொற்களைக கேட்டலாற் நாணி மெளனமாய நிறபா எனக

தேடருஞசீா எனறும பாடம 'சானறோனெனக கேட்ட தாய' 'ஈன்ற பொழுதிற் பெரிது உவ'ததலால, மூடனெனக கேட்டதாய 'குழவிஇறபபினுமஊனதடிபிறபபினும' நலமனறே என்றும, 'வாதுவல வயிறே வாதுவல் வயிறே நோவே னதனை நினனீனறனனே ... .எமமில செயயாப பெருமபழி செயத கலலாக காளையை யீனற வயிறே" எனறும, 'உணட எனமுலை யறுததிடுவன யான்' எனறும் இறப்பத துனபுறுவாள எனறு, இறபபபரிநது என்றா. சமழ்த்தல் - நாணல. கீழ் 155 ஆம பாடலிலும மூடர் சொற்கேட்டுச சான்றோா வருநதுவா என்று கூறப்பட்டதூஉம் காணக ஈன்றாட்கு என்பது 'எவ விளையா தாய்வயிறு கறிபப' எனறாற்போலநின்றது

317. பெறததககு பரிசுத தொகையினைப பெற்றுககொண்டு வழங்கும் பரத்தையரது தோள்போல வரன்முறையாகக கற்ப வர்க்கெல்லாம் நூல்கள் எளிதாய் வரும, ஆறனும தளிாபோன்ற

மேனியையுடைய அபபரததையரது உளளம போல யாவரும எளிதில அறிய ஒணணுததாகும அநநூலின் உட்கருதது என்க

'பெறுவது' ஆவது நிரணயிககபபட்ட பரிசததொகை என்க. அது 'மாதவிமாலைகுக் கோவலன கொடுதது வாஙகிய பரிசம் ஆயிரததெண கழஞசு பொன' எனறுறபோனறது தெறிபபட்டுக் கற்றலாவது ஆசிரியன நின்றநெறியினகட்பட்டு ஒழுகுதலும பிற்றைநிலை முனியாது கற்றலுமாம கலவியிற் பெரியார அயோத் திமாநகரைச சூழநதுளள அகழியை வருணிககு மிடததது, அது "பொன்விலை மகளிர மனமெனக கீழபோய" எனறு அருளிச் செயதமையால (கம்ப நகர 14) அமமகளிர கருத்தின ஆழததை அளவிடல அரிதெனக உலகத்தில நூலகறறாபலராக அவை யிலே தலைவராதறகுரியார சிலரேயாதறகுக காரணம யாதென வினவினாககு உததரமாக எழுநதது இபபாடல் எனக மேற் பாடல்களில இதனை விளககுவா முறி - மநதளிருமாம இது மாமை எனபபடும், மகளிரககுச சிறநத மேனியழகாகும பெறுவது கோடலாவது, கொடுபபாரைக கொளளாது விலையைக் கொள்ளுதல் எனபா பரிமே (குறள். 813)

318 அறிவு வரததகக புஸதககஙகளையே மிகுதியாகச் சேகரிதது அவறறினை அனபோடு சுமநதுகொணடு தமமில்லதஈ நிறைதது வைபபினும அவற்றின் பொருள தெரியாராய் மூலபா டததினை மாததிரம மறவாமல மனததிற போற்றியிருககினற புலவரும வேறுவா, அவறறின பொருளை அறிநது தெளிந் தும் பிறா ஐயஙகளைத தெளிவிததும சிற்றககவல்ல புலவரும வேறுவா எனக புததகமே - ஏகாரம பிரிநிலை அவற்றை - அப் புஸதகஙகளிலுள்ள பாடலகளை எனக. அகம, மனமுமாம புலவர் பிறறைதேேற்று மாற்றை அடுதத பாடலிற் கூறுவா

319 பழிபபற்ற காட்டுபபசுககளின் மநதை தங்குகின்ற நெடிய மலைநாடனே! நூலின பொருளைச சஙகிரகமாகச சொல்லு தல், விஸதாரமாகச சொல்லுதல், உட்பொருளைச சொலலுதல், அதனில் இல்லாது குறைநத பொருளை அழைததுச சொல்லுதல் ஆகிய இப்படிபபட்ட நான்கு வகையாலும ஆராய்நது விரிவுரை கூறமாட்டாதார சொற்கள் நூலிற்கு நல்ல உரை ஆமோ என்க.

நூற்குப் பொருள் கூறுதல் நால்வகைப்படும் என்பதனை 'பொழிப்பே அகலம் நுட்பம் எச்சமெனப், பழிப்பில் சூத்திரம் பன்னல் நான்கே' என்பதனால் அறிக. பொழிப்புரையாவது பாடம், பதப் பொருள், உதாரணம் என்ற மூன்றும் கூறுதல் அகலவுரையாவது எடுத்துக்கொண்ட நூலிலிருந்தாயினும், பிற நூல்களிலிருந்தாயினும் ஆக்ஷேபங்களைக் காட்டுதல் அவ்வாறு செய்து அவற்றிற்கு ஸமாதானங்கள் கூறித் தன் கோட்பாட்டை நிலை நிறுத்துதலும் நூலினுள் மறைந்துகிடக்கும் நுணணிய பொருளை எடுத்துச்சொல்லுதலும் முறையே நுட்பவுரை எச்ச வுரைகளாம் அடுத்த பாட்டில் ஸபையில் தலைவராதற்குரிய நல்லாசிரிய ரிலக்கணங் கூறுவர்

320 எவ்வளவுதான் அறிவு நூல்களைக் கற்று, பொழிப்பு அகலம் நுட்பம் நூலெச்சம் என்பபடும் உரை விசேஷங்களை அறிந்து கூறத்தக்காராயினும், நல்ல குடிப்பிறப்பில்லாதவர் ஒரு ஸபையிலே வழுச்சொல்லையுடைய கல்லாதவரை அணைத்துக் கொண்டு போகும் பொறுமையாகிய கருவியை உடையார் ஆவரோ ஆகார நற்குடியிற் பிறந்த நல்ல அறிவாளர்களோவெனில் அவ்வறிவு நூல்களிற் பழகித் தெளியாதாராயினும் காணப்படும் புலவறிவினைத் தாம் காணப்திலலை எனக

எனைத்தென்பது அளவினையும் தன்மையினையும் காட்டிநிற்கும் மேல் நூல் கற்பினும் என்று வந்தமையால், பிறர் என்பதற்கு நூல் கல்லாதார் என்று பொருள் கூறப்பட்டது அவரைக்காத்த லாவது, அக்கல்லார் பல்லாருள் நாணலபரிந்து கணணோடி அவ் ருரையை வருந்தியும் கேட்டல் 'நீரொழியப் பாலுண் குருகே போன்றவராதலின், நல்லறிவாளர்கள் நூல்தேறாதாரின் புலலறி வினை அறிவது இல்லை என்றோ தாம் என்றோ, தம்மின் வேறான தீயறிவாளர் புலலறிவே அறிவெனபதுகருதி 'வலம்புரி முத்தின் குலம்புரி பிறப்பும், வானயாற்றன்ன தூய்மையும் வானயாறு, நிலம் படாந்தன்ன நலம்படர் ஒழுக்கமும், திங்களன்ன கல்வியும் திங்களொடு, ஞாயிற்றன்ன வாய்மையும் யாவதும், அஃகாவன்பும் வெஃகா உள்ளமும், துலைநாவன்ன சமநிலை உளப்பட, எண்வகை யுறுப்பினராகித் திணணிதின், வேளாண் வாழ்க்கையும்

தாஅ ளாண்மையும், உலகிய லறிதலும் நிலைஇய தோற்றமும், பொறையும் நிறையும் பொச்சாப் பின்மையும், அறிவும் உருவும் ஆற்றலும் புகழும், சொற்பொருளுணர்த்துஞ் சொல்வன்மையும், கற்போர்நெஞ்சம் காமுறப்படுதலும், இன்னோரன்னதொன்னெறி மரபினர் பண்ணருஞ் சிறப்பின் நல்லாசிரியர்' என ஆத்திரேயன் பேராசிரியன் கூறிய பொதுப்பாயிரத்தானே அவையிற் றலைவராதற்குரிய ஆசிரியரைக் கண்டுகொள்க நவிறல் - பழகுதல், 'நாவொடுநவிலா நகைபடு தீஞ்சொல்' (அகம் 16) எனப்புழியும் காண்க

6 'பகையிய'லாவது இம்மை மறுமை வீடுகட்கு உறுதியாகிய புகழ் அறம் ஞானங்களை அடைய ஒட்டாமற் றடுக்கும் பொல்லா ஒழுக்கங்களைக் கூறும் இயலாம் அவ்வொழுக்கங்கள் புல்லறிவாண்மை, பேதைமை, கீழ்மை, கயமை என்னும் நான்கதிகாரங்களாற் கூறப்படும் அவற்றுள்,

(33) 'புல்லறிவாண்மை'யாவது, அற்ப அறிவினை ஆளுந் தன்மை அது தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து, உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொல்லைக் கொள்ளாமை அவையறிவானுக்குப் பகை புல்லறிவாண்மை யாதலின் அதன்பின் இஃது வைக்கப் பட்டது

321 அருளினாலே தாமத்தை உரைக்கும் அன்புடையவர் வாயினின்றும் வருஞ்சொல்லைப் பொருளைப்போலே மனத்திலே வைத்துச் சோர்வுபடாமற் காத்துக்கொள்ளார் அறிவுடையோர், ஒரு பொருளினும் வைத்து எண்ணத்தகாத அறிவிலியோர் அச்சொல்லை இகழ்ந்து சொல்லும், இஃதெனப்போல எனின், கூழ் போலக் காய்ந்த பாலைத் துழாவிய அகப்பை அப்பாலின் சுவையை அறியாததுபோல எனக

பாற்கூழ், கூழ்ப்பால் என்று முன்பின்னாகத் தொக்க உவமைத்தொகை கூழ் - சோறுமாம், 'கூழுடைவியன்கா' (புறம் 70)

322 பொருளும் முதலிய குற்றமில்லாதவர் தர்மவழியைக் கூறும்போதும் செப்பமுடையா ரல்லாதார் அதனைச் செவியிலும் ஏற்றுக்கொள்ளார், அஃதெனபோல எனின் தோலைக் கவ்வித்

தின்னும் புலையாகாயானது பாற்சோற்றின் ருசியை அறிந்து கொள்ள முடியாதவாறுபோல என்க

தாமோபதேசம் பண்ணுவார் குற்றமுள்ளவராயின் அவருப தேசத்தை ஒரு சிலர் கேளாதிருத்தல் கூடும், அங்ஙன மன்றெனபார் அவ்வியமில்லார் எனரூர் அறத்தாறு உரைக்குங் காலும் என்ற சிறப்புமமை விகாரத்தாற் ருககதெனக தோல் கல்விததினனும் என்றமையால், குணுங்கா நாய்க்குப்பிறவற்றினுங் காட்டில் தோலின்கண் விருப்ப மிகுதியைக் காட்டிற்று

323 கண்ணிமைக்கும் முன்னே தமமுயிா போகும் முறை யினை எல்லா வகையாலும் தாம கணடிருந்தும், தினையளவும் நன்மையினைச செயயமாட்டாத நாணமில்லாத மூட ஜனங்கள இருந்தாலென்ன இறந்தாலென்ன எனக எனைததது, எல்லாம

324 ஒருவனுக்கு ஜீவிததிருக்கும் நாளோ சில, அச்சில நாளும உயாக்குக காப்பிலலை, ஆதலால், கணடபேரோ டெல் லாம கூடி மகிழாமல பலரும தூறறும நிரந்தரமான பழியோடு தான ஒருவனுக விலகித தனிததிருந்து யாவருடனும பகைகொள ளுதல் என்னகாரணமோ எனக

ஏமம - காப்பு பழியால எனபுழி ஆல் ஒடுபபொருளில் வந்த மூன்றும வேற்றுமை உருபு மற்ற இரணடிடததும ஆல அசைகள் தணடுதல - நீங்குதல

325 ஒருவனை அவன சென்றிருந்த சபைமுனனே சென்று ஒருவன அவமதிதது வைதானுக, அப்போது வையபபட்டவன் 'இது நாம முனசெயத வினையின் பயன' என்று பொறுததுக் கொண்டு சுமமா இருப்பானுயின அதன்மேல வைதவன வாழ்ந்தி ருப்பானெனில அது அதிசயிககத்தககது தான என்க

வியததககான - வியததற்குத் தகுதியுடையன "மனறிற் கொடும் பாடுரைபபான் .. எச்சிமிழநது வாழ்வான்" என்பவாத லின், வியததககான் வாழுமெனின எனரூர · புததிர மித்திரகளத் திராதியரோடு நாசமுறுவான் என்பது கருதது

326 முதுமைப பருவம் பின்னும் அதிகரிபபதன் முன்னே அறச்செயலகளைச செய்யப பிறரையும உத்ஸாகபபடுததித தானும

அதன கண்முயலாதான், வீட்டிலுள்ள வேலைககாரியாலும எற்றித் தள்ளபபட்டு, 'வெளிபபுறததிற் போ' என்னும பொல்லாத சொற்களைக கூறபபடுவன எனக. ஊக்குதல - பிறரை உத்ஸா கபபடுததுதல், முயலுதல் - தான முயனறு செயதல நூககுதல - தளளுதல 'போகஎனனும' எனபது அகரம தொககுப, போகென னும எனறாயிற்று 'இறககககடவாய' எனலுமாம இது வைதற் பொருளில வநத வியஙகோள போ எனனும பொருளாயின விதிததற பொருளாய தொழுததை - வெள்ளாட்டி

327 புல்லறிவினா நலல நுகறசிகளைத தாமும பொசிதது நனறாக விரார. தகுதியுடைய பெரியோாகளுககு நனமைகளைச செயயார, தமககு அரணாகிய நலல அறததினது நெறிகளையுஞ சோமாட்டார, ஸமஸார ஸமபததிலே ஆழநதிருநது மறுமைககு உறுதிகளைமறநது வீணே தமமுடைய நாளகளைக கழிபபரெனக

ஆககம - ஈணடு ஆககிககொணட குடுமபமாகிய செலவம. மயஙகுதல் ஸமஸாரம ஸதிரமெனறு மயஙகுதல அவததமே வாழ் நாளைக கழியாமற் பயனபடக கழிததல் 'கருமமுமுள்படாய போகமுந துவவாத தருமமுந தககாாககே செயயா - ஒரு நிலையே முட்டினறி மூனறு முடியுமே லஃதெனபபடடினம பெறற கலம்' என்பதனால அறியபபடுமே

328 சிறுவயதிலே தொடஙகிததாம இறநது போகுமிடத துககு உணவாகிய அறததைதச சிகெனவே தேடிககொளளாமல தேடிய பொருளை இறுக இறுக வைததுககொணடு அறததினைச செயதறகுப பினனை நினைப்போமென றிருககும அறிவில் லாதவா தாமிறககுங காலதது நாவிழநது பேசவொணணு மையால கையால ஜாடைகாடடின பொனனும புளிதத விளஙகாயா மெனக

"புளிவிளஙகாயாவது அநதியகாலத்திலே ஒருவன் வாயெழா மலிருககிறபோது பெண்டு பிள்ளைகளைப பாாத்துத தான தேடின பொருள்களைத தருமம பணணசசொலலிக கையால சமிககைகு காட்டினால், அதனைபபாாத்து அவாகள அவன் சொல்லுகிறதை யறிநதும அறியாதாாபோல, 'ஐயா' விளாமபழமா கேட்கிறீா?

அது கொடுக்கும் பக்குவத்தசையிலில்லையே! என் செய்வோம்?" என்று மெய்யான உறவுபோல் அழுவார்கள் (சிந் 1553) பொருளைக் கொடுக்கச் சொல்லுகிற வசனம் பொய்யாய்ப்போம் ஆனபடியினாலே பொருள் வந்து கிட்டினபோதே தருமத்தைப் பண்ணவேண்டுமென்பதாம்." வல்சி - உணவு, ஈண்டு அறமாம் தோட்கோப்பு - தோளிற் கோக்கப்படும் கட்டமுது

329 சிற்றறிவினையுடையார் வறுமை வந்துவிட்டதும் தீராத பிணிவந்துவிட்டதும் மறுமைக்கு உறுதிவேணுமென்கின்ற மனத்தராய்த் தருமத்தைச் செய்யவேணுமென்றிருந்து, ஐசுவரியமும் உடல்வலிமையு முண்டானகாலத்திலே ஒரு சிறு கடுகளவானாலும் மறுமைக்கு உறுதியான தருமத்தைச் செய்யச் சிந்தியார் என்க

விழுப்பிணி - பிழைத்தற்கு ஏதுவில்லாத பிணி "விழுத் தொடை" (அகம் 53) என்புழிப்போல ஆற்றிய காலமாவது ஐசுவரியத்தாலும் உடல்வலியாலும் அறஞ் செய்யச் சத்தி பெற்ற காலமாம் ஐந்தை - சிறுகடுகு

330 அளவிறந்த காதலையுடைய தமது உயிரை ஒகதாரைக் கொண்டு போகிறதற்கு முயற்சிசெய்யும் கூற்றத்தினைக் கண்டு வைத்தும், பெறுதற்கரிய மனுஷ்ய சரீரத்தைப் பெற்ற புல்லறிவாளர் அறஞ்செய்கிறதற்கு நினையாமல் ஒரு பயனுமில்லாமலே தம்முடைய வாழ்நாளைக் கழிப்பார் ஐயோ என்க

என்னே, என்னும் வியப்பிடைச்சொல் உடம்பின் பெற்ற அருமையை உணர்த்திற்று கூற்றமுங் கண்டு என்னுமிடத்து உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது

(34) 'பேதைமை'யாவது யாதும் அறியாமையாம், "இந்த மனம் இந்திரியங்களின் வழியோடி அந்தந்த அனுபவங்களை உண்மையாகக் கருதி இந்தப் ப்ரத்யக்ஷ ப்ரமாண மொன்றினையுமே துணிந்து மற்றப் ப்ரமாணங்களான சாஸ்திர முதலானவைகளைத் தப்பறையென்று மயங்கி, மறுமைக் குறுதியை யிழந்து, இந்தப் பிறப்பிலே உலகத்துக்கு இயற்கையான முறைகளைத் தமக்குச் சிறந்தவர்கள் சொல்லக்கேட்டும் உட்கொள்ளாமல் இகழ்ந்து, பொல

லாதவர்களுடன் இணங்கி, எல்லாராலும் இகழப்பட்டு இம்மைப்பயனையும் இழத்தலாம்" என்பது ஒரு பழைய உரை. புலவறிவாண்மையின் மிகுதியே இஃதாகலின் இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

331. தம்மைக் கொல்லுதலில்லவல்ல பெரிய கூற்றம் தமது உயிரைக் கொண்டுபோகிறதற்குக் காலத்தையும் உபாயத்தையும் பார்த்துத் திரிய, இந்தச் சமுசாரமென்னப்பட்ட வலையிலகப்பட்டு நின்று, மனைவாழ்க்கையின்கண்ணே ஒழுகி, அதிலுண்டாகிய இன்பங்களை யனுபவித்து, அதனை மெய்யாகக் கருதி இறுமாந்திருக்குமவர் பெருமையானது, யாமையைக் கொல்லுகிறவர்கள் தண்ணீரை உலையாகவைத்து அதினுள்ளே யாமையை விட்டுத் தீமூட்ட, அந்தயாமை தனக்குப் பின் வரப்போகிற நிலைமையை யறியாமல் அந்த நீரிலே முழுகி விளையாடினாற்போலும் எனக.

யாமையென்று மேல்வந்தமையால், கொலைஞர் என்பதற்கு யாமையைக்கொல்லுகிறவர்கள் என்று பொருள் கூறப்பட்டது. 'உலைப்பெய்து அடுவதுபோலுந் துயர்' என்று கீழ் 114 ஆம் பாட்டில் வந்ததும் இச்செய்தியையே குறித்ததென்க. ஈண்டை வலையாவது ஸம்ஸாரவலை. செம்மாத்தல் - இறுமாத்தல்.

333. குடும்பத்துக்கு வேண்டுவனவெல்லாம் குறைவறச் செய்து நிரப்பிவிட்டு, தாமத்தைப் பின்னர் அறிவோம் என்று குடும்ப பாரத்திலேயே மூழ்கியிருப்பவர் தன்மையானது பெரிய கடலிலே முழுகப்போனவர் ஓசை எல்லாம் ஒருங்கே அவிந்தபின் நீர் ஆடுவோம் என்றிருத்தலோடு ஒக்கும் எனக. மற்று கீழ் 19 ஆம் பாட்டிற்போல வினைமாற்றின்கண் வந்தது. உடன் - எல்லாம்.

333. குலமும் தவமும் கல்வியும் உயர்குடிப்பிறப்பும் பிராய முதிர்ச்சியும் ஆகிய இவ்வைந்தினையும் தடையில்லாமல் ஒருவன் அடைந்திருந்தவிடத்தும், நன்மையமைந்த குற்றமற்ற பழைய சிறப்பினையுடைய உலக வாழ்க்கையை வாழ அறியாமையானது நெய்யில்லாத பாற்சோற்றுக்கு ஒப்பு எனக.

உலகமறிதலாவது 'உலகத்தோடு ஒட்ட ஒழுக'லை அறிதல், இதுகல்லார் கலவி பலகற்றும் அறிவிலாதா ராவர் எனக

இனி, நலமந்த மில்லாததோா மோக்ஷத்திற்கு உறுதியாவன அறியாமையுமாம எலலாவறறிறகும கடையிலே மூபபினை வைத்தா 'மூபபினகண நன்மைககனறுன.. .கல்லிபபுனே கைவிட்டான' எனபவாகளான

334 அறிவுடையோாகூறும உறுதிசசொறகளைக கேளாவாயி னும கற்கள் அதமரான மனிதாகளைககாட்டினும மிகவும நலலன, ஏனெனில, அவை தமமையடைநதவாககு நிற்றல, இருததல கிடததல நடததல எனனபபடட எலலாக காரியஙகளுககும நினைதத போதெலலாம உதவி செயதலான எனக

இனனினி எனபதனைக கீழ 29 ஆம பாடலிற கூறி யாஙகுக கொளக 'கலலே ஒருவன ஒரு பாகாரமாக வகுதது அதறகுப பிராணபரதிஷடை பணணினால அவனுககு அது சொாக்க மோக்ஷஙகளைக கொடுககும, ஒரு வாயககாலுககுமேல படுககச செயதால அநத வாயககாலிலே அவன விழாமல தனமேல நடநது போமபடி உதவி செயயும, தனனை எதிாததுப பகைவன வருஙகால அவனமேலே எறிநதால அது அபபகைவனைத தன் புறததி எறிநதவனை ரக்ஷிககும ' இவவாறுன பல உதவிகள அது செயதலால, தீஙகினையேயனறி உதவியே செயயாத கடையரின மேலானது எனறுா.

335 தான பெறுவது ஒனறுமிலலாவிட்டாலும ஐசுவரியங களைப பெறறவனையேபோலத தமமோடு எதிரிடாத பேரோடும கோபஙகொணடு வைரததினுலே பொலலாத வசனஙகளை உண மைபோலப புனைநது கூறுவிடடால பேதைககு நாவானது தனனைத தினனுமபடியான கொடிய தினவுடைததாகும எனக

336 நலல கொழுநதுகளையுடைய புனனைகள மலாநது பரி மளிககும கடறகரையையுடையவனே! தமமிடத்திலே பிரிய மிலலாதாா பினனே திரிநது அவாகளைத தமமிடததிலே பிரிய முள்ளவாகளாகப பணணிக கொள்ளுவோ மெனகிறவாகள ஆககிககொள்ள முயலும புல்லிய நட்பானது கல்லேக கிள்ளிக கையை வேறுவேலே செயய வொடடாதவாறு இழநததனேடு ஒககும எனக

தங்கண் அமாவில்லார் என்று மூலபாடத்தினைத் திருத்திக் கொள்க. அமாவு - விருப்பம் வணக்குதல் - வசப்படுத்துதல் கேண்மையை அறிவு என்பார் ஒரு பழைய உரைகாரர்

337 எறும்பு தனக்குக் குடிக்கிறதற்கு ஆகாவிட்டாலும் நெய்யிருக்கிற பானைப்புறத்தைவிடாமற் சுற்றிக்கொண்டிருக்கும், அப்படிப்போல யாதொன்றனையும் கொடாராலும் செல்வமுடையோரைச் சுற்றிக்கொண்டு விட்டுப்போகார் உலகத்துப் பேதையாயினார் என்க.

338 நல்ல ஸுகங்களைத் தினந்தோறும் அனுபவியாமலும், தாமத்தைச் செய்யாமலும், இல்லாதவர்க்கு யாதாயினும் சிறிதும் ஈயாமலும், எல்லா வாற்றாலும் இனியவர்களான மனைவியரைக் கூடாமலும், புகழ்பட வாழாமலும் இருக்கும் பேதையார் தம் வாழ் நாளையும் வெறுப்ரோ என்க

அருக்கதிக் கற்பினார் தோள் (சோதல்). திரிகடுகம் போலும் மருந்து' என்றும் 'கற்புடையாட் பூப்பினகட் சாராத தலைமகன. . . .கலவிப்புணை கைவிட்டா'ன என்றும் கூறப்படுதல்நோக்கி 'எல்லாம் இனியார்தோள் சேரார் முனியார்கொல் தாம வாழுநாள்' என்றார் இத்தகையார் இருத்தலினும் இறத்தல் நல மென்பது கருத்து நாளையும் என்றபாலதாய சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது

339 ஒருவர் தம்மை விரும்பிக்கொண்டாட அதற்குமாறாக 'யாம் அவரை விரும்புகின்றிலேம்' என்றிருக்கும் ஆய்ந்த நன்மையில்லாத பேதையாரிடம் காணப்படும் தீநட்பானது, ஒலிக்கின்ற குரலோடு பாய்ந்து விழுகின்ற அலைகடல் சூழ்ந்த உலகம் கைவசமானாலும் இன்னாது என்க

340 ஒருவன் விரிவாகக் கற்ற கல்வியும், பரந்த மென்மைக் குணமும், குடிப்பிறப்பும் அயலார் புகழவே பெருமை அடையும், அவ்வாறன்றித் தான் புகழின் மைத்துனர்கள் பலருண்டாய மருந்தினாலே தீராத பித்தன் என்று பலராலும் இகழப்படுவான் என்க.

ஈண்டுமைத்துனராவார் 'வரிசையறியாக் கல்லெனச் சுற்றமும்' விடுரும் தூர்த்தரும் நட்டுரும் வேழம்பருமாம் அவர் இவனை எப்பொழுதும் முகஸ்துதி செய்து புறத்திற்புகழ்ந்து அகத்திற் பழிப்பார் என்பது கருத்து பேதையர் தம்புகழ்ந்து தம்மையே ஏளனத்திற்குள்ளாக்குவர் எனக

(35) 'கீழ்மை'யாவது குலமும் குடியும் உடையரேனும் அவையிலலாதார்போலப் பொல்லாத குணமுடைய கடையராயினார் தன்மையாம் பொல்லாத குணமாவன், ஒருவர் ஐசுவரியத்தைப் பார்த்துப் பொறுமல் அவர் செல்வம் கெடத்தக்க காரியங்களைப் பண்ணுதலும், தாம் பெற்ற அற்பத்தைக் கொண்டு தம்மைத்தாமே மதித்துப் பிறரை அவமதித்தலும், ஒருவர் செய்த நன்றியை நினையாமையுமாம் பேதையாருள் ஒரு சாரரே கீழாயினாராதலால் பேதைமையின் பின் இது வைக்கப்பட்டது

341 அரிசிக் கப்பியை நாள்தோறும் ஒருபடியாகக் காலத்தாலே வாயிலே போட்டாலும் குப்பையைக் கிளறுகிறதை விடாத கோழிபோல மிகக் தாமங்கள் அடங்கியுள்ள நூல்களை விரித்துச் சொல்லி அறிவித்தாலும் கீழானவன் தன் மனம்போன வாறே நடந்துகொண்டு போவான் எனக

கடவது ஆ, கடமையாக காலை, நாளின் காலைவேளையுமாம்.

342 உறுதியான நூல்களைக்கற்று அதன் பொருளை உட்கொண்ட தோஷமற்றவரிடத்திலே தாமதியாது போகவேண்டுமென்றுசொன்னால் கீழானவன் நித்திரைகொள்ளவேணும் என்று சொல்லி எழுந்து போய்விடுவான், அஃதல்லாவிடின் தனக்கு ஒரு நோயினைக் கற்பித்துச் சொல்லிகொண்டு போவான் எனக

காழ் - உறுதி, மறங்குதல் - நோயுறுதல் என்பது ஒரு பழைய உரை

343 மிகுதியாக விழுகிற அருவியையுடைய மலைநாடனே! தாம்பெரிய செல்வத்தைப் பெற்றாராயினும், தமமுடைய ஒழுக்கம் குன்றாமல் அந்த ஒழுக்கத்தின் வழியே நடந்துகொள்ளுவார்

சான்றோர், பெரிய செல்வத்தைப் பெற்ற விடத்திலேயும் தாம் செய்யும் பொல்லாத குணத்தினைச் உடையவல்லவ னுவதல்லது செல்வமுடைமையால் பெருமைக்குணம் உடையனுகான கீழா னவன் எனக.

நடை - செல்வம் பிறங்குதல் - மிகுதல் பிறங்குநீப பணை' என்புழிப்போல

344 தினையளவு நன்றி ஒருவா செய்தால் அதனைப்பனை யளவு போலப் பெரிதாக நினைத்துக் கொண்டிருப்பார் சான்றோர் பனையளவாக நன்றியை எந்நாளுஞ் செய்தாலும் விளங்கும் அருவி யினையுடைய மலைநாடனே! ஒரு நன்மையினையும் அறியாத கீழான வனிடத்து ஒரு நன்றியும் இல்லையாய் விடும் எனக

நன்றியில் என்றும் பாடம் செய்தநன்று என்று முன் வந்த மையால், 'பனையனைத்து' என்பதற்குப் பனையளவு நன்றி என்று பொருளுரைக்கப்பட்டது

345 பொற்கலத்திலே சோறூட்டி அதற்குக் காவலாகப் புறத்தே மணிட்யா காத்துக் கொண்டிருந்தாலும் நாயானது எச்சிலை எப்பொழுது போடுவார்களோ என்று இமை கொட் டாமல் பார்த்திருக்கும், அதுபோலத் தன்னைப் பெருமையுடை யவனுகப் பண்ணிக் கொண்டிருந்தாலும் கீழானவன் செய்யும் காரியங்கள் அந்தக் கீழ்மைத் தொழிலேயாகும் எனக

புறந்தருதல் - காத்தல் சீர் - தன்மை பெருமையுடைத்தாக என்று முன் வந்தமைக்கு ஏற்பக் 'கருமங்கள் வேறுபடும்' என்ப தற்கு கீழ்மைத் தொழிலாகும் என்று பொருளுரைக்கப் பட்டது

346 தேவேந்திரனுடைய ஐசுவரியத்தை ஒத்த செல்வத் தைப் பெற்றாராலும் சான்றோர் எப்பொழுதும் வரம்பு கடந்த வார்த்தைகளைச் சொல்லார், காணிப்பொன்மேலே முந்திரிப் பொன் அதிகமுண்டாகில் கீழானவன் தன்னை இந்திரனைப் போல எண்ணிக்கொண்டு விடுவான் எனக.

சக்கரன் செல்வம் சக்கரச்செல்வமெனக வாசுதேவக் கோட் டம் என்பதுபோல, சக்கரன் - இந்திரன், 'புருகூதன் சக்கரன்

புரநதரன் மருததுவன் . ..ஐநதருநாதன் இநதிரன்பெயரே' என் பது பிஙகலம இந்திரனுய எண்ணிவிடும எனறு பின்னா வநதமைககு ஏற்ப சககரசசெலவம என்பதறகு இநதிரனுடைய ஐசுவரியமஎன்று பொருள கோடலே சிறபபுடைததெனக முநதிரி எனபதுமுந நூறறிருபது கூற்றில ஒனறு காணி எனபது எணபது கூறறி லொனறு காணிமேற முநதிரிமிகலாவது காணிமுநதிரி, அலலது காலவீசமாம, அறுபதது நானகு கூறறிலொனறு கால வீசம பொன பெற்ருனுயின், கீழாயினுன தனனே இநதிரனுக மதிததுவிடும எனக

**347**, குறறந தீரநத பசுமபொனமேலே குணம சிறநத நவ மணிகளே அழுத ி அழகுபெறச செயயபபடடதாயினும, செருப பானது தன காலுககலலாமல மறற உறுபபுககளிற பூணறகு ஆபர ணமாக ஆகாதவாறுபோல பெரிய'செலவததை யுடையனுயினும கீழானவன தான செயகிற தொழிலால மதிககபபடுவான எனக

மைதீர பசும பொனுவது, கிளிசசிறைப பொன, 'வீறுயா பசுமபொன' எனபுழியும் காணக (சிலப அரங 165) நவமணி களாவன வயிரம, மரகதம, மாணிககம, புருடராகம, வயிடூரியம, நீலம, கோமேதகம, முதது, பவளம எனபன அவறறுள வயிரத திறகு இநதிரசாபமபோல ஒளிவிடுதலும, எட டுபபலகையும, ஆறு கோடியும, தாரையும, சுததியும, தராசமும உடைமை குணசசிறப பாம மரகததிறகுப பசிய ஒளி பரததலும, நெயததலும, கிளிக கழுததும மயிலினகழுததும ஒததலும, பசுமபயிரபோலப பசதத லும. பொனமையோடு கூடிபபசததலும, பததிபாயதலும, பொன வணடின வயிறுஒததுத தெளிதலும குணசசிறபபாம மாணிககம நானகுவகை அவையாவன பதுமராகம, நீலகநதி, குருவிநதம, கோவாஙகு எனபன அவறறுள பதுமராகம தாமரைப பூ செஙகழுநீரபபூ, சாதகபபுளளின கண, இநதிரகோபம, மினமினி மாதுளமபூ, மாதுளவிதை, நெருபபுததழல முதலியன போனறி ருததல குணசசிறபபாம நீலகநதி அசோகநதளிர கோகிலக கண செமபஞசு, பலாசமபூ, அரளிபபூ, இலவமபூ எனற ஆறும போனறு ஒளிவிடுதல குணச்சிறபபாம குருவிநதம செமபஞசு, திலகம, உலோததிரம, முருககமலா, குனறி, முயல உதிரம

'சிந்தூரம், குக்கிற்கண் என்ற எட்டும் போன்று ஒளிவிடுதல் சிறந்த குணமாம். கோவாங்கு கோவைக்கனி, செங்கல், குராமலர், மஞ்சள் என்ற நான்கும் போன்று ஒளிவிடுதல் சிறந்தகுணமாம், புருடராகத்திற்கு 'பூச உருவிற் பொலந் தெளித் தனைய' நிறம் சிறந்தகுணமாம் வயிரேயத்திற்குத் தேன் துளிபோலவும் சூரியனொளிபோலவும் கலந்து விளங்குதல் சிறந்த குணமாம் நீலமணி நீலோற்பலம், சுரும்பு, காயாம்பூ முதலியனபோல நிறமுடைத்தாதல் சிறந்தகுணமாம் கோமேதகத்திற்கு மஞ்சளும் சிவப்பும் கலந்தாலொத்த நிறம் சிறந்த குணமாம் முத்துக்கு வெள்ளியைப் போலவும், அங்காரகனைப் போலவும் வெண்ணீரமை செந்நீரமையுடைமையும் உருண்டை வடிவுடைமையும் சிறந்தகுணமாம் பவளத்திற்கு உருட்சியும், சிந்தூரமும் ஈச்சங்காயும் முசுமுசுக்கைக் கனியும், துதளம்பழமும் போன்ற நிறம் சிறந்த குணமாம் இவ்வாறு மாண்டமணி அழுத்திச் செய்யப்பட்டதெனினும் செருப்புச் செய்துகொண்டவன் காலுக்கு ஆவதல்லது அவனுடைய பிற உறுப்பிற்கு அணியாவதில்லை என்பார் தன் காற்கேயாம் என்றார் காக்கத்தன் அடிநிலையும் (செருப்பும்) காண்ணப்பன் அடிநிலையும் முறையே பரதாழ்வாருக்கும் பரமசிவனுக்கும் சிரத்தே யணியத் தக்க மாண்புடைத் தாயினவே எனின், அவை காக்கத்தற்கும் கண்ணப்பற்கும் காற்கேயாயினமை சிந்திக்கப்படும்

348 காவலின்றலே பிறரால் அழிக்க ஒண்ணாத மலை நாடனே! கீழானவன் குணமானது கண்டோடமில்லாமல் ஒருவனைக் கடுமையான வசனங்களால் பேசவல்லதாம், பிறருக்கு வந்த துக்கங்களைக் கண்டு சந்தோஷப்படும் அடிக்கடி கோபாவேசமுடையதாகும், அக்கோபத்தினை ஒருவன் ஆற்றவும் ஆறாமல் வெந்து அயலாரை இகழ்ந்து பேசும் எனக

வேகம் சினவேகம், வேகுதல் என்பது கோபத்தின்ற கொதித்தல் ஏகுமாம் என்று கண்ணழித்து நல்லோர் சமாதானம் செய்யவும் பகைமை ஒழியாது மீண்டும் சண்டைக்கு எழும் எனக விறன்மலை, தன்பெருமையாற்பிற மலைகளை வெல்லும் வெற்றியினையுடைய மலையுமாம்

349 மதுவினைப்பொழிந்து பரிமளியாநின்ற நெய்தற்பூவினை யுடைய ஒலியாநின்ற கடற்கரையை யுடையவனே! தம் பின்னே ஒருவர் ஒருநாள் நிற்பினும் அவரைச் சான்றோர் பலநாள் பழகிய பழைமையானவர் என்று அவரிடம் இனிய குணமுடையராவர், கீழானவர்களோ தம்பின்னே ஒருவர் பலநாள் திரிந்துகொண்டு போனாலும் அவரை விரும்பாதே இகழ்வர் எனக.

பனுவல் பின்னிற்பினும் கீழாயவர் விழையாதே எள்ளுவர் என்று கூட்டப்பட்டது நிற்பினும் என்றபால் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது கீழாயினோர்பின் பனுவல் நிற்பின் என்றற்கு ஏற்பச் சான்றோர் முன் ஒருநாள் நிற்பினென்று வருவித்துரைக்கப்பட்டது. கீழ் 154 ஆம் பாடலினும் 'செலவழுங்கக் கண்ணொருநாட் காணினுஞ் சான்றவர், தொலைவழுங்க கேண்மையிற் றோன்றப் புரிந்தியாப்பார்' என்று கூறப்பட்டிருத்தலை நோக்குக. உயிர்த்தல் ஈண்டு மணம் வீசுதலுக்காயிற்று.

350 ஐயனே! கொளாய, காதுகொம்பு முதலிய உறுப்புக் களைக் குறைத்து, கொய்யத்தக்க இளம்புல்லைத் தினமும் கொய்து கொண்டுவந்து போகட்டு உணபித்தாலும் சிறிய இடபங்கள் வண்டியைப்பூண்டு இழுத்தலைக் கற்கமாட்டா, அதுபோல, அடைவிக் கப்பட்டசெல்வ முடையராயினும், கீழ்மக்களை அவர்கள் செய்கிற தொழிலால் அறியப்படும் எனக.

குறைத்தலாவது, காளைக்கன்றுகள் வளரவேண்டிக் கொம்பைச் சூட்டுக்கோலால் தீய்த்தலும் காதுகளை அறுத்தலும் வால் மயிரைக் கத்தரித்தலும் மரபு 'பெரிய எருது தினகிற புல்லைக் குறைத்து' என்பது ஒரு பழைய உரை தேறறினும் என்றும் பாடம் இதற்குத் தெளியச்செய்தாலும் என்பது பொருள். வையம் - தேர் என்ப, கொலலாவண்டி என்றும், கூடாரவண்டி என்றும் வழங்குப இதனை 'மானமா நோக்கியும் வைய மேறி' (சிலப். கட லா 120) என்புழிக்காண்க தீற்றுதல், உணபித்தல், 'நென்மா வல்சி தீற்றி' (பெரும்பாண 343) என்புழியும் காண்க கீழ் 347 ஆம்பாடலிற் கீழ்மக்கள் நன்குமதித்தற்கு உரியரல்லர் என்றார் இப் பாடலில் அவர் பிறர்க்குப் பயன்படுதலுமிலர் என்றார்

(36) 'கயமை' யாவது, "குலத்தாலும் குடியாலும் கல்வியாலுங் குறைவற்றிருக்கவும் அதனாலே ஒரு பயனுமில்லாதவராய்க் கீழானவர் செய்கையாயினவற்றைச் செய்தல் அவை பிறருக்கு ஒரு கேடுவந்தால் தமக்கொரு நன்மையாகக் கருதுதலும், பிறருக்கொரு நன்மை வந்தால் தமக்கு ஒரு கேடுவந்ததாக நினைத்தலும், தமக்கொருவர் நன்றி செய்தால் அவர்க்குத் தீங்குசெய்தலும், ஒருவரிடத்திலே தமக்கு ஒருகாரியம் ஆகவேண்டியிருந்தால் அஃது ஆக்கிக் கொள்ளுமளவும் அவர்க்கு உபசாரம் செய்து அந்தக் காரியம் ஆனபின்பு அவரை அந்நியரைப் போலப்பார்த்தலும், தம்மைத் தண்டிக்கத் தக்கவர்க்கு உபசாரஞ் செய்து சிறிது பொருள் கொடுத்தலுமாம்" என்பது ஒரு பழைய உரை கீழாயினாரின் ஒருசாராரே கயவராதலின், இது கீழ்மையின் பின் வைக்கப்பட்டது

351 நிறைந்த அறிவினையுடையவர் வயதிற் சிறியராயினும் தம்மனம் தீயவழியிலே செல்லாமற் காத்தும் நல்வழியிலேயே செல்லுமாறு வளப்படுத்தியும் தம்மை அடங்கச்செய்வர், புல்லறிவினோர் பிராயம் முதிர்முதிரத் தீய தொழில்களில் தழும்பேறித் தீயொழுக்கங்களிலே ஒழுகித்திரிந்து பருந்துபோல மனத்துள்ளே குற்றம் நீங்கார் எனக்

ஆர்ந்த என்பது ஆர்த்த என வலித்தல் விகாரம்பெற்றது காத்தலாவது ஐம்புலன்களையும் நெறியினின்றும் விலகாமற் காவல் செய்தல், ஓம்புதலாவது நன்னெறியிலே மேலும் மேலும் செல்லுமாறு மனத்தை வளர்த்தல் எருவை - பருந்தின் ஒருசாதி அது, மூட்டுவாயெல்லாம் கழன்ற மிக்க முடைநாற்றமுடைய தசையை மிகவிரும்பிக் கவரும் இயல்பினதென்பதும், இடுகாட்டிலும் சுடுகாட்டிலும் சென்று பிணத்தின் தலையைக்குத்திக் கண்மணிகளைப் பிடுங்கிக்கொண்டு பறந்துசெல்லும் தன்மையதென்றும் கூறுப இதனை, 'செஞ்செவி எருவை புலிதுறந்த கலவுக்கழி கடுமுடை, கொள்ளைமாந்தரின் ஆனாது கவரும்' என்றும், 'ஆளழித் துயாத்த அஞ்சுவரு பதுக்கைக், கூர்நுதிச் செவ்வாய் எருவைச்சேவல், படுபிணப் பைந்தலை தொடுவன குழீஇ, மல்லன்

மொசிவிர லொற்றி மணிகொண்டு, வல்வாய்ப் பேடைக்குச் சொரியும்' என்றும் பயின்றுள்ளமை கொண்டு அறிக (அகம் 3,215). புலவறிவினரும் இவ்வெருவைப்போலப் பலரும்வெறுத்து அஞ்சத்தக்க தீத்தொழிலை விரும்பிச்செய்வார் எனக். போத்து, பொத்து என்பதன் நீட்டல்விகாரம், பொத்து - பொந்து, ஈண்டு மனக்குற்றமுடைமை. அறிவால் மனம் நிறைந்திராமையுமாம். இரிதந்தரிவைபோல என்று பாடங்கொண்டு 'பொல்லாத தொழிலை நினைத்திருக்கிற வேசிகளைப்போல' என்பது ஒரு பழைய உரை. இப்பாட்டின் முன்னிரண்டடிக்கட்கு பரஸ்லாதனையும் பின்னிரண்டடிக்கட்கு ஹிரண்யனையும் உதாரணங் காட்டலாம்.

352 நீர் அறாத வளமுடைய பெரிய பொய்கையிலே எப்பொழுதும் விடாமல் வாழ்ந்திருந்தாலும் தனக்குள்ள வழும்பினை அறுக்கமாட்டா, தேரையானவை. அதுபோலக் குற்றமற்ற சீர்மையினையுடைய நூல்களைக் கற்றாலும் அந்நூல்கள் சொன்ன முறைமையிலே ஒழுகத்தக்க அடக்கமொன்றுமில்லாதவர்கள் நல்ல குடியிலே பிறந்தவர் என்றுதல் நூல்கற்றவர் என்றுதல் சான்றோரால் தெளியப்படும் தன்மையராதல் அரிது எனக்.

பொய்கைக்குச் செழுமையாவது நீர்வற்றாமையும் தாமரை செங்கழுநீர் முதலியன பூத்துப் பரிமளித்தலுமாம். தேரைக்கு வழும்பாவது அதன் மேலுள்ள வழுவழுப்பான பாசி. நூலுக்கு வழும்பாவது கரவடர் (மூலதேவர்) இயற்றிய சில நூல்களைப்போலக் களவு, காமம் சூது முதலியவற்றைக் கூறுதல். ஞானயாகத்தையே உபதேசிக்கும் நூலென்பார் வழும்பில் சீர் நூலென்றார். நுணுக்கமாவது ஈண்டு ஐம்புலன்களும் அடங்க ஒழுகுதல். கல்வி இல்லாராயிருத்தலினாலே கயவர் தீத்தொழிலிற் கன்றிப் பொத்து அறாயினார், வழும்பில் சீர் நூல்கற்பின் நன்மக்களாகாரோ என்றுவின வினாக்கு உத்தரமாக எழுந்தது இப்பாட்டு எனக். "கற்றனர் ஞானமின்றேற் காமத்தைக் கடக்கலாமோ?" என்ற கல்வியிற் பெரியார் அருளிச்செயலும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. "ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப் பேதையிற் பேதையாரில்" என்றார் பெரியாரும்.

353 கூட்டமான மலைகளையுடைய நாடனே! ஒருவர்முன் னின்று கூச்சமின்றிக் குற்றமெல்லாம் மறையக் குணமே கூறுதற் கும் சான்றோர்க்கு அரிதாயிருக்க, எதிரில் நின்று தாக்ஷிணியமில் லாமல் குணமெல்லாம் அழியக் குற்றமே கூறும் சிறியவர்கட்கு நாவானது கல்லினாலோ விஷத்தினாலோ வேறு எதனாலோ பண் ணப்பட்டது அன்றோ! எனக்.

கணம் - கூட்டம். கண் - தாக்ஷணியம். அழுங்குதல் - கெடு தல். ஒருவர் உழை நின்று கண் இன்று குணன் அழுங்கக் குற்றம் கூறும் சிறியவர் என்று கூட்டப்பட்டது. இதற்கேற்பச் சான் றோர்க்கு 'உழை நின்று கண் இன்று குற்றம் அழுங்க' என்று வருவித்து உரைக்கப்பட்டது. குற்றம் மறைத்துக் குணத்தினை எதி ரிற் புகழ்வதால் புகழ்ப்பெற்றார் அப்புகழ்ச்சியினை வஞ்சப்புகழ்ச்சி என்று திரியக் கொள்ளுவாரோ வென்று சான்றோர் அஞ்சுவதால் 'குணனேயும் கூறற்கு அரிதால்' என்றார். உம்மை சிறப்பும்மை. சான்றோரது நா செஞ்சொல்லேயே பயிலுமென்பதும் சிறியவர் நா அதனின் வேறான தீச்சொல்லேயே பயிலுமென்பதும் கருத்து. என்று - எத்தன்மைத்தான பொருள் ஓ, இரக்கப்பொருளில் வந்தது. இக்கயவராற் பிறர்க்கு என்ன தீங்கு என்றார்க்கு உத்தர மாக இப்பாடல் எழுந்ததெனக்.

354 இரண்டு புறமும் உயர்ந்து அகன்ற அல்குலையுடைய குலமகளிர் வெள்ளாட்டிகளைப்போலத் தமது உடைமேனி முதலி யவற்றை அழுக்கடையப் பண்ணிக்கொள்வாரே யன்றித் தம பெண்மையினது அழகைப்பிறர் கண்டு மயங்குமாறு அலங்கரித்துக் காட்டலை அறியாராய், இறக்கணனே உறைந்து அடங்கியிருப்பார்; அவரின் வேறான பரத்தையரோ வெனில் தம பெண்மையினது அழகைப்புதுவெள்ளம் போலக் கஸ்தூரி, பூ, சந்தனம் முதலிய வற்றால் அலங்கரித்துக் கொண்டு, பலருக்கும் விளங்கக் காட்டி, தம்மையொத்தார் பலரோடு கூடிச்செருக்கோடு இராசவீதி கடைவீதி களில் நடந்துசெல்வர் எனக்.

முன்னையதான பெண்ணீர்மை, கற்பு நாண்முதலிய நற்கு ணங்களமைந்த பெண்ணியற்கை. பின்னையதான பெண்ணீர்மை,

அகக்குணங்கள் ஒழிந்த பெண்ணியற்கை புதுப்பெருக்கு "பூ நிரைத்தும் மொன்றாது பொருந்தியூழ் தேன்வளாவியும் செம்பொன் விராவியும், ஆனமாமதம் ஆற்ற வளாவியும்", "மதமழ யானை யென்ன" (கம்ப ஆற்று 8,16)ச் சேறல் நோக்கி அது பரத்தையாகக் தொழிலுவமமாகக் கூறப்பட்டது மதித்தல் - செருக்குதல் இது 'மத' என்னும் உரிச்சொல் ஈறு திரிந்து நின்றது 'மதித்துஇறப்பார் மறறையவா' என்பதற்கு இயையக் குலமகளிர் இலவினை இறவாது அடங்கியிருப்பார் என்று கூறப்பட்டது அவர் இலவினைக் கடவார் என்பதனைப் 'படிசொற் கடவாத பாவாய்' என்பதனால் அறிக.

பகைவர்பாலும் நொதுமலர் பாலுமே கயவர் குற்றங் கண்டுரைப்பர் நட்டோர்பால் அவ்வாறு செய்யார் என்றாற்கு, அவர் நன்று, அவர் நட்டோர்பால் சிலநாள் உறவு பாராட்டித் தம் காரியம் ஆனபின்னர் அவரை அவமதிப்பர் என்றாராயிற்று "புதுப்புனலும் பூங்குழையார் நட்புமிரண்டுமே, வீதுப்பறநாடின் வேறல்ல - புதுப்புனலும், மாரியறவே யறுமே யவரன்பு, வாரியறவே அறும்" என்று மேல் 370 ஆம் பாடலிற் கூறுவதும், "தலையும் ஆகமும் தாளுந் தழீஇ யதன், நிலைநி லாதிறை நின்றது போலவே, மலையினுள்ளவெலாங்கொண்டு மண்டலால், விலையின் மாதரை ஒத்தது வெள்ளமே" (கம்ப ஆற்று 6) என்று கூறுவதும் நோக்கிப் புதுப்பெருக்கத்தைப் பரத்தையருக்கு உவமை கூறுங்கருத்தினைச் சிந்திக்க

355 கயவர் தமக்கு நன்மையளிக்கும் உத்தமர்கள் ஏவிய எவ்வேலையையும் செய்யார், தம்மைஅடித்து வருத்திப் பொல்லாங்கு செய்யவல்லாரைக் கண்டபோது அவர்க்கு எவ் ஏவலையும் செய்வார், அதனால் அக்கயவர், தளிர்மேல் நின்றதானாலும் பிறர் ஒருவன்று கொண்டு அடித்தாலன்றித் தானாக அத்தளிரின் உள்ளே புதியாத உளியின் தன்மையினை ஒத்தாராவர் எனக.

இனி அக்கயவர் தமக்கு உறுதியாயின சொல்வாரிடத்தும் இனியரல்லரோ என்று வினவினாற்கு உத்தரமாக எழுந்தது இப்பாடல் என்க. தட்டுதல் - அடித்தல் "ஏவவுஞ் செய்கலான்" என

றும "கரும்புபோறக் கொல்லப் பயன்படுங்கீழ்" என்றுங் கூறினார் பொய்யில் புலவரும் எனக

356 மலையில்வாழும் குறவன் தன் மலைதந்த பொருளின் நலத்தினை நினைத்து அம்மலையைப் பாராட்டுவன், நாட்டில்வாழும் உழவன் தனக்குப் பயன்படவிளைந்த விளைநிலத்தினை நினைந்து அதனைப் பாராட்டுவன், சான்றோர் தமக்கு ஒருவர் செய்தநன்மை யை நினைத்துச் செய்தாரைச் சிறக்கப் பாராட்டுவர், கீழானவன் தன்னை ஒருவர் ஒருகால் வைததனையே நினைத்து அவரைப் பகைப்பன் எனக

உள்ளுதல் - நினைத்துப் பாராட்டுதல் குறவன், உழவன், சான்றோர் என்ற இவர் முறையே மலைநலம், நிலநலம் பிறர்செய்த நன்று ஆகிய இவைகளை நினைத்திருத்தல் இயல்புபோலக் கீழ் பிறர் வைததனை நினைத்திருத்தல் இயல்பென்பதும், குறவன் நில நலத்தை உள்ளுதலும், உழவன் மலைநலத்தை உள்ளுதலும் சான்றோர் பிறர் செய்த தீமையினை உள்ளுதலும், அரிதாயவாறு போலக் கீழ் பிறர் செய்த நன்றியை உள்ளுதல் அரிது எனபதும் கூறினாராயிற்று "நோக்கு நிகரல்லார் நீரல்ல சொல்லியக் கால், வேர்த்து வெகுளார் விழுமியோர், - ஓர்த்ததனை, உள்ளத் தான் உள்ளி உரைத்துராய் ஊர்கேட்பத், துள்ளித்தூண் முட்டுமாங் கீழ்" என்ற 64ஆம் பாடலையும் நோக்குக இதனால்,அற்பத்திறகும் பெருங்கோபங் கோடல் கயவர் குணம் எனபது கூறப்பட்டது

357 தமக்கு ஒரு நன்றி செய்தவர் பின்னர் ஒருசேர நூறு பிழைசெய்தாலும் சான்றோர் பொறுப்பர், கயவர்களோ தமக்கு எழுநூறு நன்றியைச் செய்தவர் ஒரு தீங்கினை அறியாமையால் செய்துவிடின் அவ்வெழுநூறு நன்றியினையும் தீங்காய் எண்ணி விடுவர் எனக,

ஒன்றுதல் - கூடுதல், ஒருசேர என்றபடி, ஊர்வன, பறப்பன, நீர்வாழ்வன, விலங்கு, தாவரம், தேவர், மக்கள் என்ற பிறப்பு ஏழினும் பிறப்பொன்றுக்கு நூறு நன்றி விழுக்காடு எழுநூறு நன்றிசெய்து என்றார் போலும்! இது நன்றி மறத்தலும் கயவர்க்கு இயல்பெனபது கூறப்பட்டது

358 வறுமையுற்ற காலததும நறகுடியிற பிறநதவா செய்கிற உதவியைப பெருஞ்செலவம எயதியவிடததும அறிவிலியாகிய கயவா செயயமாட்டாா, கொமபின்கண இருமபாலே யனறி வயிரததாலே பூணகட்டினும பனறியானது போரிற பகைவாககு வருததததைச செயயவலல யானை ஆகுமோ எனக

எடு - பொல்லாஙகு 'எடுநிலததில இடுவதனமுனனம்' என்றா பெரியாரும எடு பருவம எட்டுபபவரும ஐகாரம சாரியை. ஈணடு வறுமையை உணாததிறறு செயிாததல - வருத்துதல் யானைககொமபில இருபபுபபூண செறிததலும, அதனைககொணடு பகைவா மாாபினை உழுவிததலும, அவாகோட்டை மதிலினை இடிபபிததலும வழககு 'வயிரம செறிபபினும' எனபதறகு வயிரம முறறினும' எனபது ஒரு பழைய உரை கீழ இறபிறபபு என னும அதிகாரததில, 'செலலாவிடததுங குடிபபிறநதாா செயவண, செலவிடததுஞசெய்யாா சிறியவா - புலவாய, பருமம பொறுபபினுமபாயபரிமா போற் பொருமுரண ஆறறுதலினறு' எனறுகூறப பட்டதும நோககுக கயவா பெருஞசெலவ ராயினும அறஞசெய வதிலா என்றா

359 "இனறைககே ஐசுவரியவானவோம இவ வைசுவரியம மாறுமலே மேலும விருததியாவோம, இனிசசிறிது தாழ்ததுவிருததியாவோம" என று தமககு எயதாத செலவததை எயதியதாககருதி மனோராசசியம செயது, அதையே தொடாநது உரைததலினும மகிழநது, கடைசியில வேறு சமபவிததலால மனம வருநதி, பூவினுடனபிறநத தாமரை மலரோடு பிறநத தாமரை இலை போலப பயனின்றி அழிநதாா பலா எனக

ஒனறி ஒனற எனததிரிகக ஒனறி உரையினமகிழநது உள ளம வேறுதலாவது, கிருபண சாமனெனனும பிரமசாரி தான பிசசை எடுதது ஈட்டிய அரிசியினைப பானையிற சேமிதது, அதனைக் கீழபபடுததுககொண்டு, "நாட்டிற சிறுவிலைக காலம எயதின இவவரிசியினை இருமடஙகு விலைககு விற்று, ஒருகாராடுவாஙகி, அது குட்டியீனறு பலகியபினனா அவறறினை ஓராவினுககு மாறறி, அதுகனறுகளோடு நிரையாயினவளவில, அவற்றினை ஒருகுதிரைக்

குமாறறி, அது குடடிகளீன்று பல்கியவிடடதது விறறுப பெருஞ செலவமுடையேனுகி, ஒருபாாபபனக கனனிடை நாடி மணமபுரி வல அவளா வயிறறில ஒருமகன பிறபபான , அவன தவழுகறறுச செலவுழி, 'நஙகாய மகனேஎடு' எனககூறியேறகு, அவள வேலை மிகுதியால எடாளாக, அவனே இவவாறு உதைபபல'' எனறு உதைததது, அரிசிபபானையை உடைததது, அரிசியைத தெருவிற சிதைததது மனம வேருகியது போனற கதையை யுடகொணடு இஙஙனம கூறினா எனக.

'கயவா உளளபொருளை வைததுககொணடு அறஞசெய யாமல மறுமைககு உறுதியை இழநது, தமககுத தகாத செலவத திறகு ஆசைபபடடு இமமைபபயனையு மிழநது பலராலும இகழப படுவா'' எனபது ஒரு பழைய உரை

360 நீரினுளளே பிறநது பசுமை நிறமுடைய தாயினும சடையகததுஈரம தஙகியிருததல இலலையாதலபோல, நிறைநத பெரிய செலவததிலே பிறநது வளாநதிருநத விடததும மலையிடத துளள பெருஙகலலை ஒததாரை உலகம உடையதாயிரா நினறது எனக

ஒரும, அசை கிடை - நெடடி நிறைபெருஞ செலவம எனறபாலது எதுகை நோககி நிறைபபெருஞ செலவம எனறு யிறறு கீழ் 'கலஙணி நலல கடையாய மாககளின' எனறு கயவரைக கலவினும கடையராகக கூறியவா ஈணடு கலலொடு அவரை நேரொபபிததது ஈரமினமையின கலலும கயமும ஒககுமெனறு கருதின ரேனும், மறறைககூறகள போல இஃது ஒருவரால எடுப பிததுப படிமம வகுததலும நிறுததலும படுததலும செயது பயன கோடறகு ஆகாது எனபதனைவிளகக அறைபபெருஙகல எனறு அடைகொடுததாா எனக. இதனலை கயவரது தயையினமையும எதறகும் பயனபடாத தனமையும கூறபபடடன

7 'பன்னெறியிய' லாவது, தொடாபுடையன வலலாத பல நெறிகளையும கூறும இயல எனக ''இநத நூலை அதிகார அடைவு செயத பதுமஞா அதிகாரஙகளின மிகுதத பாடல்களைச பலநெறி

களையும் சோதித்துச் சோதது ஓரதிகாரமாகப் பொருட்பாலிற் கோத்தார்" என்பது ஒரு பழைய உரை.

(37) 'பனனெறி' யாவது, மேற்கூறியவாறு பல நெறிகளையும் கூறும் அதிகாரமாம் இதுகாறும் பெரும்பாலும் செய்வன தவிர்வனவான புருஷ தாமங்களைக் கூறிவந்தார், இனிச் செய்வன தவிர்வனவான ஸதிரீ தாமங்களைக் கூறுகின்றா ராதலின இவ்வதிகாரத்தினை அவ்விருவர் தாமங்களும் கூறும் அதிகாரங்கட்கு இடையிற் பெய்து வைத்தா ரென்று கொள்ளப்படும்

361 மேகமண்டலத்தினை உருவி உயர்ந்திருக்கிற மாளிகை யாய, நல்ல காவலையுடையதாய், மாணிக்கமுதலிய நவமணிகளி ழைத்தவிளக்கு அகண்டமாக எரிந்து கொண்டிருப்பதாயச் சிறந்தி ருந்தாலும் என்னபயன்? நற்குணங்களால் விரும்பத்தக்க மனையா ளையிலலாதான வீடானது பார்க்கிறதற்குப் பயங்கரமாயிருக்கிற காட்டினை ஒக்கும் எனக

மழை - மேகம் திளைத்தல் - இடைவிடாது அம்மேகத் தோடு பயிறல் 'திளையா வரும் அருவிக் கயிலை' (திருக் 395) எனபுழிப்போல இழைவிளக்கு, வினைத்தொகை விழை, முத னிலைத் தொழிற் பெயர் பாண்டை மனையாளாவாள் மேல் 39 ஆம் அதிகாரத்திற் கூறிய குணங்கள் நிறைந்த மனையாள் எனக் 'காண்டற்கரிய காடு' என்றார், முனிவரர் வாழுங் காடன்றிப் புலி முதலியன வாழுங் காடு என்னுங் கருத்தினால் இடுகாடு, சுடுகாடு எனினும் பொருந்தும்

362 காவலிற் சற்றும் சோர்விலலாத வாளோரர் காவலாக் குளளே யிருந்தும், அக்காவற் சோர்வினைச் சிறிது பெறுவராயின் எவ்வளவாயினும் சோரஞ்செய்யாத காலம் சிறிதேயாம், அம் மெததென்ற மொழியினையுடைய மகளிர் கற்பொழுக்கத்தினைக் கொள்ளாத காலம் (சோரஞ்செய்கிற காலம்) பெரிதேயாம் எனக

வாள், ஆகுபெயரால் வாள்வீரரை உணர்த்திற்று வழுக்கு எனைத்தும் இல்லாத வாளோரர் ஆவார், 'துஞ்சாக்கண்ணர் அஞ்சாக் கொள்கையர், அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் செறிந்த, நூல

வழிப்பிழையா நுணங்கு நுண்டேர்ச்சி ஊங்கருங் கணையி னார்' என்று சான்றோர் கூறிய இலக்கணங்கள் அமைந்த வாள்வீரர் என்க (மதுரை அடி 644 - 647) பாணி - காலம் அசைநிலை மொழியார் எனப்புழிச் சுட்டு, பண்டறிசுட்டு, கீழ்ப்பாட்டிற் கூறிய மாணபிலா மனையாளுமாம் சின்மொழி - சிலவாய மொழி

363 புருஷன் கோபத்துக்கு அஞ்சாமல் 'அடி' என்று எதிரே நிற்கிற மனைவி யார் தாதனொடொக்கும், விடியற் காலத்திலே சமையலறையிற் பிரவேசியாதாள் மருந்திலே தீராத நோயோ டொக்கும், சமைத்த உணவினைப் புருஷனுக்கிடச் சம்மதியாது தானுண்பவள் இல்லிலே வாழும் பேயோடொக்கும், இந்த மூன் றும் பெரும் கொண்ட புருஷனைக் கொல்லத்தக்க ஆயுதம் போன றவா என்க

கூற்றம், பிணி, பேய் என்ற மூன்றனுள் கூற்றமானது எய்தி யவனைப் பலநாள் வருத்தாது அணுகியவுடன் கொல்லுமம், பிணி அகப்பெய்தியானைப் பலநாள் வருத்திக்கொல்லும் பேய் அவனைப் பலநாள் வருத்திக் கொல்வதோடு, அவன் மனையகத்து மிருந்து அவன் வமிசத்துள்ளார் யாவரையும் பீடித்து வருத்தும் இவ்வ மையின் தன்மையை உபமேயத்தினும் பொருத்திக் கொள்க

364 கலியாணத்தை நீக்கிவிடச்சொல்லிக் கேட்டும் நீக்கா ளுட, இருதயம் வெடித்துப்போக முழங்கிய சாபப்பறையினது ஆர வாரத்தினைக் கேட்டுந் தெளியாளுய, பின்னையுமொருத்தியை மனைவியாக மணந்துகொண்டு அவளையே மறுமைக்கு உறுதி என நயப்பி மகிழ்ந்து ஒருவன் இருக்கும் இருப்பு, கல்லையெடுத்துத் தன்மேல் எறிகிறதவற்றையுடைய பித்தர் இருப்போடு ஒக்கும் என்பார் என்க

ஏமம் உறுதல் என்பது ஏமுறுதல் என்று குறைந்து நின்றது ஏமம் - ரக்ஷை என்பார் என்பதற்கு எழுவாய் பெரியோர்

365 ஒருவர்க்குத் தலைமையானது தவத்தினை முயன்று செய்து வாழ்தல், இடையானது நல்ல குணமுடைய ஸ்திரீ களுடன் கூடி இல்லறம் நடாத்துதல், கடையானது பொருள் கூட்டவில்லை யென்று நினைத்து அந்த ஆசையால் தம்மை அறிய மாட்டாதார் பின்னே சென்று நிற்கும் நிலை என்க.

"உணரார்" ஆவார் தமது குடியும் குலமும், தன்மையும் முத லான நன்மைகளை அறியாதார்" என்பது ஒரு பழைய உரை

366 பலநூல்களையுங் கற்றுப் பொழுதினை இனிது கழிப்பார் தலையான அறிவுடையார் நல்ல காரியங்களைச் செய்வதனாலே வந்த பொருளை ஏற்றவர்க்கு இட்டும் தாமும் உண்டும் பொழுதி னைப்போக்குவார் இடையாயினார் இனிய வஸ்துக்களை உண்ணப் பெற்றிலேம் நிறையப் பொருள் பெற்றிலேம் யாம் என்னும் வெறுப்பினால் இரவிலும் உறங்கார் கடையாயினார் எனக

367 செந்நெல்லால் உண்டாகிய நீண்டமூளை பின்னும் அச் செந்நெல்லினது தன்மை தப்பாமல் விளைதலால், அந்தச் செந் நெல் கழனி முழுதும் விளைகிற வளப்பத்தையுடைய ஊரனே! தகப்பனறிவே பிள்ளையின் அறிவாம் எனக

நோக்கி யறிகல்லாத தம்முறுப்புக் கண்ணுடி, நோக்கியறிப வதுவேபோல - நோக்கி, முகனறிவார் முன்ன மறிப வதுவே, மகனறிவு தந்தை 'யறிவு' என்ற பழமொழிச் செய்யுளும் இக்கருத்தாதல் காண்க

368 உடைமையுடைய பெரிய செல்வரும் பெருமையு டைய சான்றோரும் கெட்டு, வைப்பாட்டி மக்களும் கீழான சாதி யும் பெருத்து, கடையாயினவர் தலைவராகி, குடைக்காற் போலக் கீழ்மேலாய் நிற்கும் உலகவியற்கை எனக

369 தமக்கினியர் ராகிய உறவின் முறையார் தம்முடைய மனத்திலே இருக்கிற குறையை வந்துசொல்ல, அந்தக் குறையை மாற்ற நினையாத மனமுடைய கொடியவர்கள், மாணிக்கங்களைக் கொழித்து விழுகிற அருவியினை யுடைய மலைநாடனே! உயிர்வாழ் வதிலும் இறத்தல் நன்று எனக.

வரைபாய்தல் - இறத்தல்

370 புதுவெள்ளமும் அழகிய குழையினை யுடையபொது மகளிரது நட்பும் இந்த இரண்டும் விரையாமல் நன்றாய ஆரா புங்காலத்து வேற்றுமையில்லை, புதுவெள்ளம் மழையில்லை யாகில் இல்லையாம், அந்தப் பொதுமகளிர் அன்பு பொருள் வரவு இல்லை யாகில் இல்லையாம்'எனக

மேற் பொதுமகளிர் என்ற அதிகாரம் வருவதனாலும், பொருளையே கொண்டு கொடுப்பாரைக் கொள்ளாத அவர் இயல்பு கூறப்படுதலாலும் 'பூங்குழையார்' என்றதற்குப் 'பரத்தையர்' என்று பொருளுரைக்கப்பட்டது விதுப்பு - விரைவு

(38) 'பொதுமகளிர்' ராவது நல்லார் தீயரென்று எண்ணாமல் பொருள் கொடுப்பாரக்கெல்லாம் பொதுப்பட நுகர்தற்குரிய உடம்பினை உடையராகி, குணத்தின் ல்லாமல் வடிவின்மாத்திரம் மகளிர் வடிவுடையாராது இழிவான இயல்பு கீழ் அதிகாரத்திற் 'புதுப்புனலும் பூங்குழையார் நட்பும்' என்னும் ஈற்றுச் செய்யுட்குறுத்தோடு இவ்வியல் தொடர்புடைத்தாதல் காண்க

371 விளக்கினுடைய ஒளியும் பரத்தையர் உறவுமாகிய இரண்டும் குற்றமற ஆராயுங்காலத்து வேறுபாடில்லை விளக்கொளியும் நெய்யற்றுமாகில் அணையும், பரத்தையர் அன்பும் கைப்பொருளில்லையாகில் அறும் எனக

துளக்கு - தளர்ச்சி, எண்டுக் குற்றத்தினை உணர்த்திற்று

372 அழகிய புடைபரந்த அகன்ற அல்குலையும் ஆராய்ந்த ஆபரணங்களையுமுடைய ஒரு பொதுமகள் யாம் பொருள் மிகக்குடையேமாயிருந்த காலத்து நம்மொடு, "ஐய! நமக்கொரு கேடு எய்தின் யாம் ஆயத்தோடும் யாயோடும் வரைபாய்ந்து உயிர் துறப்போம், இது திண்ணம்" என்றுள் இப்போது எம்மிடம் பொருள் இல்லையால் தன்காலில் வாதரோயினைக் கற்பித்துக் காட்டி வரக்கூட இல்லையே என்று அழுது மலைச்சிகரத்தினுக்கு ஏறுது கீழே நின்றொழிந்தாள், இனி யாம் பொருள் பெற்று வருவேமாயின் வருவாள் போலும் எனக

விலையினையன்றிக் கொடுப்பாரை விரும்புவது பரத்தையர்க்கு இயல் பல்லாதிருக்கவும், காமம் காழ்க்கொண்ட குலமாதரது செயலான 'சாவிற் சாதலையும் நோவினநோதலையும் மேற்கொண்டார் போன்று 'செங்கோடு பாயதும்' என்றது காமுகரைப் பொருள் பறித்தற்குச் செய்யும் உபாயங்கள் பலவற்றின் ஒன்று எனக

காணம் - பொருள் மேவுதல - விருமபி ஏறுதல கால் நோய், இரு பெயரொட்டுப பணபுபபெயா கால் - வாயு, வாயு என்னும நோய இனிக 'கோடு பாய்தும' என்னும் சொல் கழிநதது என்று பொருள தருதலின 'மன' கழிவினகண் வநதது 'பாயதுமே' என்புழி ஏகாரம தேறறபபொருளில வநதது தும விகுதி முன் னிலையையும படாககையையும தனனொடு கூட்டிககொண்ட உளபபாடடுத தன்மை யானும நீயும என யாயும யாயமும எனக கழுழ்நதது, "இககாமுகன பொருளுடையனுகிய காலதது வரவே ணுமெனறு" என்பது பழைய உரை கோடுபாபதல - இறததல

373 அழகிய பரநத சுவாககததிலே தேவாகளாற் பூசிககப படும தேவேநதிரனே யாகிலும ஆகுக, கொடுககிறதறகுத தம கையகதது ஒரு பொருளுமிலலாதவாகளைத தளிாபோலும நிறத தினையுடைய அப பொது மகளிா இருகைகளாலும தொழுது, தமமிடததினின்றும போகச சொலலி விடுவா எனக

மால என்பது இநதிரனுககு ஒரு பெயராதலை, "அமராவதி யோன ஆயிரஙகணணன .காணடாவனன மால வெளளை வாரணன" எனபதனுல் அறிக (பிஙகல வானவா) மிகக வியா மோகததினைத தரததககவன எனபாா 'செஙகணமால' எனறும பெரிய அதிகாரம், பெருமை, கலவி முதலிய எலலாவாற்றுனும சிறநதாமெனனபாா "அஙகண விசுமபின அமரா தொழபபடுய" எனறும கூறினா இததகைய தேவருட் சிறநத புருஷனையாவது அவன பாற் பெறததகக காம போகததையாவது கொள் ளாது, பொருள் ஒன்றனையே கொளளுவா பரததையா எனறு அவா தொழிலை இகழ்நதா ராயிறறு இநதிரன சிறநத சிருஙகார போகததை அளிககவலலவனெனபதனை, "புககவ ளோடுங காமப புது மண மதுவின் தேறல், ஒகக உண்டு" என்ற கல்வியிற் பெரியாா அருளிசசெயலினின்றும, 'போகி'யென்ற அவனுககு ஒரு பெயருணமையினின்றும தெளிக வனபபு, போகம, பிறபபு, தொழில் முதலியன வேண்டாா என்பது எஞ்சி நிற்றலின் மன் ஒழி யிசைககண் வந்தது "தொழுதது, பொரு ளுடையனுயின காலத்து இவன் வரவேணுமென்று" என்பது ஒரு பழைய உரை.

374. நேசமில்லாத நெஞ்சினையும் அழகிய நீலோற்பலம் போன்ற கண்ணினையும் உடைய பொதுமகளிர் தமக்குக் கொடுப்பதற்குப் பொருளில்லாதார் விஷத்திற்கு ஒப்பாவர்; உலகம் காணச் செக்கினை ஊர்ந்துகொண்டிருப்பாராயினும் ஈட்டிய செல்வமுடையார் அப்பரத்தையர்க்குச் சர்க்கரைபோல இனியவராவார் என்க.

ஆணம் - நேயம், 'ஆணமில் பொருளெமக்கு அமர்ந்தனை' என்றார் கலியினும் (1). செக்கார் சாதியில் மிக இழிந்தனர் என்பதும், செக்கு மிருகவதை செய்யுமிடத்தினும் பதின்மடங்கு அசுத்தமுடைய தென்பதும் நூற்றுணிபு. காண என்பதற்கு, செக்கார் இழிகுலத்தினர் இழிதொழிலினர் என்று தாமும் உலகமும் அறிந்திருந்தும் என்றுமாம். அக்காரம் - சர்க்கரை.

375. ஒரு தலையைப் பாம்பிற்குக் காட்டி, தாமரை முதலிய பூக்களினின்றும் ஒழுகும் தேனோடு கலந்து தெளிந்த பொய்கையிலுள்ள மீனுக்கு மற்றொரு தலையைக் காட்டும் விலாங்கு மீன் போல அவரவர் மனம் ஒப்ப அன்பு செய்யும் பரத்தையர் தோளைச் சேர்வார் விலங்கு போன்ற வெள்ளிய அறிவினர் என்க.

விலாங்கு மீன், பாம்பு காணும்பொழுது பாம்பு போலவும், மீன் காணும்பொழுது மீன் போலவும் வடிவு கொள்ளும் இயல்பினது என்ப. தேம் - இனிமை, மணமுமாம். வெள்ளறிவாவது - பேதைமை. பரத்தையர் ஆளுக்குத் தக்கப - ஒழுகும் இயல்புடையரென்பதனை "மெய்வருபோகம் ஒக்க உடனுண்டு விலையுங் கொள்ளும், பையர வல்குலார்தம் உள்ளமும் பளிங்குபோல, மையரி நெடுங்கண் நோக்கம் படுத்துங் கருகி வந்து, கைபுகிற் சிவந்து காட்டும் கந்துகம்" என்ற கல்வியிற் பெரியார் அருளிச் செயலினாலும் தெளிக. காமரசத்தை யறிய மாட்டாமலும், நாணிழந்தும் மெய்யிடைப் போகம் ஒன்றனையே விரும்புவதுபற்றிப் பரத்தையர் தோள் சேருங் காமுகரை விலங்கோடு ஒப்பிட்டார். "பொதுநலத்தார் புன்னலந்தோயார் மதிநலத்தின், மாண்ட அறிவினவர்" என்றார் பொய்யில் புலவரும் என்க.

376. நூலொடு கோத்த மணியும் இணை பிரியாத அன்றிலும் போல நித்தியமும் நம்மோடு கூடியிருந்து ஒருநாளும் நம்மைப்

பிரியமாட்டோம் என்று உரைத்த பொன் தொடியினை யுடையாளும் போர் செய்கின்ற யாட்டுக் கிடாயின் கொம்புபோல அன்பின்றித் திருப்பிவிட்டாள்; நல்ல மனமே! அவள் பால் நயந்து நிற்பாயோ; அன்றி நன்னெறியில் திருப்புவாயோ? எனக்

பொத்துதல் - கோத்தல், 'உள்ளம் பொத்திய உரஞ்சுடு கூர் எரி' என்புழிப்போல (அகம் 279) கல் - மாணிக்கக்கல். அன்றில் துணைபிரியாது, பிரியின் துயிலாதென்பதனை "அன்றில், துணை யொன்று பிரியினும் துஞ்சா காண்" (அகம். 50) என்பதனாலும் அறிக. ஆட்டுக்கிடாய் போர் செய்ய வல்லதென்பதும், அதன் கோடு பின் முறுக்குடையது என்பதும் "தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு சுரிந்த, சுவன்மாய் பித்தைச் செங்கண் மழவர்" என்றும் (அகம் 101), "அருகோடு நீங்காது அணைதலு மின்றித் திரிகோட்ட மாவிரியச் சீறிப—பொருகளம், புக்கு மயங்கப் பொருது புறவாயை, நக்குமாம் நல்ல தகர்" என்றும் பயின்றுள்ளவற்றான் அறிக. இழே கூறியாங்குப் பல்லாற்றானும் சோதித்துப் பொது மகளிரது அன்பின்மையைத் தெளிய அறிந்தானொருவன் அப்பொது மகளிர்பால் விடாதே அன்பு செய்து ஒழுகும் தன் நெஞ்சினைக் கழறித் திருப்புவதாக இப்பாடல் செய்யப்பட்டுளது.

377 பசுவைப்போலே நக்கிச் சுகம் கொடுத்து, காமுகர் கைப் பொருளைப் பறித்துக்கொண்டு, பின்னர் வணடி இழுத்தலுக்கு உதவாது குதித்துத் தள்ளியோடும் காளைபோலும் இழிவாகிய பொதுமகளிருடைய அன்பினைச் சிறப்பாக எமக்கேயுரித்து என்று இன்பம் நுகர்தற்கு ஆசைப்பட்டிருந்தார் வறியராகிப் பின்னர் அப் பொது மகளிரால் துறக்கப்பட்டு வருந்தும்போது உலகத்திலுள்ள பலராலும் நகைக்கப் பெறுவர் என்க.

ஆமா சேமா - இருபெயரொட்டுக்கள் ஆவாகியமா சேவாகிய மா என்க. ஆ - பசு; மா - மிருகம் சே - இடபம். குப்புறுதல் - தள்ளுதல்; குதித்தல் சில்லை - இழிவு; இழிவுடைய பரத்தைக்கு ஆகுபெயர். ஏமாத்தல் - ஆசைப்படுதல்; 'அருந் தேமாந்த நெஞ்சம்' என்புழிப் போல.

378. காமுகரால் பொருள் பெற்று இன்புற்று வந்தபோது அவர்களுக்கு இனியார்போன் றிருந்து, அக்காமுகர் பொருளை

யெல்லாம் தாம் உண்டு அககாமுகரை வறியராக்கியபோது, அக காமுகருககு வேண்டாதவரே யாவதன்றி, யாட்டுக்கிடாய்க்கொமபு போலத திருகலுமுடையவராகும் மான்போன்ற நோக்கினை யுடைய தம் குலதொழிலான களவு மாககததிலேயே நிறகும பொதுப பெண்டிாகளது பெரிய முலையைச் செவ்விய மாாககத திலே ஒழுகுவேம என்பவர் சேராா என்க

ஏமாததல் - இன்புறுதல ; 'காமா நெஞசம ஏமாந்துவபப' என்றூா புறத்தினும தடழு - பெருமை, (தொல் சொல் 320 )

379 ஒளிபொருந்திய முகததினையுடைய பொது மகளிா காமுகாகுப பின்னா துன்பஞ் செயயபபோகிற தம கருததினை உள்ளே அடககிககொணடு, இபபோது அககாமுகா தெளியத தக்கதாகச சொனன சொறகேட்டு நமபி, 'இப பொதுமகளிா எமககு உறற உறவினா' எனறு திருபதியடைகிற காமுகாகளும திருபதியடையட்டும, அபபொது மகளிர்களோ யாாககும் உண மையான உறவினா அலலா , அவா தம உடம்பினைத தம இலா பததிற்கே கொண்டுளளாாகள் எனக

ஒண்ணுதலாாக இருபபது, ஊறு செய்கிற நெஞசததினை மறைததற்கு. உடமபினுா எனபது, குறிபபு வினைமுறறு

380 ஒளிமிகக முகததினையுடைய பொதுமகளிா தம்முளளம் ஒருவன்பாலிருகக, உடமபினைப பிறனொருவன்பால இருத்தி, வஞ்சனை யாற்செய்கிற அனபெல்லாம தெளிய அறிந திருநதும் பாவஞ்செறிநத பிறபபினை யுடையாரே அககபட அன்பினை அறியாராவா என்க

உளளம ஒருவன உழையதாய என்பதறகு இயைய 'உடமபு வேறொருவன் உழையதாய்' என்று வருவிததுப பொருளுரைககப பட்டது. பாவஞ்செறிநத உடமபு - பாவபபிறபபு. உடமபு உடம பெடுத்தலுக காயிற்று. விலஙகினை வதைசெயது ஊன்விறகும இடத்தினும பதின்மடஙகு அசுத்தியானது செக்காட்டும இடம; அதனினும பதின மடங்கு அசுத்தமானது கள் விறகுமிடம ; அதனினும பதினமடஙகு அசுததமானது விலைமாதா உடமபு என்பது அறநூற்றுணிபு. இவ்வுடம்பினுா பொய்ம்முயக்கத்தினை உடையாரைத் திருநீககப்பட்டாா என்றூா பொய்யில் புலவரும.

இவ்வதிகாரமும் மேல் இரண்டு அதிகாரங்களும் காமத்துப் பாலுள் அடங்குவன என்றும், அதனுள் முதலாவது இன்பத் துன்பவியல் என்றும், இவ்வியலுள் இப்பொதுமகளிர் என்ற அதிகாரம் அடங்கு மெனறும் கூறப இவ்வதிகாரத்திற் கூறியபொது மகளிர், அகப்பொருளிலக்கணங்களுட் கூறப்படும் ஒப்பாரும் மிக்காருமிலாத தலைமகனும் கொண்டு காமந் துய்க்கப்படும் காமக்கிழத்தி, சேரிப்பரத்தை முதலாயினார் போலாது, செக் கூரந்து கொண்டார் முதலான எல்லாரானும் பொதுவாகத் துய்க்கப்படும் இழிந்த குணத்தினோராதலின், எல்லாப் பொருட்கும் கேட்டினைத் தருதலோடு நரகிற்கும் ஏதுவாகிய இவரியல்பினைக்கூறும் அதிகாரம் திருக்குறளிற்போல பொருட்பாலிலேயே கோக்கத்தக்கதெனக். பரிப்பெருமாளும் வரைவின் மகளிர் என்ற அதிகாரத்தைக் 'கேட்டிற்குக் காரணமாதலின், துன்பவியல்' என்று கொண்டார் பரத்தையரோடு தலைமகனுக்குள்ள கூட்டத்தினை மேலையோர் பாவமும் பழியுமெனக் கூறுது, தலைமகனுக்கு அப்பரத்தையர் தூவரால் வருக்கப்பட்ட உரிமைகள் என்று அமைத்துக்கொண்டமையும் நோக்குக. இஃது இறையனார்களவியல் 40 ஆம்சூத்திர உரைக்கண் தெற்றென விளங்கும்.

(39) 'கற்புடை மகளி'ராவது, கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்று எனவும், அவனை இன்னவாறே வழிபடுக எனவும் இரு முதுகுரவர் (தாயும் தகப்பனும்) கற்பித்தலானும், வேட்பித்த ஆசிரியனகணணும், கற்பித்த ஆசிரியனகணணும், சான்றோர்கண்ணும், தேவர்கண்ணும் ஒழுகும் ஒழுக்கத்தினைக் கணவன் கற்பித்தலானும் தெளிய அறிந்து, இல்லறத்தினைத் தான் வாழுமூரார் மெச்சும்படி நடாத்தும் நற்குணமுடைய மகளிரது தன்மையாம் கீழ் அதிகாரத்திற் செவ்விய நெறியில் ஒழுகுவார்க்குத் துணை ஆகாத தீயமகளிர் இயல்பு கூறினார், இவ்வதிகாரத்து அச் செவ்விய நெறிச் சேறுவார்க்குத் துணை ஆகின்ற நல்ல மகளிர் இயல்பு கூறுகின்றாராதலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது

381. அயோனிசத்துவமும், வனப்பும் முதலியன உடைமையால் தேவேந்திரன் மனைவிபோலும் பெருங் கீர்த்தியுடைய மனைவியே ஆனாலும், பெறுதற்கரிய தன் கற்பின் மகிமையினாலே தன்னை விரும்பி அடையும் ஆசையால் தன்னை வழிபடும் காமுகர் இல்லையாகத் தன்னைக்காக்கும், இயற்கைமணம் கமழும் நெற்றியினையுடையாளே, இல்லறமாகிய நன்மைக்குத் துணையாவள் என்க.

இதனால் பிறப்பு வனப்பு முதலியவற்றால் ஒருத்தி உத்தம மனைவியாகாள் என்றும், பிறனால் காமிக்கப்படாதவாறு அவன் நெஞ்சினைச் சுடுகிற அருங்கற்புடையாளே இல்லறத்திற்குத் தக்காள் என்றும் கூறினாராயிற்று. மருதி என்ற பார்ப்பனி காவிரி நீராடி வருகின்றாளைக் கந்தன் மகன் காந்தமன் காமுற்று அழைத்தபோது, அவள் அஞ்சிக் கலங்கி, "மண்திணி ஞாலத்து மழைவளந் தரூஉம், பெண்டி ராயிற் பிறர்நெஞ்சு புகாஅர், புக்கேன் பிறனுளம் புரிநூன் மார்பன், முத்தீப்பேணும் முறையெனக்கில்லை" என்று அரற்றினமைகொண்டு, பிறனால் காமிக்கப்படும் மனைவி இல்லறத்திற்குத் துணையாகாள் என்பதனை அறிக.

ஸர்வாங்க ஸௌந்தரியமும் பூஷிதையுமாய மணமண்டபம் வந்தணைந்த சீதாபிராட்டியாரின் வனப்பினை வருணிக்கப் புகுந்த கலவியிற் பெரியார், "நைவளம் நவிற்றுமொழி நண்ணவரலோடும், வையந்தா கொற்றவனு மாதவரு மல்லார், கைகள் தலை பக்கன" என அருளிச்செய்தமை கொண்டு, பிறர் நெஞ்சு சுடும் பெற்றியையுடைய கற்பின் இலக்கணத்தினை அறிக. ஐராணிக்குப் பெரும்பெயராவது, அமுதெழக் கடைந்த காலத்து, அதனோடு உடன் பிறந்தமையும், அநேகம் அச்சரப் பெண்களுக்கு நாயகமாய, அன்ன நடையினள் என்று பொருள்படும் 'சசி' என்ற நாமமுடைமையும் பிறவுமாம். இவ்வாறு சிறந்த அவளும் பிறர் நெஞ்சு சுடும் பெற்றியளன்றி, நகுஷன் நெஞ்சிற் புக்க எண்மை தோன்ற 'ஐராணியன்ன பெரும்பெயர்ப் பெண்டிரெனினும்' என்றார். உம்மை உயர்வு சிறப்பு. பின்னிற்பார் இன்மையாதற்கு அரும் பெற்ற கற்புக் காரணமாயிற்று. பின்னிற்றலாவது - வழிபடுதல். நன்மைக்குத் துணை என்று நான்காவது விரிக்க. நன்மையாவது ஈண்டு இல்லறம். பின்னிற்பாரின்மையையுடைய நறுநுதலாள்

எனறும், (கணவனைப்) பேணும நறுநுதலாள எனறும கூட்டலு மாம பேணுதல் கணவனைப புறந்தரும் விருப்பததை உடைத தாதல. இனமையே எனபுழி ஏகாரமபிரிநிலே, கற்பின் - கற்பால் 'பினனிற்பாரினமையே பேணும்' என்பதறகு, "பின்னிலலாத படிககுத் தன் மேனியை அழுக்கடையப பணணிக கொண் டிருககிற" என்பது ஒரு பழைய உரை

இனி, 'காமஞசானற கடைககோட்காலே' என்ற சூத்திரத் திறகு இபபாடலே உதாரணமாகக கொண்டு, "இதனுள் அருநத தியைப்போலும, தமககுபபெருமபொருளகளை நசசுதலாலே இரப பாரது வறுமையையே விருமபிப பாதுகாததது, அவாககு வேண்டு வன கொடுககும மகளிா நாம செலகின்ற வானபபிரதத காருகத திற்குத துணை ஆவா எனத் தலைவன கூறவே, தலைவியும பொருள் களிற பறறறறுளாய யாமும துறவறததினமேற் செலவாமெனக கூறியவாறு காணக" எனறாா நச (தொல பொருள் சூ 192)

382 "ஒருகுடம நீராற சோறமைததது உணணுமாறு மிடிப் பட்ட காலததும மடஙகலநத மொழியும, கணவனமேற காதலும மனைககு மாடசிமைபும உடையாள கடல்நீரை எலலாம வறற உணணும கேளிா வரினும முனனம செலவமுளள காலததிற போல மகிழசசி யுடன இலலறம நிகழ்ததுதலைத தனஒழுகக நெறியாகக கொளளும" எனக

மிடிபபட்ட காலததும இல்லறம நிகழ்ததுதலை நெறி யாகக கொளளும எனறமையால, முன செலவமுளள காலதது இலலறம நிகழ்ததினமை உணரபபடுமெ, உமமை இறநதது தழீஇயது கடன நீரமையாவது, இலலறக கடமைகளை நிகழ்தத லும தன்மை அககடனகளாவன, "அறவோாக களிததலும அநதண ரோமபலும, துறவோாக கெதிாதலும, தொலலோா சிறபபின் விருநதெதிா கோடலும்" ஆம. கேளிா உணடற்கே ஒரு கடல் நீா முற்றும வேணடும எனவே, அவா பனமை சிநதிககபபடும மடமொழி என்றமையால், கேளிாககு இன்சொற் கூறனமுதலியன கொள்ளபபடும் கையாறு - கைககு ஆறு என னனகாவது விரிகக, ஒழுககநெறி என்க 'மாதா, காதல' (தொல் சொல், 328). "நன்னெறிப படரும் தொன்னலப பொருளினும்

என்னும் பகுதிக்கு இதனை உதாரணமாகக் காட்டித் தன் மனைவி இவ்வாறு செய்ய வல்லவள் எனத் தலைவன் வியந்து கூறிய தென்பார் நச். (தொல் பொருள் 146)

383 தன் இல்லமானது நான்கு திக்கிலும் வழியாய், மிகச் சிறிதாய், மேலாகப் பெய்கிற மழை கூரைவழியாக எப்புறத்திலும் கொட்டினாலும் உத்தமமான இல்லற ஒழுக்கத்தினை ஒழுகுவதில் வல்லவளாயத் தான் வாழுமூரார் தன்னைப் புகழும்படியான மாட்சிமைப்பட்ட கற்பினையுடைய மனைவி அமைந்து நின்றதே இல்லறமாவது எனக.

நாலாறு எனப்புழி, ஆறு - திசையினை உணர்த்திற்று. உறை - மழைத்துளி. மேலாய - மேலாய ஒழுக்கங்கள். இல் ஈண்டு இல்லறத்தினை உணர்த்தினது, ஆகுபெயர். இப்பாட்டைப் 'பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇக் குற்றம் சான்ற பொருள் எடுத்துரைப்பினும்' என்னும் பகுதிக்கு உதாரணமாகக் காட்டி, 'இதனுள் மனைவி அமைந்து நின்ற இந்நிலையே இல்லறமாவ தெனவே, யாம் முன்னர் ஒழுகிய ஒழுக்கமும் இத்துணை நன்மை யாயிற்று என்றாளாயிற்று. இது குறிப்பெச்சம்'' என்பார் நச். (தொல் பொருள் 146)

384 கணவனுக்கு இனியவளும் காதலனது விருப்பின் வகை தன்னை அலங்கரித்துக் கொள்ளுகின்றவளும், தன் கற்பினால் தன்னையாரும் அஞ்சும் மதிப்பினை யுடையவளும், ஒப்புரவு செய்யும் இயற்கைக் குணமுடையவளும், கணவனைக் கண்ட விடத்துத் தலைநாளிற் போலக் கூசுபவளும், இடம் அறிந்து புலந்து, இன்பம் பயக்குமாறு புலவி நீங்குபவளும், மடப்பத்தினை யுடையமொழியினையுடையவளும், கணவனுடைய காதலையுடையவளுமே மனையறத்திற்குப் பொருந்திய மனைவி யாவள் எனக.

'காதலன் காதல் வகைபுனைவாள்' எனபதற்குக் 'கணவன் கண்டு காதலிக்கும் வகை புனைவாள்' என்பது ஒரு பழைய உரை. உட்குடைமை, இவளது கற்புச்சிறப்புப் பிறாக்கு அச்சஞ்செய்தல். அஃது 'ஆண்மகன் கையி லயிலவாள் அனைத்து' என்பார் முன்னும் ஊராண் இயல்பாவது, முன் 'குடநீரட்டுண்ணும்' என்னும் பாட லிற்கூறிய இயல்புடைமை. தலைமகனை வணக்கஞ் செய்தலும், தலை

மகற்கு எதிர்மொழியாது, வினையவழிப் பிறராற் கூற்று நிகழ்த்தி யும், எதிர்ப்பட்டுழி எழுந்தொடுங்கியும் ஒழுகுதல் தலைமகளது இயல்பாதலால், 'உட்கி' என்றார் இடனறிந்து ஊடலாவது, தலை மகன் தவறிலனாயவிடத்து ஊடுதல, அவன் அவ்வூடலை, "ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல் வெயர்ப்பக், கூடலிற் றோன்றிய உப்பு" என்று விரும்புவனாதலின் 'தனிநனி கன்றிடிற் காமங் கெடூஉம (பரிபா 6) என்பவாதலின் 'இனிதின் உணரும்' என்றார் மடமொழியாவது இராமபிரானுடன் காடு நோக்கிப் புறப்பட்ட சீதாபிராட்டியார், 'ஆண்ட நகர் ஆரையொடு வாயிலக லாமுன், யாண்டையது கானென இசைத்தது' போன்றது பெண், மனைவி இச்சொல் இப்பொருளில் வருவதனைக் கீழ் 87 ஆம் பாட்டில் 'வம்பலன் பெண் மரீஇ' என்புழிக் காட்டினும். ஊர் நாணியல்பினள் என்னும் பாடத்திற்கு ஊரார் தன் நற்குண நற் செய்கையைக் கண்டு நாணும்படியான நலவியல்பினள் எனக

"கழிவினும் வரவினும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத் துக்கு இப்பாட்டை உதாரணமாகக் காட்டி, "கட்கினியாள், இது காமம், வகை புனைவாள், இது கற்பு, உட்குடையாள், இஃது ஒழுக்கம்; ஊராணமை, இது சுற்றம் ஓம்பல் ஊடி உணர்தல், இஃ தலைவை கடிதல்" என்றார் நச் (தொல் பொருள் சூ 153)

385 எம் கணவர் எந்நாளும் எம்முடைய தோளின் மேல் முயங்கிச் சிறப்புற்றாலும், இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தநாளிற் கண்டேம்போல அவரைக் காணும் எந்நாளும் நாணுவேம், எமமி யல்பு இவ்வாறாக, பொருண்மேலுள்ள விருப்பத்தால பலர் மார்பி னையும் அணைத்து ஒழுகும் பரத்தையர் நம கணவரோடு நாணாது உறவினராகின்றனரே! இஃது என்ன அதிசயங்கொல் எனக

இனி, "பொருள் நசையால் பன்மார்பு சேர்ந்தொழுகும் நாண மற்ற பரத்தையர் நம் கணவர்க்கு நாண் கற்புமுதலிய குணங்கள் அமைந்த நம்மினும் என்ன அதிகம் உறவினரோ' ' என்னுமாம் இப் பாடலை, பரத்தையரோடுகூடிப் பிரிந்துவந்த தலைமகன் தலைமக ளோடு தன்னைக் கூட்டுவிக்குமாறு தோழியை வேண்ட, தோழி மறுத்துச் செல்லியதாகக் கொள்க கெழுவென்னும் உரிச்சொல் ஈறு திரிந்து நின்று பொருத்தத்தினை உணர்த்திற்று

**386.** நாணமுதலிய குணங்கள் நான்கினையும் பெற்ற தலைவி இல்லறப பகுதியை நிகழ்த்துமாறு தன்மனத்திற் பலவகையாகக் காணுமியல்பின் நலமானது, மனததிலே உணர்வினை உடையவன் ஓதிய நூல விரியுமாறுபோல விரியாநினறது; கொடை நலமானது வள்ளனமை பூணடான் அறததான் ஈட்டிய பொருளபோலச் செவவியுறுகினறது, கறபுநலம பிறர்கு அச்சஞ் செயதலின் அறிவுடைய ஆணமகன கையிலுள்ள கூரிய வாளபோன்றுளது என்க

தெளளிய ஆணமகன என்றது, காபபன காததுக கடிவன கடியும விவேகமுடையானை இதனால, தலைமகள தனமனததால இலலறம நிகழ்ததுமாறறைப பலவகையாகக காணலும, பிறாககுத தான் கொடுததலும, கறபுசசிறததலும கூறப்பட்டன "அஞ்ச வநத உரிமைககணணும்" என்னும பகுதிககு இபபாடலை உதாரணமாகக்காட்டி, "இது தலைவன தலைமகள உரிமைகளை வியநது கூறியவாறு" என்பா நசசினாககினியா (தொல, பொருள 146) கடிமனை புககசெவிலி அவவாறு வியநது நறறாய்ககுக கூறியதாகக கொளளலுமாம

**387** எனனோடு வனபபு கறபு நாண்முதலிய எலலாவற்றுலும ஒருஙகு ஒவவாது முகம ஒனறு மாததிரம அழகிய பரத்தையரை முயஙகிய மலைபோலும மாாபினையுடைய தலைமகன் நீரா டாது எனனையும முயஙகவருா அஃது ஊரன கருஙகொளளையும செஙகொளளையும ஒபபககருதித தூணிபபதககு எனறு விலைககுக கொண்டாறகும எனக

வரைமாாபின எனனும பாடததிற்கு நனனுதலாரைத் தோயநத மாாபினோடு எனனையும தோயவரும என்று பொருள கூறுக உயாநத சாதியான செஙகொளளை இழிநத சாதியான கருஙகொளளோடு ஊரன ஒபபக கருதினமைபோலக குலமகளோடு பொதுமகளை ஒபபக கருதினன எனறு பிறபபுவயப போலியாகக கொள்க "தவலருஞ சிறபபினத தனமை நாடின், வினையினும பயததினும உறுபபினும உருவினும, பிறபபினும வரூஉம் திறததியலெனப" எனபது தொலகாபபியம குலததால் உயர்ந்த தலைமகனே! இழிநதாரான பரததைமகளிரைத தோய்நது எச்சிற்பட்டாய், மேறகுலததுப பிறநத எமமைத தீண்டல; நீராடிவா

எனத் தலைமகற்கு வாயின் மறுத்ததாகக் கொள்க. பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனோடு தலைமகள் புலந்து சொல்லியது. இப்பாட்டு தூணி - நான்கு மரக்கால், பதக்கு இரண்டுமரக்கால்; தூணிப்பதக்கு ஆறுமரக்கால். சைனர்க்குக் கொள்ளின் கஞ்சி ஆகாரமாதலால், அம்மத்ததினரான இவ்வாசிரியர் கொள்ளை எடுத்தோதினரென ஊகித்தலுமாம். அக்தவர்க்கு ஆகாரமென்பதனை மிருச்சகடிகை முதலிய வடமொழி நூல்களிலும் காண்க. 'நீராடாது' என்பதற்கு, தன் உயர்ந்த குலத்தின் தன்மையிற் பழகாது எனவுமாம். நீர் - தன்மை. 'நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநீர் போல' என்புழிப்போல (அகம் 62). ஆடுதல் - பயிலுதல்.

388 ஊரனைத் தலைவனுக்குத் துடியின் இடப்புறத்துக் கண்ணை ஒப்போமாதலால், பாணனே! நீ தலைவனைப் பற்றிக் கொடியவற்றை என்பாற் கூறுகின்றாய், இனி அவ்வாறு கூறாதே கொள், உனக்குத் தலைவன்மேற் கொடுமைகூற விருப்புள்ளதாயின், மெல்ல அடியிட்டு விலகி, துடியின் வலப்புறக் கண்ணை ஒத்தாரான பரத்தையர் மாட்டுச் சென்று சொல்லு எனக.

இப்பாட்டு, தலைமகன் வாயில்பெற்றுப் புகுந்தது அறியாது வந்த பாணனுக்குத் தலைமகள் நகையாடிச் சொல்லியது. அஃதாவது வாயில்கள் பன்னிருவருள் ஒருவனான பாணன் தலைவியை ஊடல் தணிவித்துத் தலைமகனை அவளொடு கூட்ட எண்ணித் தலைமகன் கொடுமையைக் கூற, அவன் கருத்தினை அறிந்த தலைவி, தான் முன்னரே ஊடல் நீங்கித் தலைவனைக் கூடினமை தோன்றப் பாணனோடு நகையாடி, 'நீ என்பால் தலைமகன் கொடுமையைக் கூறவேண்டா, அதை நான் கேட்டுப் பொறுத்திரேன், மற்றும் அவன் இதுபோழ்து என்மாட்டுள்ளன், நீ மெல்லச் சென்று பரத்தைக்குத் தலைமகன் கொடுமைகளைக் கூறுவாயாக, அவள் கேட்டுச் சகித்திருப்பள்' என்றாள். தலைமகன் கொடுமையைப் பிறர்கூறக்கேட்டுத் தலைமகள் சகியாது இயற்பட மொழிதலியல்பாதலின் இவ்வாறு கூறினாள். துடியின் இடக்கண் அடித்துப் பயன்கொள்ளப் பெறாததுபோல யாமும் தலைவனால் முவிப்பயன் கொள்ளப்படாதேம் என்றும், அத்துடியின் வலக்கண் அடித்துப் பயன் கொள்ளப் பெறுதல்போலப் பரத்தை தலைவனால் தழுவிப்

பயன்கொள்ளப் பெறுகிறேனென்றும் கூறினாளாம். கண் - துடி முழவு முதலியவற்றின் அடிக்கும் இடம். 'அடிப்பையவிட்டு ஒதுங்கிச்சென்று' என்றருள, நீ இவனை வந்ததனைப் பரத்தை அறியின் வெகுளுவாள் என்னும் கருத்தால் 'நிலம் பெயராத் துறைதல் வரைநிலை யுரைத்தல், கூத்தாக்கும் பாணர்க்கும் யாத்த தென்ப' என்பதனுல் பாணன் கூற்று நிகழ்ந்தது.

389 நீர் ஒழுகிற்கு இடையூறாயிருந்த கோரையைப் பறித்தெறிந்ததனாலே நீர் தடையின்றி ஒழுகும் தண்ணிய வயல்கள் சூழ்ந்த ஊரனை தலைவன்மீது ஒரு பெண் ஈப் பறந்து உடனாரவும் முன் படர்ந்து ஊடினவளும் யானே, இப்போது நீப்பறக்குமாறு தாக்கிப் பரத்தையார் முலைகள் மோதிய தலைமகனது குளிர்ந்த சந்தன மணிந்த மார்பினை நோக்கியும் பிரானனை விடாமல் இருந்தவளும் யானே எனக்.

இப்பாட்டு, பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனோடு நீபுலவாமைக்குக் காரணம் யாதென்று வினவிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது என்று கொள்க. சாய - கோரை அதனைப் பறிக்க நீர்திகழும் ஊரன் எனவே தலைமகன் என்மேல் அன்புசெய்தற்குத் தடையாயிருந்த என் புலவியை நீக்க, அவன் பெரிதும் தலையளி செய்தானென்றவாறு. யான் புலந்தே நிற்பின், அவன் என்னை அகன்று பரத்தையர் மாட்டுச் செல்லவுங் கூடுமாதலால் என் புலவி கழிந்தது என்றமையால், மன கழிவினக்கண் வந்தது ஈப் பறக்கவும் என்றபால் சிறப்புமமை விகாரத்தாற் றொக்கது. இது புலவி பொருளாகத் தோன்றும் அச்சமாம், 'பிணங்கல் சாலா அச்சம்' (தொல் பொருள் 256) என்றமையான் இஃது அமைந்தது. உம்மைகளுள் முன்னையது எதிரது தழீஇயது, பின்னையது இறந்தது தழீஇயது. ஏகாரம் தேற்றம்.

390 அரும்பு மலரும் மாலையினனாகிய தலைவன் எம்மை அருளுமென்று பெரிய பொய் வார்த்தையை உரையாதேகொள், பாணனே! ஏனெனில் ஊரனுக்கு யாம் கரும்பின் நுனியிலுள்ள கணுக்களைப்போல ருசியற்றிருக்கிறோம், அக் கரும்பின் நடுப்பாகத்திலுள்ள கணுக்கள் போலத் தலைமகனுக்கு ருசி மிக்க அப்பரத்தையாகுச் சென்று அதனை உரைப்பாயாக எனக்.

இப்பாட்டு வாயில் வேண்டிச்சென்ற பாணனுக்குத் தலைமகள் வாயில் மறுத்தது. அஃதாவது பாணன் தலைமகள்மாட்டு வந்து "தலைவி! உன்னோடு கூட்டம் வேண்டித் தலைமகன் நின் தலைவாயிலின்கண் நின்றுகொண்டு, நீ அருள்செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கின்றான், உன் குறிப்பென்னை?" என்றான்; கேட்ட தலைமகள் பாணனோடு வெகுண்டு மேற்கூறியவாறு கூறினாள் என்பது. மலராத பருவத்தினையுடைய அரும்பினை (வண்டு) அவிழ்க்குந் தாரினான் எனவே புலவி உணர்த்தவும் உணருஞ் செவ்வியில்லாத என்னைப் பயனின்றியே புலவி உணர்த்துவான் என்றாளாம். அன்றியும் அகமலர்ந்து எதிரேற்றுக் கொள்ளாத காமஞ்சாலா இளமையோளை நுகர்ந்தான் என்று புலந்தாளுமாம். அரும்பு, போதாய், அதன் பின்னரே மலருமென்ப (குறள் 1227)



மூன்றாவது, 'காமத்துப்பா'லாவது காமத்தைப்பற்றிக் கூறும் பகுதியாம். காமமாவது ஈண்டு தாமத்திறக்கும் ஆத்தத்திறக்கும் மாறுகோளில்லாத இன்பமாம். அஃது 'அகம்' என்று தமிழ்மொழியாளரால் கூறப்படும். அவர் கூறும் அகமாவது, "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்து உணர்வே நுகர்ந்து, இன்பம் உறுவதோர் பொருளாம்," "அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு 'அகம்' என்றது ஓர் ஆகுபெயர்" என்பது. முதலில் அறப்பகுதியினைக் கூறியமுறையானே பின்னர்ப் பொருட்பகுதியினைக் கூறினார், ஈண்டு முறையானே இன்பப் பகுதியினைக் கூறுகின்றார். "முன்னாலே இன்பப்பகுதியினைச்சொல்லி, பின்பு உலக முறைமையான் பொருட்பகுதியினைச் சொல்லி, அதன்பின்பு அறப்பகுதியினைச் சொல்லி, வீடுபேற்றிலே முற்றுவிக்க வேண்டாவோ எனில் அவ்வாறன்று, இளமைப் பருவத்திலே அறத்தினை உணர்த்தும் நூல்களைக் கற்பித்து, பின்பு மணஞ்செய்வித்து, அந்த இல்லற முறைக்கேற்க ஒழுகும்படி பண்ணி, பின்னர் உலகத்தினை நல்வழியில் நடாத்துதற்கு மநுமுதலிய நூல்களிற் கூறியபடி ஒழுகு

விததது, பின்னர் இநதப பிரபஞ்சம் மேலுமுண்டாய வருதற் பொருட்டு இன்பப்பகுதியினைச் சொன்னாரென்பது அற்றாயின, வீடுபேறு சொலல வேண்டாவோ எனின, முன்பு சொனன முறைகளின்வழி வழுவாது ஒழுகி இனபமனுபவித்தது, அறுபது வயதின்மேல முழுவதும் துறநது, உணமைப்பொருளை அறிநது பற்றினை விடவே, வீடுபெறுமாதலால, அதற்கென ஒரு பகுதி உரைக்க வேணடா எனபதாம்''

(40) 'காமநுதலிய'லாவது, காமத்தினைக்குறித்ததுக் கூறும் இய லாம் கீழ்க் கற்புடை மகளிர் அதிகாரத்துக் கூறப்பட்ட மாணபுடைய மனைவியோடு காமத்தினைக் கருதி அறத் திறகும பொருளுக்கும விரோதமினறி ஒழுகுதலாம அவவாறு ஒழுக, இம்மை மறுமைப் பயனகளுளவாம

391 புணராவிடின பசலைபாயும், பிணங்கி மெலியாவிடில காமம சுவையினை யுடையதாகாது, ஆகலால, தெளிநத கடல ஒருபடியாக நிலலாமல திரையால அலைக்கினற நீணட கழியை யுடைய குளிரநத கடறகரையை யுடையவனே! புணாநது பினனும புலப்பது காமனு சிறததறகு ஒரு வழியாம எனக

இப்பாட்டு, தலைமகளை ஊடல நீக்கிக் கூடிய தலைமகன கழி உவமையனுயத தனனுளளே சொலலியது எனக இது, ஊடுதலின கணமேண உவமை பிறததலின ஊடலுவமை எனக பசலையாவது, மகளிர் கணவனைப பிரிநதகாலத்து அவாகககு முன புளள நெறறியின ஒளிகெட்டுக் கணணுடியில வாயினலை ஊதிய பொழுது ஆவிபடாநத ஒளி மழுஙகுவதுபோல வேறுபடடுக் காட்டுந தனமை உபபு - இனிமை காமத்திற்குப 'புணாதலின ஊடல இனிது' ஆகலான, 'புலலாப புலப்பது ஓா ஆறு' எனறாா. ஒருபடியாக நில்லாது அலைகள மாறிமாறி அலைத்தலால கழிசிறப புறுதலபோல, ஒருபடியாக ஊடலாதல கூடலாதல இனறி மாறி மாறிச் செயதல காமத்திறகுச் சிறப்பு ஆகினறது எனபது உளளு றைப்பொருள. மற்று, வினைமாறறு, முயஙகும வினையை மாற்று தலின் ''தலைமகறகு வாயில்நோநத தோழி தலைமகளபுலவி நீஙகச் சொலலியது'' எனபது ஒரு பழைய உரை உள்ளுறை இரண் டிற்கும பொருந்துமாறு காணக

392 தம்மால் விரும்பப்பட்ட காதலரது தார்சூழ்ந்த அழகு பெற்ற மார்பினை முலைகள் விம்மப் புணருமளவு மில்லாத மகளிர்க்கு மேகம் இம்மென்று பெய்ய முழக்குகின்ற திசைகள் எல்லாம் சாப்பறை கொட்டினாற்போலும் தன்மைத்து எனக

இது, "பருவங்கண்டு ஆற்றாளாகிய தலைவி தோழிக்குச்சொல் லியது" அஃதாவது, வினைமேலாவது பொருள் மேலாவது சென்ற தலைமகன்,'கார்காலத்து வருவேன்' என்று வற்புறுத்திப் பிரிந்தான், அக்காலம் வந்தும் அவன் வாராமையால், தலைமகள் பிரிவு ஆற்றாது தோழிக்குச் சொல்லியது என்க 'வேந்துறு தொழிலே யாண்டி னகமே' எனபவாதலால், வினைமேற்பிரிவு ஆறுமாதம் இடை யிட்டது வினைமேற் சேறலாவது போர்க்குப் புறப்பட்டுப் போவது பொருள்மேற் சேறலாவது, பொருள் ஈட்டி வரப் போவது இப்பிரிவும் ஆறு திங்கள் இடையிட்டது 'வினைப் பிரிவு மவ்வயி னிலையும்' எனபது தொல்காப்பியம் தார் - மாலை அது மார்பில் அணிவது 'இம்' ஒலிக்குறிப்பு

393 கம்மத் தொழில் செய்கின்ற கம்மாளர்கள் தம் தொழிற் கருவியை ஒடுக்கி வேலையை நிறுத்தும் மயக்கஞ் செய்யும் மாலைப் பொழுதிலே நல்ல மலர்களைப் பொறுக்கி மாலை தொடுக்கின்ற தலைவி தான் தொடுத்த மாலையைக் கையினின்றும் நழுவவிட்டு, நாயகனாகிய துணையிலலாதவர்க்கு இம்மாலை எனனபயன் தருவது என்று சொல்லி அழுதாள் எனக

இது, தலைமகள் செலவு உடம்படாமையைத் தலைமகற்குத் தோழி சொல்லியது. அஃதாவது, தலைமகன வினைமேலாதல் பொருள்மேலாதல் செல்லவேண்டித் தோழிமூலமாகத் தன் நினை வினைத் தலைவிக்கு உணர்த்த, தலைவி அதற்கு உடன்படாது சொல் லியதனைத் தோழி தலைமகனிடம் வந்துகூறியதாம கம்மம் - கம்மாளர் செய்யும் தொழில் கம்மஞ் செய் மாக்களும் கருவி ஒடுக் கினர் என்றமையால் தலைவனும் வினைமேற் சேறல் ஒழிவானாக என்பது உள்ளுறைப் பொருள் என்று - 'என்றுசொல்லி' எனப் பொருள் படுதலால் சொல்லெச்சம்.

394. அஸ்தமயமாகும் சூரியனை நோக்கி, வண்டு போன்ற, இரேகைகளையுடைய தன்கண்ணிலே கொண்ட நீரை மெல்லிய

விரலாலே முறையேவழித்தது தெறித்தது, சயனத்தின்மேலே தன் தோளை வைத்துக்கிடந்து விம்மி, கூறிய பருவத்து நாம் வாராது தாழ்த்துக்குற்றஞ்செய்த நாளகளாகச்சுவரினகண இழைத்தவற்றை மெல்லிய விரலில வைத்து எண்ணுமோ தலைவி! அந்தோ எனக.

இது, வினைமுற்றி மீணட தலைமகன் தோபபாகன் கேட்பச சொல்லியது அஃதாவது போரில் வெற்றிபெற்று மீணட தலைமகன் தோபபாகன் கேட்குமபடி சொலலியதாம செல்சுடா - வீழ்கின்ற சூரியன்; சிதா - வணடு சிதாககண, அரிககண எனக. ஊழ் - முறை நாள - நாளை உணாததும சுவரிலுளள கோட்டுககு ஆகுபெயா 'நாளொற்றித் தேயநதவிரல' எனபுழிபபோல. வினை முடிதது மீளுநதலைமகன மாலைககாலததே தனபதி வநதணைவதாகச செயயுள் செய்வது மரபாதலின தலைவி மாலைககாலததில அவன் வரவை எதிர்நோககியிருநதாளெனக

395 பாஙகனே! கேட்பாயாக, சிறு சிரலானது என மனததைக கவாநதுகொணட காதலி கணணைத தன உணவாகிய கயல் என்னும விபரீத உணாசசியால் அவள் பினனே செனறது, பின சென்றும, முயற்சியோடு குததஎழுநதும ஒளளிய வளைதத புருவமானவை விலவளைவாமெனறு அறிநது அஞ்சி, குததமாட்டாதாயிற்று எனக.

இது, தலைமகன தானுற்றதனைப பாஙகற்குக சொல்லியது. அஃதாவது தலைமகன தான கணட தலைவியின இயலபு இனனவாறுகும என்று தன் உயிாபபாஙகனுககுச சொலலியது எனக. பாஙகனுவான், பேரறிவும, பெருங கலவியுமுடைய பாாபபான; அவன் தலைவனுககு இனறியமையாதவன அவன அறியாதது தலைமக னிடம்ஒனறுமிலலை யெனபது மரபு சிரல புருவததினை விலலென்று அஞ்சி எறியாது விலகியதுபோல, தோழியையும் ஆயததினையுஙகணடு அஞ்சாநின்றேன் யான, நீ என அச்சததினை ஒழித்துத்தலைமகளுடன எனனைக கூட்டககடவாய் எனறுபாங்கற் கூட்டம் வேண்டினனெனக கொளக சிரல் - சிச்சிலிப்புள்; அது மீனுண்ணும பறவைகளுள் ஒனறு அமம - கேள 'எறிகல்லாது' எனற்பாலது கடைக்குறையாய 'எறிகல்லா' எனநின்றது.

396. சிவந்தஆம்பல்போல மணங்கமழும வாயையும் அழகிய மருங்குலையுமுடைய என்மகளின், சிவப்புமிக்க செம்பஞ்சிக குழம பின்ப பஞ்சினைகொண்டு ஊட்டிடினும 'மெல்ல ஊட்டு மெல்ல ஊட்டு' என்று கூசி, உளளுக்கு இழுத்துக கொள்ளும அடிகள இப்போது பரலையுடைய கானததைச சகிததனவோ ஐயோ! என்க

இது, மகட்போக்கிய செவிலித்தாய சொல்லியது, நற்றாய சொல்லியதுமாம அஃதாவது தலைமகனுடன தலைமகள இல்லவர் அறியாமல் இரவே தலைமகன ஊர்க்குப் போயவிட, அவள போன நெறி பாலை நிலமாதலால, அதன கொடுமையைக கூறி, இரங்கிச சொல்லியதாம இவவாறு நற்றாய சொல்லியதும ஆம. நற்றாய ஆவாள் தலைவியைப பெற்ற பின் கிழத்தி செவிலியாவாள் தாயின தோழி மருங்கிற்கு அடிகள கானம ஆற்றின கொல்லோ என்று கூட்டுக பஞ்சி ஊட்ட அடிகள அஞ்சும என்று அவற்றின மென்மையை விளக்கினார் "பஞ்செனச சிவக்கும மென்கால தேவி" என்றார் கலவியிற பெரியாரும மகளிர் வாயின் பரிமளத்திற்குச செவவாமபல மலரை உவமைகூறுவது வழக்கு, "ஆமபல் நாறும தேமபொதி கிளவி" என்றார பிறரும அன்றே, இரக்கம குறித்துவந்தது 'பையவெண' என்றபாலது பையென என்று தொக்கது நின்றது

397 ஓலைக்கணக்கு எழுதுவோர்களின ஒலி அடங்குகின்ற புல்லிய சிவந்த அந்திபபொழுதினகணணே இயற்கைப புணர்ச்சி புணர்ந்துபோன தலைமகனது பிரிவை நினைந்து, தன அழகிய முலை மேற்பூசி அழகு செய்கின்ற சந்தனத்தோடு மாலையையும வீசி யெறிந்து அழுதாள என்க

இது, தலைமகன் ஒருவழித தணந்து வந்தமையுணர்ந்த தோழி அவன பிரிவை ஆற்றாத தலைவியின நிலைமையைச சிறைப்புறமாகக கூறியது அஃதாவது தலைமகன தலைக்கமளைச சிலநாள நீங்கி மறுபடி அணைய, அவன் பிரிந்தகாலத்தில தலைவி வருந்தியதைத தலைமகன் கேட்குமாறறால் மறைந்து நின்று கூறியதாம. வன முலைமேற் றிமிர்ந்து கோலஞ்செய சாந்தோடு மாலை பரிந்திட்டு அழுதாள் என்று கூட்டுக அஃதாவது இயற்கை யழகுள்ள முலை மேலே திமிர்ந்ததனால செயற்கையழகும் செய்கிற சந்தனத்தோடு

மாலையையும் வீசி எறிந்து அழுதாள் என்க. நாயகன் இல்லாக் காலத்துச் செய்யற்கையதாகு செயலனவான சந்தனக்கோலமும் பூமாலையும் வேண்டாமென்று வீசினாள் என்பது குறிப்பு. இதனைத் தலைமகனை வரைவொடு புகுமாறு (வெளிப்பட மணந்து கொண்டு போமாறு) குறிப்பா லுணர்த்தினாள்.

398. பிரகாசம் பொருந்திய தொடியினையுடைய தோழி! மெல்லியல்புடைய மகளிரால் நடந்துசெல்ல ஒண்ணாத பாலைநிலத்துவழியில் காளைபோன்ற தலைவன் பின்னாலே நாளை நடந்து செல்ல மாட்டுவையோ என்று ஐயுறுகின்றாய், பெருங் குதிரையை ஒருவன் பெற்றானாகில், அப்போதே அதனை ஊரும் ஆற்றையும் அவன் கற்றுக்கொள்வான் என்க.

இஃது உடன்போக்கு நேர்ந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது. அஃதாவது தலைவனுடன் அவன் ஊருக்குப் போக உடன்பட்ட தலைமகள் தோழிக்கு ஐயம் நீங்கத் தன் கடைப்பிடியைச் சொல்லியதாம். இது, தலைமகளையும் தலைமகனையும் உடன்போக்குப் பொருத்துவித்த தோழி செவிலியுழைச்சென்று அறத்தொடு நின்றாளாக, அவ்வறத்தொடுநிலை மாட்சிமைப் பட்டமையால், தலைமகனை நோக்கி, நீ, "நீரில் ஆறிடைப்போய் வருந்துங்குறையினனோ?" என்றுரைக்கத் தலைவி அறத்தொடுநிலை மாட்சிமைப் பட்டதறியாது கூறியதாம். "வெளிப்பட்ட பின்னறையும் உரிய கிளவி" என்றதனால் இது பெறப்பட்டது (இறை களவு சூ 23).

காளை என்று தலைமகனைக் கூறினமையால் அவன் பாலைநிலத்துத் தலைவனாயினன். குதிரையைப் பெற்ற ஒருவன் அதனை ஊருமாற்றைக் கற்கவேண்டுவதுபோல நாயகனைப் பெற்ற யான் அவன் குறிப்பறிந்து ஒழுகும் கற்பொழுக்கத்தினை மேற்கொண்டேனென்று தான் பேரிற்கிழத்தி யாயினமை கூறினாளாம். கற்றான் என்பது துணிவு பற்றிவந்த காலவழுவமைதி.

399. பூவிலுறையும் பாவையாகிய திருமகள்போலும் என் மகள் நேற்று என் முலையின்கண்ணும் முத்துவடமும் தன் மெய் முழுவதும் பொருந்துமாறு தழுவிய குறிப்பினை யான் அது போழ்து சிறிதும் அறிந்தேனில்லை, அது கலைமானின் கூட்டங்கள

வேஙகையை வெருவி ஓடும நெறியிலே தலைமகனேடு செலல வேணடிசசெயத குறிபோலும எனக

இஃது உடனபோயின தலைமகளை நினைநது செவிலித தாய மனையினகண மயஙகியது நறறுய மயஙகியதூஉமாம அஃதாவது, தோழியால தலைமகள தலைமகனுடன போயினள எனறு சொலலககேடட செவிலி முனனுள நடநதனை நினைததுச சொலலியது நறறுய அவவிஷயததைச செவிலிசொலலக கேடடுச சொலலியதும ஆகும

மூததது, அதன வடததுககு ஆயினத ஆகுபெயா முழுமெயயும, மெயமுழுதும எனறு மாறுக இலககணம - குறிபபு 'கலைககணம வேஙகை வெரூஉம' எனறதன கருதது தலைமகனும அவனைச சாாநதாரும சானறோரை முனனிட்டு வரைவொடுபுகுதறகுத தலைமகள தநதையை அஞசினாாகள எனறவாறு

400. பொனபோலும சுணஙகினையுடைய கோஙகரும்பு போலும முலையினையுடை தோழீ! கண மூனறுடைய சிவபெருமானும, காககையும, படததினையுடைய பாமபும, எனனைபபெறற தாயும எனககுச செயத பிழை எனன? பொருளை ஈடடிபபிரிநத தலைவா சென்ற அஙநெடிய வழியே பிழைசெயதது எனக

இது, தலைமகன பொருளவயிற பிரிநதவிடதது ஆறறாளாய தலைமகள் தோழிககுச சொலலியது. ஈணடுப பொருள வயிற பிரிவு தலைமகன், 'யான பொருள ஈட்டிவநது, தலைமகளை வரையல' (மணஞசெயவல) எனறு பிரிவது

"பொனபோலும நிறததையுடைய கோஙகினது அரும்பை ஒததமுலையினை யுடையாய! காமனை உருவழிததப பினனுமவனை உளளுககிய மூனறு கண்ணையுடைய சிவனும, குயிலை வளாததுவிட்டகாககையும, மதியை அவுடைய விழுஙகிபபினபு உமிழ்ந்துவிட்ட படததையுடைய பாமபும, இநதுஙகப முலைதற்கு என்னை ஈனற தாயும எனககுபபிழை செய்ததென்னே? பொருளவயிற பிரிநது நமமுடைய தலைவா போயின நெறியனறோ பிழைசெய்ததது எனறவாறு" எனபது ஒரு பழைய உரை

பொன், அது போன்ற சுணங்கிற்கு ஆகுபெயர். பொன் போன்ற கோங்கு எனலுமாம். பாங்கனோ - தலைவர், அவர் சென்ற நெறி சேய்மைத்தாயிராமல் அணிமைத்தா யிருப்பின், இளவேனிற் பருவமாகிய இதனில் மன்மதனும் குயிலும் மதியும் அன்னையின் கொடுஞ்சொல்லும் எனக்குத் துன்பமா யிரா; அவை பெரிதும் விரும்பத் தக்கவாகவே காணப்படும்; எனக்குத் துன்பம் விளைத்துப் பிழைசெய்வது தலைவர்சென்ற நெடிய வழியே என்றாள் என்க. தலைமகன் சென்ற பாலை நிலம் தலைவியின் உள்ளத்து அகலாது நிற்றலின், அந்நிலத்து மலராகிய கோங்கினைத் தோழிமுலைக்கு உவமை கூறினாள். 'பொன்னின்ற' என்ற கருத்தும் தலைமகன் பொருள்வயிற் சென்றதனை உள்ளி என்க. 'தமிழ்கெழு மூவர் காக்கும், மொழிபெயர் தேஎத்த பன்மலை இறந்து' தலைவர் சென்றுழி என்று தலைவி வருந்துவது இயல்பாதலால், அந்நெடு நெறியே பிழை செய்ததென்றாள். அன்னை வேறுபட்ட தலைவியை ஐயுற்றுக் கொடுஞ்சொற் கூறுவது வழக்கென்பதனை, "உன்னங் கொள்கையொ டுளங்கரந் துறையும்,அன்னை சொல்லும் உய்கம்" என்று தோழியும் தலைவியும் கூறுமாற்றால் உணர்க. தலைமகன் அணுமைக்கண் நின்றபோது அன்னைசொல்லும் கொடுஞ்சொற்கள் தலைவிக்கும் தோழிக்கும் உள்ளத்துத் துன்பஞ் செய்யாது மகிழ்வூட்டு மென்பதனை "இவ்வந்து நின்றோற் கண்டனள் அன்னை, வல்லே என்முகம் நோக்கி, நல்லைமன்னென நகூஉப் பெயர்ந்தோளே!" (அகம் 248) என்பதனாலறிக. காக்கை குயிலை வளர்த்து விடலாவது, குயில் தான் இட்ட முட்டையினைக் காக்கையின் கூட்டிற் போகட்டுவிட, காக்கை அதனை வேற்று முட்டையென்று அறியாது, தனதென்றே நினைத்து அடைகாத்துக் குஞ்சுபொரித்து வளர்க்குமென்ப. இக்கருத்தினைக் கொண்டே குயில் 'பரபிருதம்' என்றும், காக்கை 'பரபிருத்' என்றும் வடமொழியாளரால் வழங்கப்பெறும். பரபிருதம், பிறரால் போஷிக்கப்படுவது, பரபிருத், பிறனைப் போஷிப்பது.

குறிப்புரை நிறைவேறியது



"கண்ணன் கழலிணை நண்ணு மனமுடையே
ரெண்ணுந் திருநாமந் திண்ணம் நாரணமே"

ஸ்ரீ:

# குறிப்பு அகராதி



எண் - பாட்டெண்

துன்னுதல - நெருங்குதல், 76, 167, 226 [327
தூங்கி - தங்கி, பொருந்தி, 121,
தூணி, 387
தூற்றாதே - தூற்றும், (ஏகாரம எதிர்மறை), 75
தெங்கு, 216
தெரியத்தெரியும் தெரிவிலார் - தெளிய ஆராயும் ஆராய்ச்சியிலலார், 168, 247
தெருண்டவறிவினவா - தெளிந்த அறிவினவர், 301
தெருமந்து - சுழன்று 151
தெள்ளிதின - தெளிவாக, 135
தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலத்தாற் கூறப்பட்டது கற்றானைத்தாருமாறு, 398, விரைவுபற்றி நிகழ்காலம் இறந்தகாலத்தாற் கூறப்பட்டது சென்றன சென்றன வாழ்நாள், 4 [50
தேற்றென - தெளிய, தோன்ற
தேங்கமழ் நாற்றம் இழந்தாஅங்கு - இனிமையாகக் கமழுகின்ற பரிமளத்தை இழந்தாற்போல 199
தேசு - ஒளி, 105
தேம் - ருசி, 199, 375
தேயவொரு மாசற்றின் - அழிவா ஒரு குற்றமுண்டானால் 151
தேறகிற்கும் பெற்றியரிது - தெளிந்தறியும் தன்மை கூடாது 352 [யும் சக்தி, 127
தேருந்துணைமை - ஆராய்ந்தறி
தேவரே தின்னினும் வேம்பு என்றவழி, உம்மை உயர்வு சிறப்பு, 112

தேறாரு - அறியாத 274
தேறாரொழுக்கம் - தீயொழுக்கம், 75
தேற்றும் புலவா - பிறாஜயங்களைத் தெளிவிக்கவல்ல புலவர் 318
தேனீ, 10 [121.
தொக்க - தொகுதியான 37,
தொடர்பு - நேசம் 113, 125, 138, 166
தொடி - வளையல், 111
தொடுத்தல - வளைத்தல், 5
தொண்டாயிரவா - ஒன்பதினாயிரம்போ, 284
தொலசிறப்பு - பழையசிறப்பு, 137, 195
தொல்லை - பழைமை, 101
தொல்லவருணம - பழைமையானஜாதி, 136
தொலைச்சுதல - அடித்துக்கொல்லுதல் 300 [52
தொலைவிலலா - முடிவுஇல்லா,
தொழுதகை வெள்ளாட்டி, 326
தொழுநோய் - குட்டநோய், 123
தொன்மை - பழைமை 216
தோட்கோப்பு - தோளிற்கோக்கப்படும் கட்டமுது போன்ற அறம், 20, 328 தோட்கொட்பு என்று பாடங்கொண்டு, தோளிற்கிடந்து சுழலும் கட்டமுது என்பது ஒருபழையவுரை.
தோட்ட - தோண்டிய, 215
தோட்புடைக்கொள்ளா - தோள் தட்டிக்கொண்டு, 312
தோணமரீஇ - தோளைப்புணர்ந்து, புணர்ந்து என்படி, 85
தோணியியக்குவான - தோணி ஓட்டுவான், 136
தோயவரும - முயங்கவரும் 387

ஸ்ரீ:

# செய்யுண் முதற்குறிப்பகராதி



எண் - பாட்டெண






MADRAS-1
சென்னை-1